நினைவுத் திரையில்...

## வீரர்களுக்கு வரவேற்பு

**ப**ர்மா யுத்தத்தில் நமது மதராஸி வீரர்கள் முன்னணியில் நிற்கிறார்கள் என்றும் அது குறித்து நாம் குதூகலம் அடைகிறோம் என்றும் சொல்லும்போது வேடிக்கையாகவோ வஞ்சப் புகழ்ச்சியாகவோ சூட்சம அர்த்தத்துடனோ சொல்லவில்லை. பட்டவர்த்தனமான உண்மையைப் பட்டவர்த்தனமாகத் தெரிவிக்கிறோம்.

இந்தியாவில் பஞ்சாபுக்கு அடுத்தபடியாகச் சென்னை மாகாணத்திலேதான் வீரமும் வீரர்களும் அதிகம் என்று இந்த யுத்தத்தின் காரணமாக ஏற்பட்டு விட்டது.

இந்தியா சுதந்திரம் பெறுவதற்காக இந்திய சைன்னியத்தைச் சேர்ந்தவர்களைத் தூஷிப்பதோ அவமதிப்பதோ பெரும் அநீதியாகும்; உலக சரித்திரத்திலேயே கேட்டிராத இராஜதந்திர மடமையாகும்.

(ஏப்ரல் 1, 1945 தலையங்கம்)

# கல்கி

பொருளடக்கம்

பராபவ, ஆடி 1 - ஜூலை 17



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

கப்பரைப் படகு!

பொருளாதாரக் கொந்தளிப்பு

நீங்கள் ஏன் இதை
இந்தியா முழுவ
தற்கும் விஸ்தரிக்
கக் கூடாது?

பஞ்சாபில்
ராஷ்டிரபதி ஆட்சி

Rak

தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்



மலர் 25 ● இதழ் 51



# சீட்டுக் கொடுத்துவிட வேண்டும்

ராஜாஜி

சத்திய தர்ம பராக்கிரமத்தால் வெற்றிபெற்ற காந்தியடிகள் இரண்டு விஷயங்களை வற்புறுத்தினர்.

ஒன்று, தேசம் விடுதலை பெற்றவுடன் காங்கிரஸ் அமைப்புக்கு அவர் சொன்னதாவது :

''காங்கிரஸ் எடுத்த விடுதலை முயற்சியெல்லாம் தேசத்திலுள்ள அனைவருக்குமாகச் செய்யப்பட்டதாகு மல்லவா? ஒரு கட்சிக்காக அல்ல. இதைப் பல தடவை நான் மக்களுக்குச் சொல்லி விளக்கியிருக்கிறேனல்லவா? அந்த வாக்கை உண்மையாக்க வேண்டும். ஆனபடியால் அரசியல் கூட்டமாக இருந்த இந்தக் காங்கிரஸைக் கலைத்து விடுங்கள். எல்லாக் கட்சிகளும் விடுதலையின் லாபத்தை அடைய வேண்டும்.'' இவ்வாறு சத்தியத்துக்குக் கட்டுப்பட்டு யோசனை அளித்தார். காங்கிரஸ் இதைப் பொருட்படுத்தவில்லை. வெற்றி பெற்ற செல்வாக்கினால் தேசத்தின் ஆட்சி பீடத்தைப் பிடித்துக் கொண்டது. பிடித்துக் கொண்டு சர்க்காருக்கு எதேஷ்டமான அதிகாரத்தைத் தந்து மக்களின் சுவாதீனத்தைப் பறித்து விட்டுச் சர்வாதிகாரத்தை ஏற்படுத்தி விட்டது.

சட்டங்கள் செய்து மக்களின் சுதந்திரத்தை அழித்துச் சர்க்காருக்குச் சர்வாதிகாரத்தைத் தந்து விட்டதன் பயன் என்ன? சர்வ ஆதிக்கமும் காங்கிரஸ் கட்சியினருக்கு வந்து சேர்ந்து விட்டது. காங்கிரஸ்காரர்கள் மேல் ஜாதியினராகி விட்டு நாட்டில் செல்வாக்கையும் அதிகாரத்தையும் செலுத்தி வருகிறார்கள். மக்கள் அடிமை நிலை அடைந்து விட்டார்கள்.

இதுமட்டுமல்ல. நிருவாகம் அழிந்து அழுகிப் போன நிலை அடைந்துவிட்டது. அதிகாரம் மிதமிஞ்சிப் போனதினால் நிருவாகம் கெட்டுப் போய்விட்டது. இது இயற்கை நியதி. வரம்பு கடந்த பலம் பொல்லாத விஷம். அது மனிதனையும் அரசியல் கட்சியையும் சர்க்காரையும் கெடுத்து விடும்.

காந்திஜி சொன்ன இரண்டாவது விஷயம் இதுவே. சர்க்காருக்கு அதிகாரம் வரம்புக்குள் அடங்கி நிற்க வேண்டும். எவ்வளவு குறைந்த அளவில் நிற்க முடியுமோ அந்த அளவில்தான் இருக்க வேண்டும். மக்களுக்கு சுய ஆதீனம் எவ்வளவு பெரிய அளவில் இருக்கலாமோ அவ்வளவுக்கு வளர்ந்து அவர்கள் பூரண சுவாதீனத்துடன் தத்தம் தொழிலில் ஈடுபட வேண்டும். அப்போதுதான் நாடு சுபிக்ஷம் அடையும். செல்வமும் சந்தோஷமும் பெருகும்.

இந்த யோசனைக்கு நேர்மாறாகக் காங்கிரஸ் நிருவாகம் பன்னிரண்டு ஆண்டுகளாக நடைபெற்று வருகிறது. செல்வம் வளரவில்லை. நாட்டில் சந்தோஷம் இல்லை.

சோஷலிஸம் என்ற ஒரு மாய மானைத் தேடி வேட்டையாடி நாட்டின் வியாபாரத்தைக் கெடுத்துவிட்டு விலைவாசிகளை மக்கள் தாங்க முடியாத அளவுக்கு ஏற்றிவிட்டார்கள். தேசத்தின் மீது சிந்தனைக்கு அடங்காத கடன் சுமையை ஏற்றிவிட்டார்கள். இதன் பயனாக வரிச்சுமை மக்களை அழுத்தி வருகிறது. மக்களுக்குச் சுதந்திரம் இல்லாத இந்தத் தேச சுதந்திரம் ஒரு சுகமும் சந்தோஷமும் தராது. இதை ஒழித்து சத்திய சுதந்திர நிலையை மக்கள் அடைய வேண்டும். இதற்கு வழி: ஒன்று, காங்கிரஸ் தன் கொள்கைகளையும் நிருவாக முறையையும் மாற்றிக் கொள்ள வேண்டும். அல்லது அதிகார பீடத்திலிருந்து காங்கிரஸை அப்புறப்படுத்த வேண்டும். காங்கிரஸ்காரர்கள் தங்கள் கொள்கைகளை மாற்றிக் கொள்வார்கள் என்று எதிர்பார்ப்பதில் பயனில்லை. அப்படிச் செய்யமாட்டார்கள். அதற்குப் பதில் இன்னும் பலகோடி கணக்கில் கடன் வாங்கித் தேசத்தைப் பாழ்படுத்தப் போகிறார்கள். நம்முடைய ரூபாய் பல்லாயிர வருஷங்களாக உத்தம நாணயமாக இருந்

தது. அது இப்போது அவமானப்பட்டுக் கிடக்கிறது. இது நம்முடைய நாட்டின் நிலைக்கு ஓர் அடையாளமாகும். வரும் தேர்தலில் காங்கிரஸை அதிகார பீடத்திலிருந்து விரட்டுவது மக்கள் கடமையாகும். 'இது வரை நீங்கள் நாட்டைக் கெடுத்தது போதும். வெளியேறுங்கள்' என்று சீட்டுக் கொடுத்து விட வேண்டும்.

'நான் விஞ்ஞான சோஷலிஸத்தில் நம்பிக்கை கொண்டு விட்டேன்' என்று முப்பது ஆண்டுகளுக்குமுன் ஒரு நாள் திரு (காலஞ்சென்ற) சர்க்கரைச் செட்டியார் ஒரு கூட்டத்தில் சொன்னார். அந்த விஞ்ஞான சோஷலிஸத்தையே தற்போது சர்க்கார் பீடத்திலுள்ள கூட்டத்தினர் தம் கொள்கையாக அமைத்துக் கொண்டு இமயமலை அளவில் கடன் வாங்கியும் அபரிமிதமாக வரி வசூலித்தும் மிதமிஞ்சிப் பணம் அச்சிட்டும் பல ஆண்டுகள் நிருவாகம் நடத்தி நாட்டைச் சுகமற்ற பாலைவனமாக்கியிருக்கிறார்கள். "விஞ்ஞான சோஷலிஸம்" என்றால் மத்திய ஆட்சியில், கட்சியின் பலத்தினால் அதிகாரம் வகித்து வரும் ஞான சூன்யங்களான சில நபர்கள் நாட்டின் தொழில், நாட்டின் வியாபாரம் முதலிய சகல விவகாரங்களுக்கும் இட்டம் போடுவதும் அவர்களுடைய அனுமதிச் சீட்டுகளின் பேரில் தொழில்கள் நடைபெற்று வருவதுமாகும். அவர்கள் எல்லா வியாபாரங்களிலும் தொழில்களிலும் இப்படிச் செய், அப்படிச் செய் என்று உத்தரவிடுவார்கள். ஒரு ஹோட்டலை நிருவாகம் செய்வதில் எவ்வளவோ ஊழல். ஒரு கடையின் லாபநஷ்டங்களைப் பொறுப்பெடுத்து நடத்துவதில் எவ்வளவோ ஊழல். அப்படியிருக்க, பாரத நாட்டின் சகல வியாபாரத்தையும் மொத்தமாகச் சர்க்காரே நடத்துவதில் எவ்வளவு ஊழல், எவ்வளவு நஷ்டம், எவ்வளவு சிக்கல், எவ்வளவு மோசம், எவ்வளவு நாசம் என்பதை எடுத்துக் காட்ட வேண்டியதில்லை. நம் ரூபாயின் கதியே அதையெல்லாம் எடுத்துக் காட்டுகிறது. விஞ்ஞான சோஷலிஸம் என்றால் ஆட்சியைக் கவர்ந்த கட்சிக்கு சர்வாதிகாரம் என்பதே. அந்தச் சர்வாதிகாரத்தை நீதிப்படி நடத்த ஆண்டவன் அவர்களுக்குத் திறமையும் சீலமும் கொடுக்கவில்லையே. அவர்களை அப்புறப்படுத்தும் ஞானமும் தைரியமும் பகவான் மக்களுக்கு என்று கொடுப்பாரோ? அந்த அறிவும் பயமின்மையும் பெற்று காங்கிரஸை அகற்றிய பின், மக்கள் வாழ்க்கைச் சுவாதீனம் பெறுவார்கள். பெற்றபின் மறுபடியும் அரசாங்க முறையை மாற்றி, மக்களுக்கு உச்ச அளவில் சுதந்திரமும் சர்க்காருக்குத் தாழ்ந்த அளவில் அதிகாரமுமாக ஏற்படுத்துவோமாக!

# இலங்கை நேயர்களுக்கு ஒரு வார்த்தை

ரூபாயின் வெளிநாட்டு மதிப்பைப் பாரத அரசாங்கம் குறைத்ததிலிருந்து இந்தியப் பத்திரிகைகளுக்கு, குறிப்பாக, கல்கி போன்ற வார இதழ்களுக்கு, எதிர்பாராத நெருக்கடி தோன்றியுள்ளது. பத்திரிகைத் தொழிலுக்கு இன்றியமையாத பத்திரிகைக் காகிதத்தைப் பெரும்பாலும் வெளிநாடுகளிலிருந்தே தருவிக்க வேண்டிய நிலையில் நாம் இருக்கிறோம். இதன் விலை அயல்நாட்டு நாணயங்களின் மதிப்புக்கு ஏற்ப இப்போது ஐம்பத்தேழரை சதவிகிதம் உயர்ந்து விட்டது. இதை எதிர்பார்த்து இதன் கடுமையை ஓரளவுக்குக் குறைக்க, இறக்குமதி வரிகளையும் ரத்து செய்திருக்கிறது பாரத அரசாங்கம். எனினும் இறக்குமதி வரி ரத்தால் ஏற்படும் சாதகத்தைவிட, விலை ஏற்றத்தினால் ஏற்படும் பாதகமே அதிகமாக இருக்கிறது. பத்திரிகைக் காகிதத்தைப் போலவே, அச்சகத்துக்குத் தேவையான இதர உபகரணங்களும் இப்படியே விலை உயர்ந்து விட்டன. இவற்றினால் கல்கி தாங்க வேண்டிய சுமையின் பளு கடுமையாக உயர்ந்து விட்டது. இந்த நெருக்கடியைச் சமாளிக்கப் பல துறைகளில் அதற்குத் தகுந்த அளவிலும் வகையிலும் நடவடிக்கைகள் மேற்கொள்ளவேண்டியிருக்கின்றன. இவற்றில் ஒன்றுதான் இலங்கைத் தீவில் கல்கியின் விற்பனை விலையை மாற்றி அமைத்திருப்பது. இலங்கை நேயர்களுக்கு இலங்கை நாணயப்படி 35 சதம் (தபால் செலவு நீங்கலாக) என்ற விலையில் கல்கி இனி கிடைக்கும். இதுவரையில் 35 இந்திய பைசாவும் 35 இலங்கை சதமும் ஒரே மதிப்புப் பெற்றிருந்ததால், இதைப் பிரித்துச் சொல்ல வேண்டிய அவசியமிருக்கவில்லை. இப்போது இந்திய ரூபாயின் மதிப்புக் குறைப்பினால், இந்த வித்தியாசத்தைத் தெளிவுபடுத்த வேண்டியிருக்கிறது. இதனால் இலங்கை வாசகர்களுக்கு எவ்வித கஷ்டமும் இல்லை. அவர்களுக்குக் கல்கியின் விலை முன்போலவே 35 சதம் என்ற விகிதத்திலேயே தான் இருக்கும் என்பதைத் தெளிவாகச் சொல்ல விரும்புகிறோம். இது வரையில் இலங்கை நேயர்கள் கல்கிக்கு அவரவர் வாழ்பகுதியில் இலங்கைச் சதம் கணக்கில் என்ன விலை கொடுத்து வாங்கி வந்தார்களோ, அதே விலைக்கு இனியும் கிடைத்து வரும். அவர்களுக்கு விலை ஏற்றம் இல்லை என்பதை விளக்கிச் சொல்கிறோம்.

இலங்கைத் தீவில் விற்பனையாகும் ஒவ்வொரு கல்கி பிரதியின் அடக்க விலையும் ரூபாயின் வெளிநாட்டு மதிப்புக் குறைப்பினால் இப்போது ஐம்பத்தேழரை சதவீதம் உயர்ந்து விட்டது எனினும் நமது இலங்கை வாசகர்களுக்கு முந்திய விலையில் எவ்வித கூடுதலும் இப்போது செய்யவில்லை. கல்கியின் விலையைத் தபால் செலவு நீங்கலாக 35 சதம் என்று வைத்திருக்கிறோம். இலங்கை வாசகர்கள் இந்த நிலைமையை உணர்ந்து, கல்கிக்கு அளித்து வரும் பேராதரவைத் தொடர்ந்து அளித்து வர வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறோம்.

# என்ன சேதி?

அந்தஸ்து உயர்கிறது
சட்ட நிபுணரின் அந்நிய விஜயம்
இரக்கமற்ற உத்தரவு
சுசேதாவின் எச்சரிக்கை

"தி. மு. க. ஒரு தேசியக் கட்சி. அது பொதுமக்களின் அமோக ஆதரவு பெற எல்லா விதத்திலும் தகுதி வாய்ந்தது!"

இப்படிக் கூறியிருப்பவர் யாரோ ஒரு தி.மு.க. உறுப்பினரோ அல்லது சுதந்திரக் கட்சி அன்பரோ அல்ல. பாரதீய ஜனசங்கக் கட்சியின் தலைவரான பேராசிரியர் பாலராஜ் மாதோக் அவர்கள்தான். வடநாட்டில், தில்லியில் மிகப் பிரபலமான தலைவர் ஆவார். அவர் வாயால் இப்படிப் பாராட்டுக் கிடைப்பது எளிதல்ல. தி. மு. க. அகில இந்திய அரசியலில் மகத்தான பணியாற்றவேண்டியுள்ளது என்பதையே மாதோக் நினைவுறுத்துகிறார். திரு சி. என். அண்ணாதுரை அவர்கள் ராஜ்ய சபைக்குச் சென்றதிலிருந்து வடநாடு அவருடைய பேச்சுக்களை உன்னிப்பாகக் கவனித்து வருகின்றது என்பது யாவரும் அறிந்ததே. இப்போது மாதோக் விடுத்துள்ள கோரிக்கையைத் தி. மு. க. வினரும் பொது மக்களும் சரியாகப் புரிந்து கொண்டு நடந்து கொள்ள வேண்டும்.

சர்வ தேசச் சட்டத்தில் நிபுணராகிய பேராசிரியர் கே. ஆர். ஆர். சாஸ்திரி அவர்களை அறிஞருலகு நன்ருக அறியும். சிக்கலான சர்வதேச நீதி முறைகளின் நுணுக்கங்களை அறிந்த இவர் வடநாட்டில் சர்வகலாசாலைப் பேராசிரியராகப் பல்லாண்டு பணிபுரிந்தவர். ஆன்மிகத் துறையிலும் ஈடுபாடு கொண்டு பல சமய நூல்களை அளித்திருக்கிறார். இம்மாதம் 8-ந் தேதி ஸ்ரீ சாஸ்திரி ஹாலந்திலுள்ள ஹேகுக்குப் பயணமாகிருர். அங்குள்ள சமாதான மாளிகையில், "இந்து சமயமும் சர்வ தேசச் சட்டமும்" என்பது பற்றி விசேஷப் பேருரைகள் நிகழ்த்துவார். அதன்பின் டர்பனிலுள்ள காந்தி—தாகூர் டிரஸ்டின் அழைப்புக் கிணங்கித் தென் ஆப்பிரிக்காவுக்குச் செல்வார். அங்கு மூன்று மாதங்கள் சுற்றுப் பயணம் செய்து கலாசாரத் தொடர்புள்ள விஷயங்களைப் பற்றிச் சொற்பொழிவுகள் ஆற்றுவார். அவரது பயணம் வெற்றிகரமாக நிகழ வேண்டுமென வாழ்த்துகிறோம்.



ஸ்ரீ கே. ஆர். ஆர். சாஸ்திரி

அரசாங்கப் பள்ளிக் கூடங்களிலிருந்தும், ஸ்தல ஸ்தாபன பள்ளிக்கூடங்களிலிருந்தும், ஆசிரியர்கள் தனியார் நடத்தும் பள்ளிகளுக்குச் சென்று விடுகிறார்களாம். இதனால் சர்க்காருக்கும், ஸ்தலஸ்தாபனங்களுக்கும் புதிய ஆசிரியர்களைத் தேடிக் கண்டுபிடிப்பது சிரமமாகி விடுகிறதாம். இதைத் தடுப்பதற்காக வேண்டி, இவ்வாசிரியர்கள் ஸ்தல ஸ்தாபனங்களிலும் சர்க்கார் பள்ளிகளிலும் வேலை செய்த ஆண்டுகளைச் சம்பள உயர்வுக்குக் கணக்கில் எடுத்துக் கொள்ளப்பட மாட்டாது என்றும், குறைந்தபட்ச சம்பளமே கொடுக்கப்படும் என்றும் ஏப்ரல் 13ம் தேதி விட்ட உத்தரவு கூறுகிறது. இது மிகவும் கடுமையான தண்டனை. ஏழை ஆசிரியர்களை இப்படி வதைக்கலாகாது. ஆசிரியர்கள் சர்க்கார் பள்ளிகளையும் ஸ்தல ஸ்தாபன பள்ளிகளையும் விட்டு, அதிகமாக வேலை வாங்கும் தனியார் பள்ளிகளுக்கு ஏன் போகிறார்கள் என்ற காரணத்தைத் தீர விசாரித்துத் தக்க நடவடிக்கை எடுக்க வேண்டுமேயல்லாது, இரக்கமற்ற முறையில் தண்டனை விதிக்கலாகாது !

உத்தரப் பிரதேச முதன்மந்திரி சுசேதா கிருபளானி அவர்கள், நிர்வாக இயந்திரத்தைக் கட்சியின் நோக்கங்களுக்காகப் பயன் செய்து கொள்ள முயலும் காங்கிரஸ் தலைவர்களைக் கடுமையாகக் கண்டித்ததாகவும், இதை அநுமதிக்கக் கூடாது என்று எச்சரித்ததாகவும் செய்தி வெளியாகியுள்ளது. கண்டனமும், எச்சரிக்கையும் நல்லனவாகவே தோன்றுகின்றன.

மேற்சொன்ன அதிகார துஷ்பிரயோகம் கடந்த பல ஆண்டுகளாகவே தடையில்லாமல் நடந்து வந்திருக்கிறது. மிகவும் உயர்ந்த ஸ்தானத்தில் உள்ளவர்களும் இதைச் செய்திருக்கின்றனர். இப்போது நேர்மை உள்ள ஒரு பெண்மணி இதை ஒளிவின்றிச் சொல்வதே குற்றம் எவ்வளவு பெரிது என்பதை நிரூபிக்கிறது. நிர்வாகத்தில் பயங்கர ஊழல் முறைகள் மலிந்து விட்டன என்பது பகிரங்கமாகி யிருக்கிறது. ரூபாய் மதிப்பைக் குறைத்த தன் மூலம் பொருளாதாரத்தை ஊழலாக்கியதை உலகறியப் பகிரங்கப்படுத்தியிருக்கிறார்கள். இந்தச் சமயத்திலேயே, அரசியல் ஊழலும் வெளிப்படுத்தப் பட்டுள்ளது.

★

தேசம் புனருத்தாரணம் அடைய வேண்டுமானால் தருமத்தைப் புனருத்தாரணம் செய்ய வேண்டும். தருமம் மறைந்து போயிற்று. சத்தியமும் மறைந்து போயிற்று. இதற்கு என்ன செய்ய வேண்டும் என்பது கேள்வி. சிறு வயதில்தான் மக்களையும் மக்களின் சுபாவங்களையும் திருத்தியமைக்க முடியும். பள்ளிகளில் தருமம் புகட்ட வேண்டும். எழுத்தும் எண்ணும் போதாது. எல்லாச் சமயங்களும் தருமத்தைப் போதிக்கின்றன. அந்தந்த சமயத்தைச் சேர்ந்த குழந்தைகளுக்கு அந்த அந்த சமயத்தின் வழி தருமத்தை உடலின் நரம்புகளில் பாய்ச்சி ரத்தத்துடன் கலந்து ஆன்மசக்தி உண்டாக்க வேண்டும். இது ஆகாத காரியமல்ல. கலபமாகப் பல்லாயிரம் ஆண்டுகளாகச் செய்யப்பட்டு வந்ததேயாகும். இதற்கு விரோதமான நடவடிக்கைகள் அரசாங்கத்தாலும் மற்றவர்களாலும் செய்யப்படாமலிருக்க வேண்டும். அதுவே போதும். குழந்தைகள் பேசக் கற்றுக் கொள்வது போலும், நடக்கக் கற்றுக் கொள்வது போலும் தருமத்தையும் நற்குண நற்சீலத்தையும் அடைவார்கள்.

★

வெள்ளம் பொங்கி வருவதையும், நிலம் சரிந்து விழுவதையும் முன்கூட்டியே கணக்கிட்டு ஜோஸ்யம் சொல்வது சாத்தியமல்ல. காங்கிரஸின் பண பலம் மகத்தானது. அதோடு அரசாட்சிப் பதவியைக் கட்சி நலனுக்காகத் துஷ்பிரயோகம் செய்வதையும் அக்கட்சி முக்கியமாக நம்பிக்கொண்டிருக்கிறது. இந்நிலையில் தேர்தலுக்குப் பின் மத்திய ஆட்சி மாறுமா? அப்படி நான் எதிர்பார்த்தால் அதற்குக் காரணம் கூற முடியுமா? — என்று அந்நிய நாட்டு நிருபர்கள் கேட்கிறார்கள்.



உண்மையே சொல்வது என்ற எனது 'மூட' நம்பிக்கையை நான் இன்னும் கைவிடவில்லை. சந்தேகமில்லாமல் நான் ஓர் அரசியல்வாதிதான்—ஒரு குறிப்பிட்ட கட்சிக்குப் பிரசாரம் செய்பவன்தான். இருந்த போதிலும் நான் இவர்களிடம் உண்மையையே கூறுகிறேன். இன்றைய ஆள்கிற கட்சியை நான் எதிர்ப்பதற்கான காரணங்களும், சுதந்திரக் கட்சியை எதிர்ப்பில் வைத்திருப்பதற்கான காரணங்களுமே நிருபர்களின் கேள்விக்குப் பதிலாகும். தேர்தல் பிரசாரத்துக்காக ஆள்கிற கட்சி வைத்துள்ள பணத்துக்கு எல்லையே இல்லை. சட்டப்படியும், சட்டத்துக்கு மீறியும் அதனிடம் பணம் குவிந்திருக்கிறது. பெர்மிட்—லைசென்ஸ் அரசாட்சியின் மூலம் வியாபாரிகளுக்குத் தரும் சலுகைகளுக்காக அவர்களிடமிருந்து ஒரு வரி போலவே பணம் வசூலிக்கப்படுகிறது. இதோடு, பொருளாதாரக் கட்டுப்பாடுகள் ஒரு சுருக்குக் கயிறுபோல் மக்களைப் பயமுறுத்தி வருகின்றன. சர்க்கார் சர்வாதிகாரக் கொள்கை ஆளும் கட்சியையே பதவியில் இருத்தி வைக்க உதவுகிறது. மக்களின் அறியாமையும் ஆள்கிற கட்சிக்குப் பக்கபலமாக இருக்கிறது. மறைமுக வரிகளும், பண வீக்கமும், விலைவாசி உயர்வும் மக்களை மிகவும் துன்புறுத்திய போதிலும் இவற்றுக்குக் காரணம் காங்கிரஸே என்பதை அவர்கள் காணவில்லை. 'காங்கிரஸ் தான் ஏழைகளின் கட்சி' என்ற பொய்க் கதையை மக்கள் நம்புகிறார்கள். இவை எல்லாவற்றுக்கும் மேலாக ஆகர்ஷண சக்தியுள்ள பெண் பிரதமர் பிரசாரம் செய்கிறார். பரஸ்பரம் சுயநலனைப் பேணிக் கொள்ளும் ஒரு தகுதியற்ற கூட்டத்துக்காக அவர் பிரசாரம் செய்கிறார். எனவே, எதிர்ப்புப் போராட்டம் மிகவும் கடினமானதுதான்.

சுமார் இருபது ஆண்டுகள் ஆட்சி நடத்திவிட்ட காங்கிரஸ் தேசப் பொருளாதாரத்தை நாசம் செய்துவிட்டது. நிறைய 'ஸ்டெர்லிங்' கையிருப்பு இருந்த நாட்டைப் பெரிய கடனாளியாக்கி, நமது நாணயத்தின் மதிப்பைக் குறைத்து விட்டது. இருந்த போதிலும் இன்னும் ஒரு தவணை அது ஆட்சிப் பதவியைக் கோரும் துணிச்சல் பெற்றிருக்கிறது.

அடிவானத்தில் ஒரு வெள்ளத்தின் எழுச்சியை, நிலச் சரிவின் அறிகுறியைப் பார்க்கிறேன். இது மாயத் தோற்றமில்லை. பண பலமும், அதிகார துஷ்பிரயோகமும் இறுதியில் ஓர் அடி பெற்றுத் தோல்வி காண்பது சாத்தியமே. ஜனநாயகம் காப்பாற்றப்படுவது சாத்தியமே.

★

அமெரிக்க ஜனாதிபதி ஜான்ஸன் அவர்கள் ஹனோய் மீது குண்டு போடுவதை நான் ஆதரிப்பது பற்றி ஸ்ரீமதி இந்திராகாந்தி அவர்களிடம் நிருபர் அபிப்பிராயம் கேட்டார். அமெரிக்காவின் அணு ஆயுத சோதனையை மிகவும் தீவிரமாக நான் ஆட்சேபித்து வந்ததும் இப்போது ஜான்ஸனை ஆதரிப்பதும் ஒன்றுக்கொன்று முரணாக இருப்பதாக ஸ்ரீமதி இந்திராகாந்தி அம்மை பதில் சொல்லியிருக்கிறார்.

உலகத்தின் சூழலை விஷமயமாக்கும் அணு ஆயுத சோதனைகளும், சம்பிரதாய யுத்தத்தில் ஓர் அங்கமாகிவிட்ட குண்டுகளை விமான மூலம் எதிரியின் போர்த்தளங்களில் வீசுவதும் முற்றிலும் சம்பந்தமற்ற நடவடிக்கைகள். இதைப் பற்றி ஸ்ரீமதி இந்திரா குழம்பிப் போயிருப்பதாகத் தோன்றுகிறது. எதிர்பாராத சமயத்தில் நிருபர் கேட்ட கேள்விக்கு அவசரப்பட்டு அவர் பதில் சொல்லிவிட்டார். அணு ஆயுத சோதனையை எதிர்த்து நான் நடத்தும் இயக்கத்துக்கும், சாமானிய

குண்டுத் தாக்குதலை ஆதரிப்பதற்கும் எவ்விதத் தொடர்பும் இல்லை.

1962ல் சீனர்கள் இந்தியாவில் ஆக்கிரமிப்புச் செய்த போது, 'அவர்கள் நம் நாட்டில் புகுந்தபின் தடுத்து நிறுத்துவதோடு நின்று விடாமல், அவர்களுடைய ஆயுத தளங்களின் மீதே நாம் குண்டு போட வேண்டும்' என்று நான் ஸ்ரீ ஜவாஹர்லால் அவர்களுக்கு யோசனை கூறியிருந்தேன்.

நான் எப்போதுமே அமெரிக்கா செய்வதை யெல்லாம் ஆதரிக்கத்தான் வேண்டும், அல்லது அமெரிக்கா செய்வதை எப்போதுமே நான் ஆட்சேபிக்கத்தான் வேண்டும் என்று யாரும் எதிர்பார்க்கவில்லை என்றே நம்புகிறேன். இப்படி எதிர்பார்த்தாலொழிய என் போக்கில் முரண்பாடு தோன்றாது.

பலவந்த முறையில் ஆயுதம் தரித்து ஆக்கிரமிப்புச் செய்கிறவர்களை எக்காலும் எதிர்த்தேயாக வேண்டும் என்று நான் உறுதியாக நம்புகிறேன். எந்த யுத்தமும் அணு ஆயுதப் போரில் கொண்டு போய்விடக் கூடும் என்ற பயத்தில் தேசங்கள் சக்தி இழந்து நிற்கக் கூடாது என்றும், ஆபத்துக்கு முகம் கொடுத்து நிற்க வேண்டும் என்றும் கருதுகிறேன். கியூபாவின் மீது நடவடிக்கை எடுத்த போது காலஞ்சென்ற கென்னடி அவர்கள் இத்தகைய தீரத்தைத்தான் காட்டினார். அதுவே நமக்குப் பாடம்.

வியட்நாமில் அமெரிக்கா எடுக்கும் நடவடிக்கைகளில் தெற்காசியா முழுவதற்கும் ஈடுபாடு உண்டு. இதற்கு நாம் உதவாவிடினும் குந்தகம் செய்யாமலாவது இருக்கவேண்டும்.

★

இந்தியாவில் உள்நாட்டு விவகாரங்கள் யாவும் நிலைதடுமாறியிருக்கும் ஒரு சமயத்தில் இங்குள்ள கம்யூனிஸ்ட் கட்சியின் இடதுசாரியினர் கலகம் செய்வதாகவும், அவர்களுக்குச் சீனம் ஆயுத உதவி புரிவதாகவும், அவற்றை அனுப்புவதற்காகவே சாலைகளையும் பாலங்களையும் சீனா சமைப்பதாகவும் வைத்துக் கொள்வோம். இதை நம் மக்களால் சகித்துக்கொள்ள முடியுமா? இப்போது வியட்நாமில் இதே போலத்தான் நடக்கிறது. இதை நிறுத்தவே அமெரிக்கா முயன்று வருகிறது.

★

காங்கிரஸ் கட்சிக்குள் உள்ள பெரும் பிளவுகள், எதிர்க்கட்சிகளுக்கு ஓர் உண்மையை வெகு அழுத்தமாக உணர்த்துகின்றன. காங்கிரஸில் பிளவுகள் இருப்பதை எவ்விதத் தயக்கமுமின்றி எல்லாச் செய்திப் பத்திரிகைகளும் விமரிசிக்கின்றன. இவ்வளவு பேதங்கள் இருந்த போதிலும் காங்கிரஸ் ஒருமுகமாகச் செயலாற்ற முடியும் எனில், எதிர்க்கட்சிகளும் தங்களுக்குள் வித்தியாசங்கள் இருப்பினும் ஒன்று சேர்ந்து இயங்க முடியும் என்பது தெளிவாகிறதல்லவா? காங்கிரஸ் கட்சியானது சர்க்கார் சர்வாதிபத்தியத்தைக் கைக்கொண்டு தன் அதிகாரத்தையே நிலைப்படுத்திக் கொள்ள விரும்புகிறது. இந்தப் போக்கிலிருந்து ஜனநாயகத்தைக் காக்க வேண்டும் என்ற இலட்சியம் ஒன்றே எல்லா எதிர்க்கட்சிகளையும் ஒன்றுகூட்டுவதற்குப் போதுமானது. நாட்டின் மூச்சைப் பிடிக்கும் பிடியிலிருந்து அதை விடுவித்து, நல்ல நிருவாகத்தைத் தந்து, மக்களின் ஆன்ம சுதந்திரத்தைக் காத்துப் பலப்படுத்தும் பணியில் அனைவரும் ஒன்றுபடுவதில் சிரமம் எதுவும் இல்லை. காங்கிரஸிடம் எவ்வளவு ஊழல்கள் இருந்த போதிலும் அக்கட்சி எவ்வளவோ தோல்விகள் அடைந்த போதிலும் மீண்டும் அதுவே அதிகாரத்தைப் பெற அவை தடையாகா என்று காங்கிரஸ்காரர்கள் நம்ப முடியுமாயின், எதிர்க்கட்சிகளும் அதைவிட உயர்ந்த இலட்சியத்தை அடைவதற்குத் தங்களது கருத்து வித்தியாசங்கள் தடையாகா என்று நம்பிக்கை பெறலாம்.

எத்தனை லஞ்சம் கொடுத்தாலும், எவ்வளவு விதத்தில் நெரித்தாலும் காங்கிரஸுக்கு வாக்களிப்பதில்லை என்று பிரஜைகள் உறுதியாக முடிவு செய்தால் ஆள்கிற கட்சியின் பண பலத்தையும், அதிகார சக்தியையும் மதிப்பற்றதாக்கி விடலாம். ரூபாயின் மதிப்பைக் குறைத்தது போல், காங்கிரஸின் பண பலம், அதிகார சக்தி இவற்றின் மதிப்பையும் குறைத்து விடலாம். இறுதியில் மக்களிடமேதான் அதிகாரம் உள்ளது. அவ்வாறிருக்க மக்கள் பயப்படுவது மாயை. பிரிட்டனும், பிரான்சும், ருஷியாவும், அமெரிக்காவும் தங்கள் மனப்பான்மையிலும் இலட்சியத்திலும் பிரத்தியேக நலனிலும் மாறுபட்டிருந்த போதிலும் ஒன்று சேர்ந்து ஹிட்லரின் தீயசக்தியை வெற்றிகரமாக முறியடித்து உலகத்தைக் காத்ததை நினைவு கொள்வோம்.

★

பம்பாயில் மே மாதக் கடைசியில் நடைபெற்ற அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக்குச் செல்லக்கூடிய பிரதிநிதிகளுக்காக ரயில்வேக்காரர்கள் பல 'ஸ்லீப்பர்'களை வெகு முன்னதாகவே ஒதுக்கி வைத்து, மற்றப் பிரயாணிகளுக்குப் படுக்கும் வசதி செய்து தராததாக டாக்டர் பாபராலி முகமதாலி சயித் எழுதுகிறார். அ. இ. கா. க. வின் மூலம் தான் 'ரிஸர்வ்' செய்து கொள்ள வேண்டும் என்று ஒரு பிரயாணியிடம் பம்பாயில் டிக்கெட் குமாஸ்தா கூறினாராம். இதையே மேலதிகாரியும் உறுதிப்படுத்தினாராம். பிரயாணி செல்ல விரும்பிய மே 21ந் தேதியன்று காங்கிரஸ் பிரதிநிதி யாரும் பயணப்படவில்லை என்று அ. இ. கா. க. தகவல் தந்த பிறகே அவருக்குப் படுக்கும் வசதி டிக்கெட் தரப்பட்டதாம். எனினும், அவர் ரயிலடிக்குச் சென்ற போது தாம் செல்ல வேண்டிய ரயிலில் படுக்கும் வசதிப் பெட்டியே இல்லாததைக் கண்டார். அதில் ஏதோ கெடுதல் ஏற்பட்டு விட்டதாகச் சொல்லப்பட்டது. ஆயினும் உண்மையில் அ. இ. கா. க. பிரதிநிதிகளுக்கென்றே எல்லாப் படுக்கும் வசதிப் பெட்டிகளும் ஒதுக்கப்பட்டிருப்பதாக அதிகாரிகள் அவரிடம் தனிப்படத் தெரிவித்தார்களாம். கடைசியில் அவர் பம்பாயிலிருந்து கல்கத்தாவுக்குச் சாதாரண மூன்றும் வகுப்புப் பெட்டியிலேயே செல்ல நேரிட்டது.

# உலகப் புகழ்பெற்ற நாட்டிங்ஹாம் லேஸ் உங்கள் இல்லத்திற்கு என்றுமில்லாப் புத்தெழிலைத் தருகிறது!

**லீலா லேஸ்**

உங்கள் இல்லம் பரபரப்பூட்டும் புதுமைத் தோற்றம் பெற லீலா லேஸ் (பூந்தையல் இழை) உபயோகியுங்கள். அசல் நாட்டிங்ஹாம் லேஸ் தற்போது பாரதத்திலேயே தயாரிக்கப்படுகிறது. பலவித டிஸைன்களிலும், வர்ணங்களிலும் வரும் லீலா லேஸ் அழகிய திரைச் சீலைகளுக்கும், மெத்தையாசன உறைகளுக்கும் ஏற்றது. தவிர, மேஜை விரிப்புகள் மற்றும் தலையணை உறைகள் ஆகியவற்றுக்கும் லீலா லேஸ் உபயோகித்து, மிகக் குறைந்த செலவில் உங்கள் வீட்டுக்கு லேஸ் சுகத்தை அளியுங்கள். சிறந்த கடைகளில் விரைவில் லீலா லேஸைக் காணுங்கள். உங்கள் வீடும் இத்தனை எழிலுடன் மிளிர வசதியிருப்பதை உணரலாம்.



உள் அலங்காரம் : லீலா பாக்

பிரமிப்பூட்டும் பொலிவு **லீலா லேஸ்**

லீலா ஸ்காட்டிஷ் லேஸ் ப்ரைவேட் லிமிடெட்,
அந்தேரி - குர்லா ரோட், பம்பாய்-59-AS

ஏஜெண்டுகள் : மாயா டெக்ஸ்டைல் ஹால், 69, ரட்டன் பஜார், சென்னை-3.
தி க்ரீன் ஷாப், கமர்ஷியல் ஸ்ட்ரீட், பெங்களூர்.

G.26 TAM

# செய்திப் படங்கள்

1. ஆவடியில் தயாரான டாங்கி வெள்ளோட்டம் விடப்படுகிறது.







2. ஆவடி டாங்கி உற்பத்திச் சாலையைப் பாரதப் பிரதமர் இந்திராகாந்தி தொடங்கி வைத்தார். டாங்கி மாதிரியொன்றை ஜெனரல் மானேஜர் திரு சோத்தி அவருக்கு வழங்குகிறார்.

3. திருச்சிராப்பள்ளியில் ஸ்ரீமதி இந்திராகாந்தி சிறு ஆயுதத் தொழிற்சாலையை ஆரம்பித்து வைக்கிறார். ராணுவ மந்திரி திரு சவான் வைபவத்துக்குத் தலைமை வகித்தார்.

4. சென்னை மவுண்ட்ரோட்டிலுள்ள சர் முகம்மத் உஸ்மான் ஹாலில் காலஞ்சென்ற அப்துல் ஹமீத்கானின் உருவப் படத்தை ராஜாஜி திறந்து வைத்து, அவரது சேவைகளைப் பாராட்டினார்.



ரா. கணபதி

எழுதும்

# ஹர ஹர சங்கர

ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி
காமகோடி சங்கராசாரிய
ஸ்வாமிகளின்
திவ்விய சரிதம்

ஆகஸ்ட் 7ந் தேதி
இதழில் ஆரம்பமாகிறது




# இளமையிற் கல்

சமையல் பயிலும் சிறுமி, அவளே வருங்காலக் குடும்பத் தலைவி. கற்றுக்கொடுங்கள் ஒரு நாள். எவ்வளவு விரைவில் கற்றுக்கொடுக்கிறீர்களோ அவ்வளவுக்கு அவ்வளவு மேல்.

உங்கள் குழந்தைகளுக்கு நீங்கள் இப்போதே கற்றுக்கொடுக்க வேண்டிய மற்றொரு பாடம், பற்களையும் ஈறுகளையும் ஒழுங்கு தவறாமல் பராமரிப்பதே. பற்சிதைவும் ஈறு நோய்களும் வராமல் பாதுகாத்த உங்கள் உதவிக்காகப் பிற்காலத்திலே நன்றி செலுத்துவார்கள் அவர்கள்.

போர்ஹான்ஸ் பற்பசைகொண்டு பற்களையும் ஈறுகளையும் பாதுகாத்துக்கொள்ள இன்றே பழக்குங்கள் உங்கள் செல்வங்களை. அது ஒரு பல் வைத்தியரின் தயாரிப்பாகும்; ஈறுகளின் நலனுக்காக டாக்டர் போர்ஹான்ஸ் தயாரித்த விசேஷத் துவர் மருந்துகள் அடங்கிய பற்பசை உலகில் இதுவொன்றே. தவறாமல் உபயோகித்துவந்தால் பளிச்சென்ற வெண் பற்களையும் பாங்கான உறுதிவாய்ந்த ஈறுகளையும் பெற்று விளங்குவது திண்ணம்.

"CARE OF THE TEETH AND GUMS" என்ற சிறிய வண்ணப் புத்தகத்தை இலவசமாகப் பெற, தபால் செலவுக்காக 10 பைசா தபால் வில்லைகளை இணைத்து எழுதவும்: மானேர்ஸ் டென்ட்டல் அட்வைசரி பியூரோ, தபால் பை நம்பர் 10031, பம்பாய்.




K.6

## COUPON

Please send me a copy of the booklet
"CARE OF THE TEETH AND GUMS"

*Name* ..............................................................

*Address* ..............................................................

..............................................................

# சிவனருட் செல்வர்

ஓவியம் —

வீடு, நிலம், புலம், பொன், பொருள், பட்டம், பதவி, துணி மணி முதலியவைகளை யெல்லாம் இழப்பதுவே நலம் பயக்கும் என்கிருர் அருணகிரிநாதர்.

'எல்லாம் அற என்னையிழந்த நலம்
சொல்லாய் முருகா, சுரபூபதியே!'

எனக்கு உரியன எல்லாவற்றையும் இழந்து விடுவது மட்டுமன்று; என்னையும் இழந்துவிட வேண்டும்' என்கிருர். நமது மனநிலைக்கும் அதற்கும் எத்தனை தூரம்? வெடித்துப் போன பட்டாசு துண்டுகளைப் பொறுக்கி வைத்துச் சிறு குழந்தைகள் மகிழ்வதுபோல் நாம் இருக்கிறேம்.

"யாதனின் யாதனின் நீங்ியான் நோதல்
அதனின் அதனின் இலன்"

என்கிருர் திருவள்ளுவர்.

திருமுருக கிருபானந்தவாரியார்



எல்லாம் இழந்த இடமே நலம் என்கிறார். இது எப்படி என்று தோன்றும். நமக்கு நன்கு தெரிந்த ஒன்றின் மூலம் இதனை உணர்ந்து கொள்ளலாம். எல்லாவற்றையும் மறந்து உறங்கும்போது நமக்கு ஆறுதல் கிடைப்பதைக் கண்கூடாக அறிகின்றோம். எத்தனையோ வேதனைகட்கு இடையே நின்று வெயிலிடைப் புழுவைப் போல் துடிக்கின்ற ஒருவன் சற்றுக் கண்ணயர்ந்து உறங்கியபோது ஆறுதல் பெறுகிறான்.

ஆனால், உறக்கத்தில் தன்னையும் மறந்து தலைவனையும் மறந்து விடுகின்றான். அதனால் அந்த நலன் உயர்ந்ததன்று.

இனி, எல்லாவற்றையும் மறந்து, தன்னுள் தலைவனைக் கண்டு அசைவற்று நிற்கும்போது எல்லையற்ற இன்பம் உண்டாகும். அங்கே இரவும் பகலும் இல்லை; யானும் எனதும் இல்லை. அகமும் புறமும் இல்லை. ஒரே இன்ப மயம்.

''யானாகிய என்னை விழுங்கி வெறுந்
தானாய் நிலை நின்றது தற்பரமே''

என்கிற அநுபவம் அங்கே நிகழும்.

நாம் புறத்தேயுள்ள பொருட்கள், அகத்தேயுள்ள எண்ணங்கள், கருவி, கரணங்கள் ஆகிய அனைத்தையும் இழந்து அவன் திருவடியில் ஒப்புவித்துவிட்டு, ஒப்புவித்தோம் என்ற எண்ணத்தையும் துறந்து, திருவடிக்கே அன்பு செய்து வழிபாடு ஒன்றே நமது நலம் என்று கருதி அதில் நிலைத்து நிற்க வேண்டும்.

திருநீலகண்ட நாயனார் அங்ஙனம் நின்றார். அதனால் அவரைப் பற்றித் தெய்வச் சேக்கிழார், "நாதனார் **கழல்கள் வாழ்த்தி வழிபடும் நலத்தின் மிக்கார்**" என்று கூறுகின்றார். வழிபாடே நலம் என்கிறார். வழிபாட்டில் எல்லாம் கரைந்து விடுகின்றன. உப்புப் பொம்மை தண்ணீரில் கரைவது போல், நான், எனது என்பவை ஆண்டவன் அருள் வெள்ளத்தில் கரைந்து விட வேண்டும்.

திருநீலகண்டர் பொய் வாழ்க்கை ஒழித்து மெய் வாழ்க்கை வாழ்பவர். அரனடியார்களுக்குப் பணிவிடை செய்பவர். அஞ்செழுத்தும் கண்டிகையும் வெண்ணீறும் அழியாச் செல்வமாகக் கொண்டவர். இவ்வாறெல்லாம் இருப்பினும் குடும்பம் நடத்த வேண்டாமா?



**அளவிலா மரபிலை வாழ்க்கை**
**மட்கலம் அமுதுக் காக்கி**
**வளரிளம் திங்கட் கண்ணி**
**மன்றுளார் அடியார்க் கென்றும்**
**உளமகிழ் சிறப்பின் மல்க**
**ஓடளித் தொழுகும் நாளில்**
**இளமைமீ தூர இன்பத்**
**துறையினில் எளியர் ஆனார்**

மண் பாண்டம் செய்வது அவரது குலத்தொழிலாதலால் அதனைச் செய்து வந்தார். செய்த பாண்டங்களை விற்று வாழ்க்கை நடத்தினார். சிவனடியார்களுக்கு ஓடு செய்து கொடுப்பார். தொழிலிலும் ஒரு தொண்டு. இளமை வளர்ந்து, அவர் ஒரு மங்கையைத் திருமணம் செய்து கொண்டு இல்லறம் நடத்தி வந்தார். அந்த அம்மையார் திருநீலகண்டரை விடப் பன்மடங்கு சிறப்புடையவர்; அவர் அருந்ததிக் கற்பின் மிக்கார்.

நரை திரை மூப்பு தேவர்கட்கும் உண்டு. அவை நீங்க வேண்டுமென்றால் சுவாமியிடம் முறையிட வேண்டும். இவற்றையெல்லாம் நீக்கும் வைத்தீசுவரர் அவர்தான். இதனை அறியாத தேவர்கள் அமிர்தம் வேண்டிப் பாற்கடலைக் கடைந்தார்கள். அவர்கள் எதிர்பார்த்தது அமிர்தம். கிடைத்ததோ ஆலகால விஷம். விடத்தைக் கண்டதும் தேவர்கள் ஓடிப் போய்ச் சிவபெருமானிடம் முறையிட்டார்கள். அந்த விடத்தை உண்டு கண்டத்தில் நிறுத்திக் கொண்டார் சிவபெருமான். அதனால் அவர் நீலகண்டர். அதையே எப்போதும் போற்றித் 'திருநீலகண்டம்' என்று சொல்லிக் கொண்டிருந்தார் நாயனார். அதனால் அவரைத் 'திருநீலகண்டர்' என்று உலகம் கூறிற்று.

ஒரு நாள் திருநீலகண்டர் நடராஜரை வணங்கி விட்டுத் திரும்பி வந்து கொண்டிருந்தார். வழியில் பொது மகள் ஒருத்தி எச்சில் பாத்திரம் கழுவி ஊற்றினாள். எச்சில் நீர் சுவாமிகள் மீது விழுந்தது. அதைக் கண்ட பொது மகள் அவரை உள்ளே அழைத்துச் சென்று, சந்தனம் பூசி, நல்லாடை அணிவித்து அனுப்பினாள். இப்படிக் கதை வளர்கிறது, உபமன்னியு பக்த விலாசத்தில். இதன் பின் அவரது மனைவி அவரை ஒதுக்கினாள் என்கிறது. குற்றம் செய்

# சக்தி வாய்ந்த இந்த பிரஞ்சு ஔஷதம் திரும்பவும் உங்களுக்குக் கிடைக்கிறது.




ரத்தத்தைச் சுத்தப்படுத்துகிறது. தொல்லைதரும் நோய்களிலிருந்து நிவாரணம் அளிக்கிறது.

காலில் ஏற்படும் ரணங்கள், மற்றும் சொறி சிரங்கு, படை, முகப்பருக்கள், கட்டிகள், கொப்பளங்கள், சீழ்ப் புண்கள் போன்ற அநேக சரும வியாதிகளுக்கு மூலகாரணம் அசுத்தமான ரத்தம்தான்.

இந்த விதமான நோய்கள் பலவற்றிற்கு மேல்பூச்சாகக் களிம்பையோ மருந்தையோ தடவுவதால் பிரயோசனம் இல்லை. சில நாட்களில் வியாதி திரும்பவும் வந்து விடுகிறது. சிலர் ஒவ்வொரு வருஷமும் சொறி சிரங்கு, கட்டிகள், முகப்பருக்கள், கால் ரணங்கள், சீழ்ப் புண்கள் போன்ற நோய்களால் வருந்துகிறார்கள். இந்த வியாதிகளின் அடிப்படைக் காரணம் ரத்தத்தில் இருக்கிறது.

ரிச்லேஸ் பிளட் பியூரிஃபையர் (RICHELET'S BLOOD PURIFIER) சாப்பிட்டுப் பாருங்கள். ஆச்சரியகரமான அதன் சக்தியைக் கண்டு நீங்கள் அதிசயப்படுவீர்கள். சருமத்தின் ஆழமான பகுதிகளையும் அது சுத்தப்படுத்துகிறது. ரத்தம் சுத்தமாகிறது. விருத்தியாகிறது. மேல் புண்களும், படைகளும் மறைந்து சருமம் தனது இயற்கையான, ஆரோக்கியமான பளபளப்பைப் பெறுகிறது.

**ரிச்லேஸ் லாக்ஸட்டிவையும் (RICHELET'S LAXATIVE) கல்லாஸ் ஆயின்ட்மென்டையும் (GALLA'S OINTMENT) உபயோகியுங்கள்.**

# ரீச்லேஸ்

## பிளட் பியூரிஃபையர்

எல்லா மருந்துக் கடைகளிலும், ஸ்டோர்களிலும் கிடைக்கும்.
விவரங்கள் அறிவிக்கும் இலவச அறிவிப்புக்கு (FOLDER) எழுதுங்கள்.

இந்தியா வெங்கும் ஏஜண்டுகள் தேவை. விண்ணப்பிக்கவும்:

இந்தியாவில் ஸோல் டிஸ்ட்ரிபியூட்டர்கள்:
மஹாஸ்வரி ஜெனரல் ஸ்டோர்ஸ்,
19/35, பெரிய கடை வீதி, கோயமுத்தூர்

EP.HC-1

யாத திருநீலகண்டரைக் குற்றம் செய்ததாக மனைவி நினைத்து வெறுத்திருந்தால் அவரது கற்பு நெறி என்னவாகும்? சேக்கிழார் தமது வரலாற்றில் இப்படிக் கூறவில்லை.

இன்பத் துறையில் எளியரான திருநீலகண்டரின் உள்ளம் உண்மையாகவே ஒரே யொரு முறை தவறி விட்டது என்று கூறுகிறது பெரிய புராணம். அதனால் பரத்தைபால் அணைந்தார். அவர் பரத்தைபால் இன்பம் துய்த்த செய்தி அவரது மனைவியாருக்குத் தெரிந்து விட்டது. உடனே அந்த நாரீமணி முகத்தைத் தொங்கப் போட்டுக் கொண்டு வாழைப் பூ மாதிரி இருக்கவில்லை; பாத்திரங்களை உருட்டி உடைக்கவில்லை. கணவனுரைத் தாழ்ந்து வணங்கித் திருநீறு பெற்றுக் கொண்டார். முன்பு போலவே பணிவிடைகளையெல்லாம் செய்தார். ஆனல் மற்ெருரு பெண்ணைத் தீண்டிய கணவரை இவர் தீண்டவில்லை. தம்மை அவர் தீண்டுவதையும் அநுமதிக்கவில்லை. 'மனையின் வாழ்க்கை ஏனைய எல்லாம் செய்தே உடனுறவு இசையாரானர்' என்பது பாடல்.

திருநீலகண்டர் தம் மனைவியாரை அழைத்து. ''நான் தவறு செய்து விட்டேன். பொறுக்க வேண்டும்'' என்றார். அதற்கு அந்த அம்மையார் ஒன்றும் சொல்லவில்லை. அதனல் தம் மனைவி 'ஊடல் தீர்ந்தாள்' என்று கருதி அவரை அணுகினர் திருநீலகண்டர். ''எம்மைத் தீண்டுவீராயின் திருநீலகண்டம்'' என்றார் அம்மையார். ஆண்டவன் மீது ஆணையாகத் தம்மைத் தீண்டக் கூடாது என்று கூறிவிட்டார். இச் சொற்களைக் கேட்ட நாயனர் திடுக்கிட்டார். அவருக்கு வயது இருபத்தைந்து. காளைப் பருவம்.

**ஆதியார் நீல கண்டத்**
**தளவுதாம் கொண்ட ஆர்வம்**
**பேதியா ஆணை கேட்ட**
**பெரியவர் பெயர்ந்து நீங்கி**
**ஏதிலார் போல நோக்கி**
**''எம்மைஎன் றதனல் மற்றை**
**மாதரார் தமையும் என்றன்**
**மனத்தினும் தீண்டேன்'' என்றார்**

திருநீலகண்டர் வயதில் பெரியவரல்லர்; செல்வத்தில் பெரியவரல்லர்; ஒழுக்கத்தில் பெரியவர். எனவே, மனைவியும் வேண்டாம்; பிற மாதரும் தமக்கு வேண்டாம் என்று தாமும் சூள் உரைத்தார்.

அம்மையாரின் ஆணை கேட்டதும் திருநீல கண்டர் உள்ளம் பெயர்ந்தது; உடல் நீங்கியது. இதுவரை மனைவியாகப் பார்த்தார். இப்போது அயலார் என்று எண்ணுகிறார். இந்த மாதிரி வரலாற்று உலகில் வேறு எங்கும் இருக்க முடியாது. ஸ்ரீ ராமசந்திர மூர்த்தி பிற பெண்களைத் தீண்டவில்லை. ஆனல் திருநீலகண்டரோ தம் மனைவியையே அதன் பின் மனத்தாலும் தீண்டவில்லை.

**கற்புறு மனைவி யாரும்**
**கணவனுர்க் கான எல்லாம்**
**பொற்புற மெய்யுறுமல்**
**பொருந்துவ போற்றிச் செய்ய**
**இற்புறம் பொழியாத் தங்கண்**
**இருவரும் வேறு வைகி**
**அற்புறு புணர்ச்சி இன்மை**
**அயலறியாமை வாழ்ந்தார்.**

நாயனரின் மனைவியார் கணவருக்குச் செய்ய வேண்டிய பணிவிடைகளையெல்லாம் தவறாது செய்தார். இருவரிடத்தும் அன்பு வளர்ந்தது. அவர்கள் வாழ்ந்த வீடு சிறு வீடுதான். அந்த வீட்டின் ஓர் ஓரத்தில் திருநீலகண்டரும், மற்றோரிடத்தில் அம்மையாரும் படுத்து உறங்கினர்கள். மகளாயிருந்தாலும், தாயாக இருந்தாலும் தனித்து ஆடவன் அங்கு இருக்கக் கூடாது என்று 'ஆசாரக் கோவை' கூறுகின்றது. இவரோ மனைவி அருகினில் படுத்திருக்க, ஐம்புலன்களையும் அடக்கினர். அது மட்டு மன்று, அதைவிட மேலான ஒன்றைச் செய்தார். ''அற்புறு-புணர்ச்சி யின்மை அயலறியாமை வாழ்ந்தார்.'' தாமும் தம் மனைவியும் திருமேனி தீண்டாமல் வாழ்கின்ற செய்தியை மனங் கலந்து உறவாடும் நண்பர்களுக்கும் மற்றவர்களுக்கும் சொல்லவில்லையாம். கணவனுக்கும் மனைவிக்கும் மனஸ்தாபம் என்று பக்கத்து வீட்டுக்கும் தெரியக் கூடாது என்று எண்ணினராம்.

## 10. வயோதிக சிவனடியார் வந்தார்

இவ்வாறு பல ஆண்டுகள் ஓடின. முதுமையும் அவர்களைத் தேடி வந்தது.

**இளமையின் மிக்கு ளார்கள்**
**இருவரும் அறிய நின்ற**
**அளவில்சீர் ஆணை போற்றி**
**ஆண்டுகள் பலவுஞ் செல்ல**
வளமலி இளமை நீங்கி
வடிவுறு மூப்பு வந்து
தளர்வொடு சாய்ந்தும் அன்பும்
தம்பிரான் திறந்துச் சாயார்.

சேக்கிழார் பெருமான் ஒரு புரட்சி செய்கிறார். 'வடிவுறு மூப்பு வந்து'

என்று கூறுகின்றார். மூப்பு என்றால் முதுமை. அழகு இளமையில் இருக்கும்; முதுமையில் இராது. ஆனால் சேக்கிழாரோ, மூப்பில் அழகு என்கிறார். அவருடைய தமிழ் தெய்வத் தமிழ். அவரது வாக்கு ஒரு நாளும் பொய்க்காது. சந்தேக மிருந்தால் வாழைக் காயையும் வாழைப் பழத்தையும் பாருங்கள். காய் அழகாக இருக்கிறதா? பழம் அழகாக இருக்கின்றதா? மாங்காய் அழகா? மாம்பழம் அழகா? ஆகவே, பழம் என்றால் அழகா யிருக்கும். கிழம் என்றால் எப்படி இருக்கும்? காந்தியடிகள் சிறு வயதிலிருந்து கிழவராக உள்ளது வரையில் உள்ள புகைப்படங்களைப் பாருங்கள். அவருக்கு இளமையில் அழகு இல்லை. முதுமையில் பொக்கை வாயராக இருக்கும்போது அழகா யிருக்கிறார்.



சில 'கிழங்கள்' அழகாயில்லை என்றால் நன்றாகப் பழுக்கவில்லை; வெம்பல் என்று பொருள்.

திருநீலகண்டர் இவ்வாறாக வாழ்ந்த போது, அவரது திறத்தை உலகுக்கு உணர்த்த விரும்பிய இறைவர் புது மாதிரியாக ஓர் அனுக்கிரகம் புரிந்தார். தாமும் மனைவியும் தீண்டுவதில்லை என்பது யாருக்கும் தெரியக் கூடாது என்று எண்ணினார் திருநீலகண்டர். அதனை உலகுக்கு அறிவிக்கவென்றே வயோதிக சிவயோகி போல் வந்தார் சுவாமி.

**நெடுஞ்சடை கரந்திட**
**நெறித்த பம்பையும்**
**விடுங்கதிர் முறுவல் வெண்**
**ணிலவும் மேம்பட**

**இடும்பலிப் பாத்திரம்**
**ஏந்து கையராய்**
**நடந்து வேட்கோவர் தம்**
**மனையில் நண்ணினார்.**

வந்தவர் திருநீலகண்டர் வீட்டுக்குச் சென்றார். திருநீறு தரித்த திருமுகமும், புன்முறுவலும், ஓடு ஏந்திய திருக்கரமும் உடையவராய் வந்த அவரைச் சிந்தையன்புடன் வரவேற்றார் திருநீலகண்டர். "சுவாமி! அடியேன் தங்களுக்கு யாது செய்ய வேண்டும்?" என்று பயபக்தியுடன் வினவினார். "அன்பனே! இதோ பார். என் கையில் உள்ள இத் திருவோட்டினை உன்னிடம் கொடுத்து வைக்கலாம் என்று எண்ணி வந்தேன். இதைப் பத்திரமாக வைத்திருந்து நான் வந்து கேட்கும்போது கொடுப்பாய். இந்த ஓட்டினைச் சாமானியமாகக் கருத வேண்டாம். இதற்குச் சமானமே இல்லை. இந்தத் திருவோட்டில் எதனை வைத்தாலும் அது தூய்மையானதாகி விடும். இந்த ஓடு பொன்னினும் மணியினும் போற்றத் தக்கது. மிகவும் பெருமையுடைய இந்த ஓட்டினை மிகவும் அருமையாக வைத்திருந்து பின்னர் நான் வந்து கேட்கும்போது தருவாய்" என்று கூறித் திருவோட்டினை நாயனாரிடம் தந்தார் எம்பெருமான்.

"உத்தரவு! தாங்கள் சொல்லிய வண்ணமே செய்வேன்" என்று கூறிய திருநீலகண்ட நாயனார் அச்சிவயோகியைத் தொழுது ஓட்டினை வாங்கித் தமது வீட்டில் ஒருபுறம் காவல் உள்ள இடத்தில் வைத்தார். வயோதிகரும் விடைபெற்றுப் பொன்னம்பலம் அடைந்தார்.

(தொடரும்)

# உங்கள் கூந்தலின் உண்மையான அழகை வெளிப்படுத்த காஸ்கேட் பெர்பியூம்டு காஸ்டர் ஹேர் ஆயில்



பளபளப்புடனும், அடர்த்தியுடன் இளமைத் துடிப்போடும் விளங்கும் நீண்ட கூந்தலின் ரகசியம் தினந்தோறும் குளிக்குமுன் மயிர்க் கால்களிலும், கேசத்திலும் கால்கேட் காஸ்டர் ஹேர் ஆயில் தேய்த்துக்கொள்வதே என்பதை லக்ஷக்கணக்கான குடும்பத்தினர் அறிந்திருக்கின்றனர். அதன் உன்னதமான நறுமணத்தினால் நீங்கள் பரவசமடைவீர்கள்... கால்கேட் காஸ்டர் ஹேர் ஆயில் உங்கள் கேச வளர்ச்சிக்கு உதவுவதைக் கண்டு நீங்களே ஆனந்தமடைவீர்கள்!

**அதன் பரவசமூட்டும் நறுமணத்தை உங்கள் குடும்பத்தினர் விரும்புவர்!**










எகானமி சைஸ் வாங்கி பணத்தை மிச்சப்படுத்துங்கள்

# கால்கேட்

## பெர்பியூம்டு காஸ்டர் ஹேர் ஆயில்

### இப்பொழுது

### கால்கேட் பெர்பியூம்டு கோகோனட் ஹேர் ஆயில்

உங்கள் கூந்தலுக்கு அழகும் நறுமணமும் சேர்க்க ரோஸ், லவண்டர், மல்லிகை ஆகிய 3 வசீகரிக்கும் சுகந்தங்களில் கிடைக்கிறது.



©CHO G-6.TAM.

## – கண்டுபிடியுங்கள் –

உலகிலேயே மிக உயரமான

(1) கட்டிடம்..............................

(2) ரயில்வே பாலம்......................

(3) அணை......................................

(4) ஏரி...........................................

(5) நீர் வீழ்ச்சி.................................

(விடை அடுத்த பக்கம்)

## பேஷ்!.......சட்!

'நெக்ஸ்ட்!'

கல்லூரி பிரின்ஸிபாலின் குரல் உள்ளிருந்து வந்தது.

தகப்பனுரோடு பையன் உள்ளே நுழைந்தான். தகப்பனுர் கையில் மூன்று சிபாரிசுக் கடிதங்கள் இருந்தன. அந்தக் கடிதங்களை நீட்டினுர் பிரின்ஸிபாலிடம். அவற்றை வாங்கிக் கொண்டே, 'இவற்றை யெல்லாம் படித்துப் பார்க்க இங்கே யாருக்கு ஸார் பொழுதிருக்கிறது? சிபாரிசுக் கடிதங்கள்தானே?' என்றுர் பிரின்ஸிபால்.

'ஆமாம். ஒன்று போனர் கொடுத்தது, இன்னென்று டிரஸ்டி கொடுத்தது, மற்றென்று.........'

'.....மந்திரி கொடுத்தது.... இருக்கட்டும், ஐயா! - உன் மார்க்குகள் என்ன அப்பா?' என்றுர் பிரின்ஸிபால் பையனைப் பார்த்து.

'இருநூற்று முப்பத்து நாலு!'

'இத்தனை குறைவான மார்க்குகள் வாங்கியிருக்கிறுயே! உன்னை எப்படி அப்பா, சேர்த்துக் கொள்ளுகிறது ?'

'அதற்காகத்தானே ஸார், இத்தனை சிபாரிசுக் கடிதங்கள்?' -- பதில் சொன்னது தகப்பனுர்தான்.

'சேர்ந்திருக்கிற பையன்கள் நானூறும் ஐந்நூறும் வாங்கியிருக்கிறுர்கள். அவர்களோடு சேர்ந்து உட்கார உனக்கு வெட்கமாயிராது?' என்று பிரின்ஸிபால் மீண்டும் பையனையே பார்த்துக் கேட்டார்.

பையன் தலை குனிந்தான்.

'இத்தனை சிபாரிசோடு வந்திருக்கிறுய். உன்னைச் சேர்த்துக் கொள்ளாவிட்டால் பொல்லாப்பு. நீ நன்றுகப் படித்து நிறைய மார்க்கு வாங்குவதாக வாக்குறுதி அளித்தால் சேர்த்துக் கொள்ளுகிறேன்!' என்றுர் பிரின்ஸிபால்.

பையனுக்கு இடம் கிடைத்துவிடும் என்ற மகிழ்ச்சியில், 'பேஷ்! நான் உறுதியளிக்கிறேன்!' என்று குரல் வந்தது.

'சட்! உங்கள் உறுதி யாருக்கு வேண்டும்? நான் பையனைக் கேட்கிறேன், உங்களைச் சேர்த்துக்கொண்டால் அல்லவா?' என்றுரே பார்க்கலாம் பிரின்ஸிபால். - குறும்பன்

## இப்படித்தான்!

சோவியத் பிரதிநிதிகள் சபையில் ஸ்டாலின் சர்வாதிகாரத்தைப் பற்றி குருசேவ் பேசிக் கொண்டிருந்தார். அப்போது அவரிடம் ஒரு கேள்வித் தாள் வந்தது. அதில், "ஸ்டாலின் உயிரோடு இருந்தபோது நீர் ஏன் அதைக் கண்டித்திருக்கக் கூடாது?" என்று ஒரு கேள்வி இருந்தது.

உடனே குருசேவ் அந்தக் கேள்வித் தாளைக் கோபாவேசத்துடன் கசக்கி, "யார், யார் இந்தக் கேள்வியைக் கேட்டது?" என்று கர்ஜித்தார்.

கேள்வி கேட்ட அன்பர் அச்சமுற்று வாய் திறக்கவில்லை. அப்போது குருசேவ் புன் சிரிப்புடன் அமைதியாகச் சொன்னுர்: "இந்தக் கேள்வி கேட்ட நண்பர் நிலையில்தான் நான் அன்றிருந்தேன்!"

ஆதாரம்: 'மேதைகள் தமாஷ்' - புனிதவேந்தன்

## நானும் ஓர் அரசனே!

சிங்கத்திடம் அஞ்சாதவர் நமது சிம்மக் கவிஞர் பாரதியார். பாரதி ஒரு முறை திருவனந்தபுரம் சென்றிருந்தபோது மிருகக் காட்சி சாலைக்குப் போயிருந்தார். எல்லா மிருகங்களையும் கையினுல் தொட்டுப் பார்க்கத் தொடங்கினுர். அருகிலிருந்தவர் தடுத்தும் பாரதியார் கேட்கவில்லை. சிங்கத்தையும் புலியையும் மட்டுமாவது தொட வேண்டாம் என்று காவற்காரனே சொன்னுன்.

"நீ மிருக அரசன், நான் ஒரு கவியரசன். உன்னைக் காண வந்திருக்கிறேன். நீ உன் கர்ஜனை மூலம் அன்பினை எனக்கு அறிவி" என்று சொல்லிச் சிங்கத்தைத் தடவிக் கொடுத்தார். உடனே சிங்கம் கர்ஜனை செய்து தன் ஆர்வத்தைத் தெரிவித்தது.

-குத்தாலம் - வீ. சம்பந்தம்




## தாதியும் குழந்தையும்

அமெரிக்காவில் டென்னஸி சர்வகலாசாலையில், திரு கந்தசாமி நுண் கிருமிகளைப் பற்றிய ஆராய்ச்சிப் பட்டம் பெறுவதற்காகப் படித்து வருகிறார். இவர் தம் மனைவியார் விஜயலக்ஷ்மியோடு அமெரிக்காவில் வாழ்ந்து வருகிறார். ஏழு மாதங்களே ஆன தம் அருமைக் குழந்தை ஸ்ரீதரை பம்பாயில் உள்ள தம் மாமனார் இல்லத்துக்கு அனுப்பி வைத்தால், ஆராய்ச்சித் துறையில் அதிகமாகக் கவனம் செலுத்தலாம் என்று கருதினார் திரு கந்தசாமி. இது சம்பந்தமாக (TWA') ட்வா விமான ஸ்தாபனத்தை அணுகினார்கள். தாய் குழந்தையோடு செல்லாது போனாலும் பரவாயில்லை; குழந்தைப் பராமரிப்புத் துறையில் நன்கு பயிற்சி பெற்ற தாதி ஒருத்தியுடன் குழந்தையை அனுப்புகிறோம் என்று அந்த ஸ்தாபனம் ஒப்புக் கொண்டது. தாதியும் குழந்தையும் அமெரிக்காவிலிருந்து பம்பாய்க்குச் சௌகரியமாக வந்து சேர்ந்தனர். பம்பாய் விமான நிலயத்தில் தாதியும் குழந்தையும் வந்திறங்கிய போது எடுத்த படம் இது. இத்தனை சேவையும், தாதியை உடன் அனுப்பியது உள்பட அரை டிக்கெட் கட்டணத்துக்குக் கிடைத்திருக்கிறது என்றால் வியப்பில்லையா?

## அரசியல் நிபுணர்!

"உண்மையான அரசியல் நிபுணனுக்கும் போலியானவனுக்கும் உள்ள பெரும் வேற்றுமைகள் இவை: ஒருவன் எதிர்காலத்தை ஊடுருவிப் பார்க்கிறான், மற்றவன் நிகழ்காலத்தை மட்டும் பார்க்கிறான்; ஒருவன் நிலையான தத்துவங்களை ஆதாரமாகக் கொண்டு, முடிவற்ற காலத்துக்காக உழைக்கிறான், மற்றவன் சமயோசிதத் தந்திரத்தைக் கையாண்டு, இன்று ஒரு நாளைக்காக வேலை செய்கிறான்."

- பர்க்

நகவல்: ராஜலட்சுமி





## வீட்டுக் குறிப்புகள்

டீ நல்ல வாசனையுடன் இருக்க, உலர்ந்த ஆரஞ்சு சக்கையைக் கொதிக்கும் டீத் தண்ணீரில் போடவும்.

புளி கெடாமல் புதிதாக இருக்கச் சிறிதளவு உப்புத் தண்ணீரை அதன் மீது தெளித்து வெய்யிலில் சிறிது காய வைக்கவும்.

கற்பூரம் கரையாமல் இருக்க அதோடு ஒரு தேக்கரண்டி மிளகைப் போட்டு வைக்கவும்.

பழரசங்கள் நீண்ட நாட்கள் கெடாமலிருக்க அதனுடன் சிறிது இஞ்சிச் சாற்றைக் கலக்கவும்.

தலையில் உள்ள பேனைப் போக்க, உபயோகிக்கும் தலையணையின் மீது துளசி இலையைப் போட்டு ஒரு துவாலையால் நன்றாகத் தேய்க்கவும். இப்படித் தொடர்ந்து இரண்டு அல்லது மூன்று நாட்கள் செய்தால் பேன்கள் ஒழிந்து விடும்.

ஆதாரம்: 'பெமினா' - தகவல்: கெ. சம்பத்குமார்

(முதல் பக்கத்து விறுக்களுக்கு விடைகள்)

1. எம்பெயர் ஸ்டேட் கட்டிடம். நியூயார்க்கில் உள்ளது. உயரம்: 1250 அடிகள்.
2. பிரான்ஸிலுள்ள "பேடில் வியாடக்ட்" உயரம் 434 அடிகள்.
3. அமெரிக்காவில் உள்ள "ரொண்ட் டிக்ஸ் சென்ஸ்" உயரம்: 921 அடிகள்.
4. பொலிவியாவிலுள்ள "டிடிகாகா" ஏரி. கடல் மட்டத்திலிருந்து 12500 அடி உயரத்திலுள்ளது.
5. வெனிசுலாவிலுள்ள "ஏங்கெல்" நீர்வீழ்ச்சி. உயரம் 3212 அடிகள்.

இவை எல்லாவற்றையும் விட உயரமானதும் எட்டிப் பிடிக்க முடியாததுமான ஒன்றுண்டு; அது என்ன? (விடை: 42ம் பக்கம்)

# இது லஞ்சம் என்றால் குற்றமில்லை

"தித்திக்கும் பேச்சு சொல்லி பை நிறைய புஸ்தகங்கள் திணித்து என்னை பள்ளிக் கூடம் அனுப்பப் பார்க்கறேளா? முடியாது. முதலில், கை நிறைய நியூட்ரீன் மிட்டாய்களை கொடுங்கள்!"

"நியூட்ரீன் டாபிகளும், மிட்டாய்களும் எவ்வளவு ருசியானவை என்று எனக்கு தெரியும். அவைகள் நல்ல தேக பலம் என்று அப்பா சொல்லுவார். நியூட்ரீன் கொடுக்க உங்க அப்பாவிடம் சொல்லு."




மிட்டாய்கள், டாபிகள்

நியூட்ரீன் கன்பெக்ஷனரி கம்பெனி (பிரைவேட்) லிட்.
சித்தூர் — ஆந்திரப் பிரதேசம்



# ஆஸ்திரேலியாவில் நமது கலை

அன்று மாலை வீட்டுக்குத் திரும்பிக் கொண்டிருந்தபோது, வழக்கமாக வரும் திசையை விட்டு நேர் எதிர்த் திசையிலிருந்து நான் வந்து கொண்டிருந்ததைப் பார்த்த நண்பர் ஒருவர், ''எங்கிருந்து வருகிறீர்கள்?'' என்று கேட்டார்.

''ஆஸ்திரேலியாவிலிருந்து.....'' என்று பெருமிதத்துடன் கூறி அவரைத் திகைக்க வைத்துவிட்டு மேலே நடந்தேன் நான்.

உண்மையில் கலாக்ஷேத்திராவில் ஸ்ரீமதி ருக்மிணிதேவி தமது ஆஸ்திரேலிய விஜயத்தின் அநுபவங்களைப் பற்றிச் செய்த உரையைக் கேட்டுவிட்டு வந்து கொண்டிருந்தேன் நான். அதன் காரணமாகத்தான் அப்படிக் கூறினேன். ஆனால் அன்று திருவான்மியூரிலுள்ள கலாக்ஷேத்திரத்தை அடைய நான் பட்ட பாட்டைப் பார்த்தால் ஆஸ்திரேலியாவுக்குப் போய் விட்டு வருவதே சுலபமோ என்று தோன்றுகிறது.

ஆனால் கலாக்ஷேத்திராவை அடைந்தவுடன்தான் என்ன அமைதி! என்ன சாந்தம்! மரங்களும் ஆங்காங்கே சிறு சிறு குடில்களும் அமைந்த அப்பகுதி வேத காலத்து ரிஷியாசிரமத்துக்குள் நுழைகிறோமோ என்ற உணர்ச்சியை ஏற்படுத்துகிறது. அங்கு ஓர் ஆலமரத்தடியில் ஸ்ரீமதி ருக்மிணிதேவி அமர்ந்திருந்தார். நண்பர்கள் சுமார் ஐம்பது பேர்கள் அவரைச் சூழ்ந்து உட்கார்ந்திருந்தார்கள். ரம்மியமான மாலை நேரத்தின் அந்த அமைதியை இன்னும் நன்கு எடுத்துக்காட்டுவது போல் குயில் ''கூ.....கூ.....'' என்று கூவியது. அந்தக் குயிலின் குரலுடன் இணைந்தாற்போல் ஸ்ரீமதி ருக்மிணிதேவி பேசத் தொடங்கினார்.

ஸ்ரீமதி ருக்மிணிதேவி, கலாக்ஷேத்திர மாணவ மாணவியர், ஆசிரியர்கள் ஆகியோருடன் ஆஸ்திரேலியாவில் பெர்த் என்ற நகரில் நடைபெற்ற விசேஷ அகில உலக கலை விழாவில் பங்கெடுத்துக் கொள்ளச் சென்றிருந்தார். அத்துடன் ஆஸ்திரேலியாவில் மூன்றரை மாதங்கள் சுற்றுப்பிரயாணம் செய்து, பல ஊர்களில் வெற்றிகரமாக நாட்டிய நாடகங்கள் நடத்தி விட்டு வந்திருக்கிறார்.

மேற்கத்திய நாகரிகம் கொண்ட கிழக்கத்திய தேசம் ஆஸ்திரேலியா. இந்தியாவுக்குத் தென்கிழக்கேயுள்ள நாடல்லவா ஆஸ்திரேலியா? மேற்கத்திய நாகரிகம் கொண்ட அவர்கள் கலாக்ஷேத்திரக் குழுவினருக்குச் சைவ உணவைப் பரிமாறுவதில் அளவு கடந்த சிரத்தையையும் கவலையையும் காட்டியதை ஸ்ரீமதி ருக்மிணிதேவி பாராட்டினார். 'சிரத்தை சரி, கவலை எதைப் பற்றி?' என்று நீங்கள் கேட்கலாம். ஆஸ்திரேலியாவில் வரவேற்பாளர்களுக்கு இவர்களின் சைவ உணவுத் தேவைகளைப் பற்றி நீண்ட பட்டியலை அனுப்பியிருந்தார்களாம். இவர்கள் ஆஸ்திரேலியா போனதும், அவ்வரவேற்பாளர்கள் அப்பட்டியலைப் பார்த்துப் பயந்து பயந்து இவர்களுக்கு எப்படிச் சாப்பாடு பண்ணி வைப்பது என்று கவலைப்பட்டுக் கொண்டிருந்தார்கள். இதைப் பார்த்த ருக்மிணிதேவி 'முதலில் அந்தப் பட்டியலைக் கிழித்தெறியுங்கள்' என்று சொல்லிவிட்டு அவர்கள் அதிக சிரமமில்லாமல் சைவ உணவு பரிமாற வகை செய்து கொடுத்தாராம்.

ஆஸ்திரேலியாவில் ஏராளமாகப் பால், வெண்ணெய், காய்கறிகள், பழங்கள் எல்லாம் கிடைக்கின்றன. என்றாலும் வாய்க்கு ருசியாக ஏதேனும் வேண்டியிருக்கிறதே!

குழுவைச் சேர்ந்த மாறார் அவர்களை ஆஸ்திரேலியாவில், ''சாப்பாடு எல்லாம் எப்படியிருக்கிறது?'' என்று ஸ்ரீமதி ருக்மிணி

படம்: கலாக்ஷேத்திரா மாணவ, மாணவியர், ஸ்ரீமதி ருக்மிணிதேவி ஆகியோருடன் ஆஸ்திரேலியப் பிரதமர் ஸ்ரீ ஹரால்ட் ஹோல்ட்.

தேவி விசாரித்தார். அதற்கு அவர், ''நம் நாட்டில் இலையை விரித்து அதன்மேல் சாப்பாட்டைப் போட்டுக் கொண்டு சாப்பிடுகிறோம். இங்கு இலைகளையே சாப்பிடுகிறோம். அவ்வளவுதானே!'' என்று நகைச்சுவையோடு குறிப்பிட்டார்.

இக்குழுவினர் தங்கச் சில இடங்களில் ஹோட்டல்களில் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. இன்னும் பல ஊர்களில் உள்ளூர்வாசிகளின் இல்லங்களில் விருந்தினர்களாகத் தங்க ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. இப்படி விருந்தினராக ஏற்க விழையும் அன்பர்கள், ''என் மகன் புல்லாங்குழல் வாத்தியத்தில் ஆர்வம் கொண்டவன். அதனால் உங்கள் குழுவிலுள்ள புல்லாங்குழல் வித்வானை எங்கள் வீட்டுக்கு அனுப்புங்கள்'' என்பது போன்ற கோரிக்கைகளால் இவர்களைத் திணற அடித்தனர்.

முக்கியமான பெரிய நகரங்களைத் தவிர மற்ற பல ஊர்களில் மேடைகள் வசதியாகவே இரா. மேடைகள் இருந்தால் அவற்றில் சொல்லி முடியாத அளவு ஆணிகள் துருத்திக் கொண்டிருக்கும். ஏதோ ஓர் ஊர் மேடையிலிருந்து இவர்கள் பறித்து எடுத்த ஆணிகளின் எண்ணிக்கை 172! அப்படியும் ஒன்றிரண்டு ஆணிகள் மேடையில் ஒரு மூலையில் இவர்கள் கண்ணுக்குப் படாமல் தப்பித்துக் கொண்டிருந்தன. அவற்றின் மேல் எப்படியோ கலாக்ஷேத்ரா மாணவிகள் ஒருவர் நாட்டியமாடிக் கொண்டே போய் மிதித்துக் காயப்படுத்திக் கொண்டு விட்டார்கள். அப்போது ஸ்ரீமதி ருக்மிணிதேவி நிகழ்ச்சியைப் பார்க்க வந்த ரஸிகர்கள் கூட்டத்திடையே, ''உங்களில் யாராகிலும் டாக்டர்கள் இருக்கிறார்களா?'' என்று கேட்டுக் கொண்டு செல்ல நேரிட்டது.

இவ்விதம் சரிவர மேடைகள் அமையாததற்குக் காரணம் கூறினார் ஸ்ரீமதி ருக்மிணி தேவி. ஆஸ்திரேலியாவில் நாகரிகம் தோன்றிச் சுமார் நூறு ஆண்டுகள்தான் ஆகியிருக்கின்றன. புதிய தேசமான அதில் தொழில், விவசாயம், பொருளாதாரம் ஆகியவை அபிவிருத்தியடைய உழைத்துப் பாடுபட்டு வந்தார்களேயன்றிக் கலைத் துறையில் கவனம் செலுத்த இந்நாள் வரை அவகாசம் இருந்ததில்லை. சமீப காலமாகத்தான் அவர்கள் இவ்விஷயத்தில் சிரத்தை எடுத்துக் கொண்டுள்ளார்கள். அதிலும், அவர்கள் தங்கள் பண்பாட்டைப் பேணி வளர்க்க இதுகாறும் பல்லாயிரக்கணக்கான மைல்கள் அப்பாலுள்ள இங்கிலாந்தையும் ஐரோப்பாவையுமே எதிர்நோக்கியிருந்தார்கள். ஸ்ரீமதி ருக்மிணிதேவி குழுவினரின் விஜயத்தால், 'இவ்வளவு அண்மையில் மிகச் செழிப்பு வாய்ந்த பாரதப் பண்பாடு நமக்கு வழி காட்ட இருக்கையில், நாம் அவ்வளவு தூரம் நோக்குவானேன் !' என்று பல ஆஸ்திரேலிய மக்களின் மனத்தில் தோன்றிய கருத்தை அந்நாட்டின் பிரதமர் ஸ்ரீ ஹரால்ட் ஹோல்ட் தம் வாய்மொழியாகவே வெளியிட்டு இரு நாடுகளுக்குமிடையில் நல்லெண்ணம் வளர இக்கலாசாரப் பரிவர்த்தனை பெரிதும் துணை புரியும் என்றார்.

ஆஸ்திரேலியாவில் தங்கிய மூன்று மாத காலத்தில் சுமார் 82 நிகழ்ச்சிகள் அளித்திருக்கிறார்கள். ஏறத்தாழ அவர்கள் அங்கு தங்கிய ஒவ்வொரு நாளுமே நிகழ்ச்சி நடைபெற்றுள்ளது. அதுவும் சேர்ந்தாற்போல் ஒரே ஊரில் தங்கிய நாட்கள் சொற்பம். ஆகவே, பெரும்பாலும் இன்று ஓர் ஊர், நாளை மற்றோர் ஊர் என்று பிரயாணம் செய்து கொண்டே நிகழ்ச்சிகள் அளித்து வந்திருக்கிறார்கள். ஓர் ஊருக்கும் அடுத்த ஊருக்கும் இடைப்பட்ட தூரம், இருநூறு மைல் முந்நூறு மைல் என்றிருக்கும். இந்தத் தூரத்தைப் பஸ்ஸிலேயே கடந்து செல்ல வேண்டியிருந்தது. காலை எட்டு மணிக்குப் புறப்பட்டால் பிற்பகலில் ஊரை அடைவார்கள். சாப்பிட்டுவிட்டு, மூட்டையை அவிழ்த்து மேடையைச் சரிப்படுத்திக் கொண்டு மாலை நிகழ்ச்சிக்குத் தயாராக வேண்டும். மாலை நிகழ்ச்சி முடிந்து, இரவு உணவு முடிந்து, படுத்துக் கொள்ளப் போகும் போது இரவு ஒரு மணியாகிவிடும். எனினும் மறு நாள் காலை எட்டு மணி பஸ் பிரயாணத்துக்கு அவர்கள் தயாராகிவிட வேண்டும். இத்தனைக்கும் இடையில் ஒத்திகை பார்ப்பதை அவர்கள் நிறுத்தவேயில்லை. '' 'தினம்தினம் நாட்டிய நாடகங்கள் நடக்கும் போது ஒத்திகை பார்ப்பது எதற்கு' என்று சிலர் எண்ணக் கூடும். அடிக்கடி நாட்டிய நாடகங்கள் நிகழ்வதாலேயே கொஞ்சம் அலட்சிய பாவம் ஏற்பட்டுவிட வாய்ப்புண்டு. அதனால் ஒத்திகைகள் மிக அவசியமாகின்றன'' என்றார் ஸ்ரீமதி ருக்மிணி தேவி. தொடர்ந்து, ''எத்தனையோ மறக்க முடியாத அனுபவங்கள். என்றாலும் எங்களை ஏற்றிச் சென்ற பஸ் டிரைவர் எங்களை விட்டுப் பிரிய வேண்டிய சமயம் வந்தபோது கண்ணீரும் கம்பலையுமாக நின்றது உள்ளத்தில் என்றும் பசுமையாக நிற்கும் அனுபவமாகும்'' என்றார்.

ஆஸ்திரேலிய மக்கள் சமீப காலமாக யோகாசனப் பயிற்சிகளில் ரொம்பவும் நாட்டம் கொள்ளத் தொடங்கியிருக்கிறார்கள். பலர் யோகாசனங்கள் போடுவதன் பயனாக, தங்கள் மாமிச உணவுப் பழக்கத்தை விட்டுச் சைவ உணவுப் பழக்கத்தை மேற்கொண்டிருக்கிறார்கள்.

இந்தத் தகவலைக் கூறிய ஸ்ரீமதி ருக்மிணி தேவி மற்றுமொரு ரசமான விஷயத்தையும் வெளியிட்டார். ஆஸ்திரேலியா எத்தனையோ பல ஆயிரம் ஆண்டுகளாக உலகின் மற்ற கண்டங்களிலிருந்து ஒரு தீவாகப் பிரிந்து தனித்து நிற்பதால் இங்கு உலகில் வேறெங்கும் காண முடியாத நூதனமான மிருகங்கள் இருப்பதுடன் அவை எல்லாமே சாகபட்சிணிகளாக உள்ளன. மாமிசபட்சிணியாக அங்கே உள்ள ஜீவன் மனிதன்தான்!

ஸ்ரீமதி ருக்மிணிதேவி மிருக சம்ரக்ஷணைக் குழுவிலும் அகில உலக மரக்கறி உணவு மகா நாட்டிலும் முக்கிய பங்கெடுத்துக் கொண்டு உழைத்து வருபவர். ஆஸ்திரேலியா பற்றிய மேற்கூறிய விவரங்கள் அவர் பார்வையிலிருந்து தப்பி விடுமா என்ன? —எஸ்.வி.எஸ்.

# கால்கேட்டின் மூலம் நாள் முழுவதும் வாய் துர்நாற்றத்தை அகற்றி பற்கள் சொத்தையாவதையும் தடுங்கள்!

ஏனெனில் ஒரே தேய்ப்பில் கால்கேட் க்ரீம், துர்நாற்றத்தையும், சொத்தையையும் உண்டாக்கும் கிருமிகளில் 85 சதவிகிதத்தை ஒழித்துவிடுகிறது.

கால்கேட், 10ல் 7 சந்தர்ப்பங்களில் உடனடியாக வாய் துர்நாற்றத்தை அகற்றுகிறது என்பதையும், உணவு உட்கொண்டவுடன் கால்கேட்டினால் பற்களைத் துலக்கும் முறையால், இதுவரை பற்பசை வரலாற்றிலேயே கண்டிராத பெருமளவில் ஏராளமானவர்களுக்குச் சொத்தை தடுக்கப்படுகிறது என்பதையும் விஞ்ஞான ஆராய்ச்சிகள் நிரூபித்துள்ளன. இந்த சாதனை கால்கேட் ஒன்றுக்குத்தான் உண்டு!

கால்கேட்டின் நீடித்திருக்கும் நூதன நறுமணத்திற்காக, குழந்தைகள் அதனாலேயே பல் துலக்க விரும்புகிறார்கள்!

நீங்கள் பற்பொடியை விரும்பினால் இந்தப் பலன்கள் அனைத்தையும் கால்கேட் டூத் பவுடர் மூலம் அடையலாம். ஒரு டப்பி பல மாதங்களுக்கு வரும்.




DC. G. 88 TAM




பரிசுத்தத்திற்கும், வாயில் நறுமணம்கமழவும், வெண்மையான பற்களைப் பெறவும் வழக்கமாக கால்கேட்டினால் பல்துலக்குங்கள்

...உலகிலேயே பெரும்பாலானவர்கள் மற்றெல்லாப் பற்பசைகளையும் விட, கால்கேட் டெண்டல் க்ரீமையே வாங்குகிறார்கள்.



சினிமா (ஹிந்தி)

# காஜல்

**ப**னே மரத்தடியில் நின்று பாலைக் குடித்தால்.....?

'கண் மை' என்னும் பொருள் தரும் காஜல் திரைப்படக் கதையின் மையக் கருத்து இது தான் :

மாதவி என்னும் பெண்ணோடு உடன் பிறந்த பாசம் வைக்கிறான் ராஜேஷ் என்னும் இளைஞன். அவன் கரம் பற்றிய மனைவி பானுவுக்கோ.....? அவனுடைய அந்தப் பாசம் விகல்பமாகவே படுகிறது.

அதன் பலன் ?....

மாதவி ஏரியில் விழுந்து தற்கொலை செய்து கொள்ளப் போக, மோதி என்பவனால் காப்பாற்றப்படுகிறாள்; கடைசியில் அவன் கரம் பற்றுகிறாள்.

கரம் பற்றிய பின்னரும் அவளுக்குச் சட்டென்று விடிவு ஏற்படவில்லை. கயமை மிக்க கணவனின் செய்கைகளுக்கு இலக்காகி இன்னல்படுகிறாள். இன்னலின் உச்சகட்டம் அவளுக்கு விடிவை மட்டுமா தருகிறது ? கணவனையே திருத்தி அவளுக்கு உரிமையானவனாக ஆக்குகிறது.

கதையைக் கொண்டு போயிருக்கும் முறை கருத்துக்கிசைவாக அமைந்திருக்கிறது. ஆடல் பாடல் என்று அந்நிய நாட்டு அத்தியந்த ஆபாசக் காட்சிகள் குறைவு. ஆனால் ஜதர் காலத்து நகைச்சுவைக் காட்சி நம் தென்னாட்டு ஹாஸ்யம் எவ்வளவு தூரம் உயர்ந்திருக்கிறது என்பதை எடுத்துக்காட்ட உதவுகிறது. இந்த அவல நகைச்சுவைக் கட்டங்களுக்குக் கைகொடுத்து உதவுபவர்கள் மஹ்மூத், டுன் டுன், மும்தாஜ், இம்மூவரும்.

பொருள் நிறைந்த பக்திப் பாடல்கள் செவிக்கு உணவாக இருக்கின்றன. அந்தப் பக்திப் பாடல்களை 'ராணி மா' வாகப் பாக மேற்று அநுபவிக்கும் துர்க்கா கோட்டே தாம் புகழ் மங்காத சிறந்த நட்சத்திரம் என்பதை நிலைநாட்டுகிறார்.

பெண்மையின் பாசத்தைச் சகிக்காத பெண் பானுவாகப் பத்மினி சிறந்து விளங்குகிறார் என்றால் மீனுகுமாரி அடக்கத்தின் அணிகலனாக, பெண்மைக்கு ஒரு பூஷணமாக மனத்தில் இடம் பெற்று விடுகிறார்.

மோதியாக வரும் ராஜகுமார் பாத்திரத்தின் தன்மை உணர்ந்து நடிப்பதோடு, நடிப்பை ஒரு வாழ்வாக வாழ்ந்து காட்டி நடிப்புக்கு ஓர் இலக்கணம் வகுத்துக் காட்டுகிறார். ஆகக்கூடி காஜல் கண்ணுக்கு மையிட்டுத் திருஷ்டி கழிக்கக்கூடிய படம்தான்!

அவர்கள் பேச்சில் அடி பட்ட பக்கிரி எங்கு வேலை செய்கிறான் என்பதை அறிந்து கொள்ளச் சிங்காரத்துக்கு அதிக நேரமாகவில்லை.

பாரு, இன்று நம் அலுவலகத்தில் வீண் போகவில்லை. புதையலோடு நம் கருத்துக்கு தேவையான தகவலையும் சப்ளை செய்து விட்டார் ஓட்டல்காரர். ம்.. கிளம்பு...

ஓ! அந்தப் பக்கிரியைப் பத்திக் கேக்கிறீங்களா? ஆமா, அவன் நம்ம பாக்டரியிலதான் வேலை செய்யறான். ஆனா ஏனோ இன்னிக்கு வரல்லே. ஆவசியம்னு அவன் வீட்டு விலாசத்தைத் தரேன்.

ரொம்ப தாங்க்ஸ். எங்களுக்குத் தேவையானதும் அதுதான்.

அவரு வீட்டில இல்லீங்க. காலையிலே வேலைக்குப் போனவரு இன்னும் திரும்பி வரல்லீங்களே.

இத்தலம்மா, உங்க வார்த்தையை நம்ப முடியல்லே. பக்கிரி உள்ளே தான் இருக்கான். அவனைக் கூப்பிடுங்க. நாங்க அவனோட பேசணும்.

அந்தப் பெண் போய் சொல்லுகிறாள் என்று எதனால் சிங்காரம் சந்தேகிக்கிறான்? பக்கிரியின் இருப்பிடம் எப்படி அவனுக்குத் தெரிந்தது? விடைக்கு 72-ம் பக்கம் புரட்டுங்கள்?

ஒளிந்திருந்த பக்கிரி வெளிப்பட்டான். சிங்காரத்திடம் உண்மையை ஒப்புக் கொள்ளவும் செய்தான். ஆனால்...

இப்போ அந்தப் பணம் எங்கிட்ட இல்லீங்க. அத்தனை பணத்தை நான் எதிர்பார்க்கல்லே. எனக்கு ஒரே மலைப்பாப் போச்சு. ஒண்ணும் புரியல்லே. அதனாலே என் சகாக்கள்கிட்ட ஒப்படைச்சிருக்கேன். இந்த மாதிரி விஷயங்களிலே அவங்க எக்ஸ்பர்ட்.

ம்.. கிளம்பு. அவர்கள் இருக்குமிடத்தைக் காட்டு.

எதிர்பாராத விதமாக உள்ளே புகுந்து பக்கிரியின் சகாக்களைத் திகைக்க வைத்தான் சிங்காரம்....

என்ன பிரதர்? இடத்தைக் காலி பண்றீங்களா? இல்லே..

அத்தனை இலகுவாகத் தாங்கள் போலீசிடம் சிக்குவதை எந்த ரௌடிகள்தான் விரும்புவார்கள்? தப்பித்திடத் தினைத்துப் போராடிப் பார்த்தார்கள். ஆனால் சிங்காரத்தின் பிடியிலிருந்து தப்ப முடியுமா? இன்ஸ்பெக்டரின் கட்டளைப்படி பொன்னுசாமி அவர்களின் பணப்பை அன்று மாலை பத்திரமாக அவரிடம் சேர்க்கப்பட்டது.

"பத்து வருடங்களுக்கு முன்பு ... நினைவிருக்கிறதா? உங்கள் திருமணத்தன்று என்னையும் உங்கள் வாழ்க்கைத் துணையாகத் தேர்ந்தெடுத்ததை?"



# ஹெர்குலிஸ்

வெறும் சைக்கிள் மட்டு மன்று; வாழ்நாள் முழுதும் உழைக்கும் ஓர் உறுதுணை



திருமண நாளின் இந்த பத்தாவது நினைவு நாள் ... ஹெர்குலிஸுக்கும் சரி, அதன் சொந்தக்காரருக்கும் சரி ... பெருமிதமூட்டும் நன்னாள்.

நீங்கள் ஒரு ஹெர்குலிஸ் சைக்கிள் வாங்கும்போது உங்கள் வாழ்க்கையுடன் அது ஒன்றிவிடுகிறது. ஆண்டுகள் செல்லச் செல்ல உங்கள் வாழ்க்கை மாறும் ... உத்தியோக உயர்வுகள் கிடைக்கும் ... உங்கள் குழந்தைகள் வளர்ந்து பெரியவர்களாவார்கள் ... மணம் புரிந்து வேறிடங்களில் புது வாழ்க்கை தொடங்குவார்கள். ஆனால் உங்கள் ஹெர்குலிஸ் எப்போதும் உங்களுடனேயே இருக்கும் — எப்போதும் நன்கு பணி புரிந்தபடியே இருக்கும்.

டி. ஐ. சைக்கிள்ஸ் ஆப் இந்தியா
அம்பத்தூர், மதராஸ் 53

உரிமையாளர்கள் :

டியூப் இன்வெஸ்ட்மென்ட்ஸ் ஆப் இந்தியா லிமிடெட், சென்னை

# பெண்களும் சினிமா டிக்கட்டும்

## ராஜேந்திர குமார்

"தள்ளு...தள்ளு..." கையிலிருந்த சின்னப் பிரம்பினால் நெட்டித் தள்ளி, 'க்யூ' வரிசையை ஒழுங்குபடுத்திக் கொண்டிருந்த இன்ஸ்பெக்டர் மணி, யாரோ தம்மைக் கையைப் பிடித்து இழுப்பதைப் போலிருக்கவே கோபத்துடன் திரும்பிப் பார்த்தார்.

"ஹலோ!" இழுத்த சேது சிரித்தான். "என்னைத் தெரிகிறதா?"

"தெரிகிறது." பல்லைக் கடித்தார் இன்ஸ்பெக்டர் மணி. "டிக்கட் வாங்கக் குறுக்கு வழி தேடி வரும் புதுச் செநெதிதமா?"

"முட்டாள்தனம்." சேது சொன்னான். "இந்த இடத்துக்கு அப்புறம் நாறு பேருக்கும் கூடத் தாராளமாக டிக்கெட் கிடைக்குமே! நீங்கள் மிஸ்டர் மணி; சந்திரமண்டலம் துருவ வேளாளர் உயர்நிலைப் பள்ளியின் பழைய மாணவன், இல்லையா?"

கூர்ந்து பார்த்தார் மணி. அடுத்த கணம் முடிச்சேறிய அவரது புருவம் முடிச்சு அவிழ, "அடப்பாவி, சேது! நீயா?" என்று பாய்ந்து அணைத்து, க்யூ வரிசையை விட்டு வெளியே இழுத்து விட்டார் உற்சாகத்துடன்.

"அரை டிக்கெட்டாகப் பார்த்தது உன்னை. இப்ப முழு டிக்கட்டாக வந்து நிற்கிறாய். சட்டென்று அடையாளம் தெரியவில்லை. ஆமாம். உன் அண்ணா பசுபதி சௌக்கியமா? என்னவாயிருக்கான்?" என்று ஆரம்பித்தவர் முடிக்கப் பத்து நிமிஷங்களாயின. சேதுவின் அண்ணாவின் வகுப்புத் தோழர் அவர்.

"அண்ணாத்தைதானே!" என்று ஆரம்பித்த சேது பதில் சொல்லி முடிக்கப் பத்து நிமிடங்களாயின. க்யூ வரிசை கரைய ஆரம்பித்ததையும் அறியாமல் "உங்க உடம்புக் கட்டைப் பார்த்து, 'டிரில்'லில் உங்களுக்கு இருக்கிற ஆர்வத்தையும் பார்த்து அண்ணாத்தை முன்பே சொல்லுவாரே, 'டேய், நீ போலிஸிலே சேரத்தான்டா லாயக்கு' என்று. அது கரெக்ட். இந்த போலீஸ் டிரஸ் உங்களுக்குப் பாந்தமா யிருக்கு" என்றவன், முதலில் அந்த மணியின் நெஞ்சு நிமிருவதையும், அடுத்து அந்தக் கியூ வரிசை கணிசமான அளவுவரை குறைந்து போயிருப்பதையும் கண்டு விட்டான். "ஐயோ! நான் நின்ற இடம் போய் விட்டதே! மிஸ்டர் மணி! நீங்கள் இழுக்கத்தான் நான் இடம் பெயர்ந்தேன். உங்களால்தான் டிக்கெட் இல்லாமல் போய் விட்டது. ஆகவே..."

"அது சரி!" தொப்பியைக் கழற்றித் தமது அடர்ந்த முடியை விரல்களால் கோதிவிட்டுக் கொண்டார். உள்ளே போய், மானேஜரிடம் கெஞ்சிக் கூத்தாடி மூன்று டிக்கெட் வாங்கி வந்து, சேதுவின் கையில் திணித்தார். "யாருக்கப்பா மூணு டிக்கட்?"

"ஒன்று எனக்கு. இன்னொன்று என் செநெதிதனுக்கு. மூன்றுவது...வந்து....வந்து..."

"உன் ஸ்வீட் ஹார்ட்டுக்கா?" என்ற மணி, அந்தச் சேது 'ஓ! நோ!' என்றலறியதையும் பொருட்படுத்தாமல், "எனக்குந்தான் உன் ஸ்வீட் ஹார்ட்



டைப் பார்க்கச் சந்தர்ப்பமில்லாமல் போய் விட்டது. மத்தியானம் ஒரு கொள்ளைக் கும்பல் விஷயமாகச் செலத்துக்குப் போகி றேன். வந்த பிறகு உன்னைச் சந்திக்கிறேன். விலாசம் கொடு'' என்று ஒழுக ஒழுகத் தமது பேனாவைத் தந்து டயரியையும் நீட்டி னார். பிறகு ''சீரியோ பாய்!'' என்றவாறு போய்ச் சேர்ந்தார்.

''மைதிலி சனியன்!'' மனத்துக்குள் திட்டி னான் சேது. ''உனக்கும் உன் சிநேகிதிகளுக் கும் டிக்கட் வாங்கப் போய் இதென்ன வம்பு! இவன் வேறு அண்ணாத்தையிடம் எதையா வது உளறி வைத்தால்...!''

## பன்னிரண்டு மணிக்கு

மைதிலியின் கண்களில் கொஞ்சம் கொஞ்சமாகச் சிவப்பு ஏறிக் கொண்டிருந் தது. ''நமக்கு டிக்கெட் வாங்கிக் கொண்டு 'அரோகரா' ஹோட்டலில் சந்திக்கிறே



ன்னுரடி, சேது. நான் போய் வாங்கி வரு கிறேன்'' என்று பாமா விடமும் அனிலாவிடமும் சொல்லிவிட்டு வந்தவள்,

''மணி பன்னிரண்டாகிறது. இன்னமும் சேதுவைத்தான் காணுமென்றால் இந்த ஸர்வரைக் கூட அல்லவா காணும்!'' என்று சுற்றுமுற்றும் பார்த்தாள்.

''அம்மாவுக்கு என்ன வேணும்?'' என்று வந்து நின்ற ஓர் அசட்டு ஸர்வர், அவள் அப்படி ஒரு சீறு சீறுவாள் என்று எதிர்பாராத தினல் கலங்கிப் போனுன்.

''என்ன வேணும்னு வந்து கேட்கவே இவ்வளவு நேரமானுல், நீ போய் மசாலா தோசை கொண்டு வருவதற்குள் நான் கிழவி ஆயிடுவேன் போலிருக்கே. முதல்லே ஒரு கிளாஸ் ஐஸ் வாட்டர் கொண்டுவா, போ'' என்று விரட்டியடித்தவள், அவன் போன கொஞ்ச நேரத்துக்கெல்லாம் வெலவெலத்து எழுந்து விட்டாள்.

''என்ன மைதிலி!''—உள்ளே வந்தது, லெக்சரர் அலமேலு சாம்பமூர்த்தி. ''ஏது இவ்வளவு தூரம்?'' என்று கேட்டாள்.

''தலை வலிச்சது மிஸ்! ஒரு கப் காப்பி சாப்பிட்டுப் போக வந் தேன்'' என்று எழுந்தவள், அந்த அம்மாள், 'உட்காரேன்' என்ற போது, '' 'பினிஷ்' முடிச்சிட்

டேன். நான் வரேன்'' என்று ஓடியே போய் விட்டாள். 'வம்பு! இந்த நேரம் பார்த்துச் சேது வந்து விட்டால்!'

''அம்மா, ஐஸ்வாட்டர்'' என்று வைத்த அசட்டு சர்வர் விழிவிழி என்று விழித்தான், 'அதற்குள் நடுத்தர வயதாகி விட்டதே, இந்தப் பெண்ணுக்கு' என்று நினைத்து.

''ஐஸ் வாட்டர் வேண்டாம். ஹாட் வாட்டர் கொண்டு வா'' என்ற அலமேலு சாம்பமூர்த்தி, அவன் மறுபடியும் குனிந்து முகத்தைப் பார்க்கவே, ''என்ன மேன் பார்க்கிறே?'' என்று முறைக்க, அவன் அப்பால் ஓட, நிமிர்ந்த அலமேலு திடுக்கிட்டெழுந்தாள்.

''என்ன மிஸஸ் அலமேலு சாம்பமூர்த்தி''என்று முழுப் பெயரையும் உச்சரித்து உள்ளே வந்தவர், பிரின்ஸ்பால் ஸ்ரீமதி நாகமணி செல்வராஜ். ''க்ளாஸில்லையா?''

''இல்லே, மேடம் இப்ப 'ஆப்'. மாத்திரை சாப்பிட வந்தேன்'' என்று உளறி, ''சாப்பிட்டாச்சு. நான் வரேன்'' என்று வெளியேறி விட்டாள் அவசரமாக.

''இதோ, ஹாட் வாட்டர். இதோ, மசாலா தோசை'' என்று மேஜையில் வைத்து நிமிர்ந்த அசட்டு சர்வர் விழி பிதுங்கிப் போயிற்று. அதற்குள்ளாகத் தலை தும்பைப் பூவாய் நரைத்து விட்டதே இந்தப் பெண்ணுக்கு !

''மஸாலா தோசை வேணும். ஜீரணமாகாது. ஒரு லைட் காப்பி கொடு, போதும்'' என்ற பிரின்ஸ்பால் அதட்டினார்: ''என்ன மேன், முறைக்கிறே ?''

''என்னம்மா, நிஜமாவே கிழவியாயிட்டீங்க?'' என்றவன், பிரின்ஸ்பால் போட்ட கூச்சலில், மசாலா தோசையை எடுத்துக் கொண்டு ஓடியே போய் விட்டான். கொஞ்சம் பொறுத்துக் காப்பியுடன் உள்ளே நுழைந்து வந்தவன் திகைத்தான்.

'' என்ன மேன் ? மசாலா தோசை இன்னுமா வேகறது ?'' என்று முறைத்துக் கேட்டும், இளம் பெண்ணாகி விட்டாளே இவள் மீண்டும். மைதிலி வருவதை ஜன்னல் வழியே பார்த்துவிட்ட பிரின்ஸ்பால், அவள் அறையில் நுழையுமட்டும் மறைந்திருந்து பிறகு அவளுக்குத் தெரியாமல் வெளியேறிப் போனது அந்த ஸர்வருக்குத் தெரியாது. 'காலேஜ் நேரத்தில் காப்பி ஹோட்டலுக்குப் போகக் கூடாது' என்று கடும் உத்தரவு போட்டவராயிற்றே பிரின்ஸிபால்!

அசட்டு ஸர்வரின் கையும் காலும் தாளம் போடலாயின. 'என்ன? என்ன?' என்று நெருங்கும் மைதிலியைப் பார்த்து, 'பேய்... பேய்' என்றலறி மயங்கிக் கீழே விழ, மற்றவர்கள் ஓடிவர, நடுங்கிப் போன மைதிலி வெளியே ஓட...அமளி...ஒரே அமளி.

''மிஸ் மைதிலி!'' சேது அழைத்தான். ''ஏன், ஓடி வர்றீங்க ? யார் துரத்தியது ?''

''அந்த ஸர்வர் என் முகத்தைப் பார்த்ததும் மயங்கி விழுந்துவிட்டான். நான்...நான் அவ்வளவு அழகாயிருக்கேனா ?'' என்று குழறினாள் அவள்.

''அது சரி'' என்று மூன்று டிக்கெட்டுகளை அவள் கையில் திணித்தான் சேது. ''இதோ, டிக்கெட்.''

## அரை மணி கழித்து

''இதோ, டிக்கெட் !'', என்று தனது கையில் மூன்று டிக்கெட்டுகளை வைக்கும் மைதிலியைப் பார்த்து விழித்தான் சேது.

''ஏன், போகவில்லையா?''

''நோ! எதிர்பாராத விதமாக அனிலாவின் அப்பா மாயவரத்திலிருந்து வந்திருக்கிறார். அவளால் வர முடியவில்லை. மற்றவங்க டெஸ்டுக்கு மும்முரமாப் படிக்கிறாங்க. எங்க இரண்டு பேருக்கு மட்டும் போகப் பயமாயிருக்கு. நீங்க போங்க உங்க ஸ்நேகிதர்களோடு.''

''என் பிரண்ட்ஸ்களா? போட்டு வைத்த புரோகிராம்படி போய் விட்டார்களே! மத்தியானம் காலேஜ் லீவாச்சே ! 'ஸ்விம்மிங்'குப் போய் விட்டார்கள். நானும் போகத்தான் புறப்பட்டேன். ஏன்? அவ்வளவு ஆசைப்பட்டீர்களே! நீங்கள் போவதுதானே!''

''இன்னொரு டிக்கெட் ?''

''கிழித்துப் போட்டால் போகிறது '' என்று கிழிக்க முயன்ற சேதுவின் கையில் 'ஜில்'லென்று மின்சாரம் பாய்ந்தது. மைதிலிதான் 'வேண்டாம், வேண்டாம்' என்று தடுத்துக் கொண்டிருந்தாள். ''வீணாக்குவானேன்? நீங்களும் வாருங்களேன். எங்களுக்கும் துணையாயிருக்கும்.''

''நானா ?'' கிராப்புத் தலை கலையாதவாறு சொறிந்து கொண்டான் சேது. ''ஒரு மணிக்குச் சேலம் போகிறேன்'' என்ற சப் – இன்ஸ்பெக்டர் மணியின் வார்த்தை ஞாபகம் வரவே, ''ஓ...கே!'' என்று புறப்பட்டான்.

## மணி ஒன்றரை

காஸினோ டாக்கீஸில் கூட்டம் நெருக்கித் தள்ளிற்று. மாலைக் காட்சிக்கு இப்போதே கும்பல் சேர்ந்திருந்தது.

கூட்டத்தில் நீந்திக் கொண்டிருந்த மைதிலி கேட்டாள்: ''டிக்கெட் பத்திரமாயிருக்கிறதல்லவா?''

''இதோ!'' மடித்துவிட்ட டெரிலின் ஷர்ட் 'கஃப்'பிலிருந்து எடுத்து நீட்டினான் சேது. மைதிலி, ''இதென்ன வெறும் கையை நீட்டறீங்க ?'' என்று கேட்டதும்தான் பரபரப்புடன் தேடினான். துழாவினான். ''ஐயோ, டிக்கெட்!'' என்றலறினான். அப்போது....

''டிக்கெட்டா, ஸார்? வேணுமா, ஸார்?'' என்று காதருகே கிசுகிசுத்தான் ஒரு ரௌடி. ''ஒரு டிக்கெட் ஆறு ரூபாய்.''

வெறுப்புடன் அதை ஒரு முறை பார்த்து விட்டுத் திரும்பியவனின் தலை விருட்டென்று மீண்டும் டிக்கெட் பக்கமாகத் திரும்பியது. அடுத்த வினாடி, ''அயோக்கிய ராஸ்கல்'' என்று பாய்ந்து டிக்கெட்டுகளைப் பிடுங்கிக் கொண்டான். ''என் டிக்கெட்டுகளைத் திருடி என்னண்டையே விற்கப்

பார்க்கிறயா?'' என்று அவன் சண்டைக்குப் போக, அந்த ரௌடி அலற, அவனது தோஸ்துக்கள் உடன் வர அமளி...ஒரே அமளி.

''இன்னய்யா, பெரிய மன்சா!'' ஒரு ரௌடி விளக்கம் கேட்டான். ''இது உன் டிக்கெட் என்கிறதுக்கு இன்னய்யா ஆதாரம்?''

''ஆதாரமா கேட்கிறே?'' என்று சீறினன் சேது. ''இதோ, பார் ஆதாரம்'' என்று டிக்கெட்டைப் பிரித்துக் காட்டினன். கைவிரல் ரேகையிருந்தது. ''காலேயிலே சப் இன்ஸ்பெக்டர் மணி என் விலாசத்தை எழுதச் சொல்லி ஒழுகுகிற பேனவைத் தந்தார். எழுதி முடிச்சு டிக்கெட்டைப் பையிலே போடறப்ப என் கை ரேகை பதிஞ்சு போயிருக்கு. இன்னும் என்னய்யா வேணும்?''

வஸ்தாது கும்பல் கோதாவில் இறங்க, சேது சீறி நிற்க, பாமாவும், மைதிலியும் நடுங்க, அங்கே வந்த போலீஸ்காரர்கள் ரௌடிகள் ஐந்து பேரையும் இழுத்துக் கொண்டு போனர்கள். போகிற போக்கில்...

''டேய் கஸ்மாலம்! மாமியார் வூட்டுக்கா எங்களே அனுப்பி வைக்கிறே?'' என்று சாபமிட்டான் ரௌடி. ''எங்க வாத்தியார் கவனிச்சுப்பாருடா உன்னே!''

''சரிதான் போடா சோமாறி'' என்றவன் போலீஸ்காரர்களிடம் ''அவங்களைக் கொண்டு போய் ஸ்டேஷனில் வையுங்க. சாயங்காலம் சினிமா விட்டதும் வந்து ரிப்போர்ட் எழுதித் தரேன்'' என்றுன். பிறகு சேது, மைதிலி, பாமா பின்தொடர நடந்தான்.

சப் இன்ஸ்பெக்டர் மணியின் பெயர் அவனுக்குச் சலுகை அளித்தது.

## மாலே மணி ஆறடிக்கிறது

**ம**வுண்ட் ரோட்டில் ஹோட்டலுக்கு வெளியே...எங்குமே டாக்சி கிடைக்கவில்லை. ஒரு சிலர் 'அடையாறு' என்றதுமே 'வராது ஸார்!' என்று போய்விட்டார்கள்.

பார்த்த சினிமாவைப் பற்றி விமரிசனம் செய்தவாறு நடந்து வெலிங்டனைக் கடந்து, மீட்லாண்டும் தாண்டிப் போன பின் சேது கேட்டான். ''அடையாறு போக வேண்டியது அவசியம்தானு?''

''என் பழைய க்ளாஸ்மேட் ஒருத்தி ப்ரேமா தேவின்னு பேர். நாலாம் பாரத்தில் எங்களோட படிச்சவள். அவளோட சினிமா ஸ்டார் அக்கா அவளே ஸ்விட்ஜர்லாந்துக்குப் படிக்க அனுப்பிவிட்டாள். திரும்ப வந்திருக்கிறளாம். ஹாஸ்டலே விட்டு வெளியே வந்த கையோடு அவளேயும் பார்த்துவிட்டால் தேவலே. இல்லாவிட்டால் வார்டன் ருத்ரம்மாவின் பர்மிஷன் இலேசில் கிடைக்காது.''

''அது சரி...ஆனல் டாக்ஸி'' என்றவனின் கண்கள் வியப்பால் விரிந்தன. ''டாக்ஸி'' என்று கூவிக்கொண்டு, உட்ஸ் ரோடு மூலேயில் நின்றிருந்த டாக்ஸியை நோக்கிப் போனர்கள். ஏறி அமர்ந்த பிறகுதான் கவனித்தார்கள், அந்தக் கரடு முரடான டாக்ஸி டிரைவரின் முகம் கடுவன் பூனே மாதிரி இருப்பதை. முகத்தில் நெற்றிக்கும், வலது கன்னத்துக்குமாக ஒரு பெரிய அறுப்பு. ''எங்கே போவணும்?'' என்ற அவனது கரகரப்பான குரலே நடுங்க வைத்தது.

''அடையாறு'' என்றர்கள் கோரஸில்.

லஸ் வழியே மயிலாப்பூரையும், பிறகு மந்தவெளியையும் கபாலி டாக்கீஸையும் கடந்து அடையாறு மேம்பாலத்தையும் தாண்டிப் போகும்போது சேது கேட்டான்: ''எந்த வழியே போகணும்?'' என்று.

பதில் சொல்ல மைதிலி வாயைத் திறக்கு முன் டிரைவர், ''எனக்குத் தெரியும் வழி. வாயை மூடிக்கிட்டு வாங்க'' என்றுன். விக்கித்துப் போய் மூன்று பேர்களும் விழித்துக் கொண்டிருக்கும்போதே வண்டி எல்லியட்ஸ் பீச்சுக்குப் போகும் பாதையில் ஓடிந்து திரும்பி வேகமாக ஓடி மணல் வெளியை அடைந்ததும் திரும்பி நின்றது. ''போலீஸிலே ரிப்போர்ட் கொடுத்திட்டியா?'' என்று அந்த டிரைவர் கேட்டபோதுதான் மத்தியான நிகழ்ச்சி நினைவுக்கு வந்தது சேதுவுக்கு. ''அட ராமசந்திரா! மறந்தே போய் விட்டேனே!'' என்றவன் பதறினன். ''விடு விடு ட்ரிப்ளிகேன் போலீஸ் ஸ்டேஷனுக்கு விடு'' என்றுன்.

அந்த அறுப்புக்காரன் சிரித்த சிரிப்பு, குடலேப் பிசைந்தது. ''டாய் பையா!




● ● ● ● ● ● ● ● ● ● ● ● ●

கட்டழகி லின்டாவை மணக்க விரும்பினர், அலன் ரப்ஃமேன் என்ற மாணவர். அவளது விருப்பத்தைக் கேட்டுக் கடிதம் ஒன்று எழுதினர். ஆனல் அதை அவளுக்குத் தபாலில் அனுப்பக் கூச்சம், தயக்கம். அவர்கள் வாழ்ந்தது அமெரிக்காவில். இருவரையும் பிரித்த தூரம் ஐந்நூறு மைல்கள். அவர் கடிதத்தைப் பாட்டில் ஒன்றில் வைத்து மூடி நாட்ஸன் விரிகுடாவில் கப்பலிலிருந்து கடலில் அதை மிதக்க விட்டுவிட்டார்.

பாட்டில் அட்லாண்டிக் சமுத்திரத்தில் 11 மாதங்கள் மிதந்தது. சுமார் 4000 மைல்கள் கடந்து பிரயாணம் செய்தது. இறுதியாக மேற்கு இங்கிலாந்தில் உள்ள கார்ன்வால் கடற்கரையில் ஒதுங்கியது. விடுமுறை நாட்களைக் கழிக்கக் கடற்கரைக்குச் சென்ற ஒருவர் பாட்டிலே எடுத்துப் பார்த்துக் கடிதத்தை அதில் கண்ட முகவரிக்கு (அமெரிக்காவுக்கு) விமானத் தபாலில் அனுப்பி வைத்தார். கடிதத்தைப் பார்த்த லின்டா தன் சம்மதத்தைத் தெரிவித்துக் காதலனுக்குத் தந்தி கொடுத்தாள். அவர் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவே யில்லே.

ஆதாரம்: இந்தியன் எக்ஸ்பிரஸ் ★ அனுப்பியவர்: ''ஆரார்''




## எப்படித் தீர்மானிக்கலாம்?

ஒரு தியேட்டரில் ஒரு படம் திரையிடப்பட்ட போது கூட்டமே இல்லை. தியேட்டர் முதலாளி படத்தை எடுத்துவிட முடிவு செய்தார். இது கதா நாயகனுக்குக் காந்தது. படத்தை எடுக்க வேண்டாம் என்று கேட்டுக் கொண்டார்.

''பட்ம்தான், பொது மக்களுக்குப் பிடிக்க வில்லையே? தொடர்ச்சி யாகப் போடுவதால் என்ன பயன்?''

''பொதுமக்களுக்குப் பிடிக்கவில்லை என்று எப்படிக் கண்டீர்? இன்னும்தான் யாரும் பார்க்கவே வரவில்லையே.....?''

-'மு. மு. கா'.

---

இந்த மன்னருக்கிட்டயா உன் வேலையைக் காட்டறே? ராஸ்கோல்! உசிரோட திரும்பிப் போனுத்தானேடா ரிப்போர்ட் பண்ணுவே!'' என்று இடுப்பிலிருந்து முழ நீளக் கத்தியை எடுத்து நீட்டியதும் வீலென்று அலறிவிட்டார்கள், பாமாவும், மைதிலியும்.

''தே! சும்மா இடுங்க!'' என்று அவர்களை அதட்டி விட்டு, ''ஏண்டா டாய், என்னை இல்லு இருந்தா என் ஆளுங்களைக் கூண் டோட மாமியார் ஊட்டுக்கு அனுப்புவே! இருக்கிற துட்டு, நகையெல்லாம் ஒழுங்கா எடுத்துக் கக்குங்க. இல்லே, ஒரே சதக்...'' என்றவன் திரும்பிப் பார்த்தான். பிறகு, ''ஏதோ கும்பல் வருது. மூச்சு விட்டீங்க சதக் சதக்குன்னு குத்திக் கிசிப்பிடுவேன் இசி'' என்று பயமுறுத்தினான்.

காலரை நிமிர்த்தி விட்டுக் கொண்டான் சேது. ''மத்தியானம் உன் சிஷ்யப் பசங்களை அனுப்பி வச்சேன். இப்ப உன்னேயே கூட அனுப்பி வைப்பேன்'' என்றான் தைரியமாக.

அவன் ஆத்திரத்துடன் கத்தியைச் சேது வின் வயிற்றில் அழுத்திக் கொண்டான். ''கும்பல் நெருங்குது. ஏதாவது சத்தம் போட்டீங்க, க்ளோஸ்.''

''சுத்த முட்டாள் நீ!''—சேது சொன்னான். ''நாங்க பேயறைஞ்சவங்க போல இருந்தாத் தான் வர்றவங்களுக்குச் சந்தேகம் வரும். சிரிச்சுப் பேசிக்கிட்டிருந்தாத்தான் சாதாரண மாக நினைக்கப் போயிடுவாங்க! என்ன மைதிலி! சிரிச்சுப் பேசேன்!''

அவன் கண்ணடித்ததைப் புரிந்துகொண்ட மைதிலி, சைக்கிள்கள் காரைக் கடக்கும் போது கலகலவென்று சிரித்தாள். பாமா வுக்கும் கிசுகிசு மூட்டிச் சிரிக்க வைத்தாள். அவனது கணக்குச் சரியாகவே இருந்தது. கன்னி சிரித்து, திரும்பிப் பாராத மாணவரும் உண்டோ?

டாக்ஸியைக் கடந்து போனவர்கள் திரும் பிப் பார்த்து, ''அடேடே! சேது...மைதிலி... பாமா!'' என்று கூவிச் சட்டென்று இறங்கி வந்தார்கள். பட்டென்று கத்தியைத் தட்டி விட்ட சேது, அறுப்புக்காரனை மடக்கிப் பிடித்துக் கொண்டான். அடுத்துச் சில நிமிட நேரம் நடந்த ரகளையிலே குற்றுயிரும் குலை யுயிருமாகிவிட்ட அறுப்புக்காரனைக் கார் 'டிக்கி'யில் உருட்டி விட்டார்கள்.

''நீங்க...'' 'யமன்'களைப் பார்த்துக் கேட் டாள் மைதிலி. ''எப்படி கரெக்டாக இந்த இடத்துக்கே வந்து சேர்ந்தீங்க?''

''அதுவா! எப்பவும் என்ன மரீனு ஸ்விம் மிங்பூல்! மாறுதலா யிருக்கட்டுமேன்னு கடலில் குளிக்க வந்தோம்'' — சுரேஷ்குமார் சொன்னான். ''நல்ல வேளையாய்ப் போச்சு. சரி சரி; எனக்குக் கொஞ்சம் கார் டிரைவிங் தெரியும். டாக்ஸியை நானே ஓட்டி வரேன். உட்காருங்க!''

''ஐயையோ!'' அலறிவிட்டார்கள் மைதிலி யும் பாமாவும். ''அவ்வளவு தைரியம் எங் களுக்குக் கிடையாது. நாங்க சைக்கிளிலே வர்றோம்.''

''ஒன்ஸ்...ஏ...பாப்பா'' பாடியவாறு சைக்கிள்கள் பின்தொடர, கோணல் மாண லாகக் கோடு போட்டவாறு டாக்ஸி போக, போலீஸ் ஜீப் ஒன்று வழிமறிக்க, இறங்கி வந்தார் இன்ஸ்பெக்டர் மணி. ''நான் சென்ஸ்! என்ன இது? உங்களுக்கு ஊர்வலம் வர டாக்ஸியைத் திருடிக் கொண்டா வரு கிறது. இந்த டாக்ஸியைக் காணுமென்று புகார் வந்தது. எல்லாரும் நேரே ஸ்டேஷ னுக்கு வாங்க.''

''மிஸ்டர் மணி!'' காருக்குள்ளிருந்து குதித்தான் சேது. ''உங்களுக்குச் சரியான விருந்து கொண்டு வந்திருக்கோம்.'' எதிர் பாராத விதமாக அவனைக் கண்டு திடுக் கிட்டு நின்ற மணியை இழுத்துப் போய், டிக்கியைத் திறக்க, ''ஐயையோ...'' என்று அலறினர் மணி. ''வெறும் திருட்டுக் கேஸ் என்று பார்த்தால் இதென்ன பெரிய கிரைம் கேஸில் முடியும் போலிருக்கே! யாரை இப்படி அடித்துப் போட்டிருக்கீங்க?'' குனிந்து ஆளைப் பார்த்தவர், ''ஆ! மன்னுரா? இவனே யும், இவனுட்களையும் தேடித்தான் சேலம் போக இருந்தேன்! மத்தியானம் யாரோ இவன் ஆட்களைப் பிடிச்சுக் கொடுத்தாங்க'' என்றார்.

''நான்தான்... நான்தான்....''—மகிழ்ச்சி யுடன் குதித்தான் சேது. நடந்ததை விஸ் தாரமாகக் கூறிவிட்டுப் புகார் கொடுக்க மறந்து போனதற்கு மன்னிப்பும் கேட்டுக் கொண்டவன் ஆவலுடன் கேட்டான்: ''உங்களுக்குக் கேஸ் பிடித்துத் தந்தேனே! மெடல் தருவார்களல்லவா போலீஸில்?''

''ஷ்யூர்.... ஷ்யூர்... ஸ்டேஷனுக்கு வந்து ரிப்போர்ட் கொடுத்துவிடு!''

படபடவென்ற கைதட்டலுக்கும் இரைச்ச லுக்குமிடையே தன்னையறியாமல் சேதுவின் பக்கத்தில் வந்து நின்றாள் மைதிலி.

''புறப்படுங்கள்!'' என்று கிளம்பிய மணி, போகிற போக்கில் சேதுவைக் கேட்டார்: ''இவன்தான் உன் ஸ்வீட் ஹார்ட்டா?''

திருதிருவென்று விழித்தான் சேது.

# யாத்திரை

ஏ.எஸ்.ராகவன்

இன்பத்துக்கோர் எல்லை காணில் துன்பமே விளைகிறது. நாதத்தின் நலிவிலும் தாளத்தின் தடையிலும் பண்ணின் பழுதிலும் புகழின் புரையிலும் கூட எதிர் மறைகளே விளைகின்றன; முறுகிய வெல்லப் பாகின் சுவை கெட்டுப் பல்லுக்கு அடங்காது போவது போல.

கோபாலை வெளியேற்றி விட்ட பிறகு பாருக்குட்டி பொல பொல வென்று கண்ணீர் உகுத்தாள். ஓர் உணர்ச்சியின் எல்லையை எட்டி விட்ட பிறகு, எதிர்மறையான மற்றோர் உணர்ச்சியை நோக்கி அவளுடைய நெஞ்சு சரிந்து விட்டது. வெறுப்பின் வெறியை உமிழ்ந்ததுமே அவளுடைய உள்ளத்தில் பழைய அன்பே சுரந்து விட்டது. "கோபாலைத் துரத்தி அடித்து விட்டேனே, ஜெகு! அவரால் அல்லவா நாங்கள் இந்த ஊருக்கு வந்தோம்! அவரால் அல்லவா நீங்கள் எனக்கு அறிமுகமானீர்கள்? எனக்கு ஏன் இப்படிப் புத்தி போயிற்று? ....ஜெகு, நான் பைத்தியமாக மாறி விட்டேனா? சொல்லுங்கள்" என்று புலம்பினாள்.

ஜெகுவுக்கும் பைத்தியம் பிடிக்காத குறைதான். கோபால் வெளியேறியதைக் கண்டு, அவனைப் பாருக்குட்டி வெளியேற்றியதைக் கண்டு அவன் பதைத்தே போனான். இப்போது அவள் புலம்பாதிருந்தால் ஜெகுவும் வெளியிருப்பானோ, என்னவோ! அந்த இரு நட்புகளுக்கிடையே எது உயர்ந்தது என்பதை எடை போட வேண்டிய அவஸ்தையை நல்லவேளையாகப் பாருக்குட்டி வைக்கவில்லை. "அழாதே, பாருக்குட்டி. நான் போய்க் கோபாலை அழைத்துக் கொண்டு வருகிறேன்" என்றான்.

"அவர் வருவாரா?" என்று சந்தேகத்துடன் கேட்டாள் அவள்.

"அவர் ஒரு வொண்டர்ஃபுல் நண்பர். தெரியுமா? உன் கோபத்தை அவர் பொருட்படுத்த மாட்டார்."

"ஊஹூம். அவர் வரமாட்டார், ஜெகு."

"நான் போய்க் கூப்பிட்டுமா வராமல் இருப்பார்?" கோபாலிடம் தனக்குள்ள அன்பின் செல்வாக்கை ஜெகு பெருமையாக வெளியிட்டான்.

பாருக்குட்டிக்கு நம்பிக்கை வந்தாற் போலிருந்தது. உண்மைதான். ஜெகுவிடம் கோபால் உயிராய் இருக்கிறார். "சீக்கிரம் போய் வாருங்கள்.... புறப்படுங்கள்.... பாருக் குட்டியின் கோபத்துக்கெல்லாம் அர்த்தமில்லை என்று கோபாலிடம் சொல்லுங்கள்" என்றாள்.

ஜெகு புறப்பட்டான். அவன் போவதையே பார்த்தவாறு பாருக்குட்டி நிலைப் படியிலேயே உட்கார்ந்து விட்டாள். கோபால் வரும் வரையில் அங்கிருந்து அவள் நகரவும் மாட்டாள்!

அன்பைத் தவிர வேறு எதுவும் அறியாத குழந்தை அல்லவா அவள்! தாற்காலிகமாக அந்த அன்பு வெள்ளத்திலே இந்த வெறுப்புக் குமிழி வட்டமிட்டது. வட்டமிட்ட குமிழிலே பலப் பல நிறங்கள் தெரிந்தன. குமிழி உடைந்ததுமே அந்த அன்பிலேயே அது கலந்து விட்டது. அன்பே வெறுப்பாகிப் பின் வெறுப்பே அன்பாகி விட்டது. இந்த மாற்றம் அன்புள்ளங்களுக்கு இலக்கணம் ஆகும். குணம் என்னும் குன்றேறி நின்றவர்களின் வெகுளியை ஒருகணப் பொழுது கூடத் தடுத்து நிறுத்த இயலாதல்லவா! பார்க்கப் போனால் குணம்தானே சீற்றமாய் வெடித்தது!

ரோஹிணி பயந்து விட்டாள். கோபால் போய்த் தொலைந்தான் என்று எண்ணி மகிழ்ந்தவள் அவனை அழைக்க ஜெகு போனதும், அவன் திரும்பி வந்தால் தன்னை என்ன செய்வானோ என்று நடுங்கினாள். அவனுடைய திட்டத்தை ஜெகுவிடம் கூறி எச்சரித்ததற்கு என்ன வெகுமதி கிடைக்கப் போகிறதோ! எங்காவது ஓடி விடலாமா என்று நெஞ்சு பரபரத்தது. அவள் நினைத்தது வேறு. நடந்தது வேறு. ஒரு சூதும் அறியாமல் தகாத பல நட்புக்களை வலிய ஏற்று இப்படித் தெருவையே பார்த்துக் காத்திருக்கும் அசட்டுப் பெண்ணான பாருக்குட்டிக்கு எதுவுமே விளங்காதோ! போயும் போயும் கோபாலை நம்புகிறாளே. அவனுடைய உண்மை உருவம் ரோஹிணிக்கல்லவா தெரியும்! எதற்கும் அஞ்சாத கொடியவன் அவன். இதைப்போல் எத்தனையோ உறவுகளை, எத்தனையோ பெண்களைப் பார்த்தவன். அந்த உறவுகளிலிருந்து வெட்டிக் கொண்டு வெளியேறியவன். ரோஹிணி அவனுடைய கையாளாக இருந்தவள் தானே! இந்த வீட்டில்கூட அவளுடைய ஸ்தானம் வெறும் வேலைக்காரி அல்ல. வெளிப் பார்வைக்கு அவ்வாறு இருந்து கொண்டு கோபாலின் தீய நோக்கத்துக்கு அவள் துணை நிற்க வேண்டும் என்றுதான் ஏற்பாடு.

பாருக்குட்டியைப் பார்த்த போது ரோஹிணிக்கு நெஞ்சு பொருமிற்று. என்னவோ, அவளைக் காப்பாற்ற முடியாதா என்கிற தாபம் வந்து விட்டது. உளவு பார்க்க வந்தவள் உறவு கொண்டு விட்டாள். செவிலித் தாயாக ஒட்டுறவை மேற்கொண்டு விட்டாள். பாருக் குட்டியை ஏமாற்ற அவளால் ஆகாது. செய்த பாவங்களே மலையாய் நிற்க, இந்தச் சிசுபலி வேறு?

"கோபால் வருவாரா, மாட்டாரா?.... சொல், ரோஹிணி.... அய்ய, ஏன் அப்படிப் பார்க்கிறாய்?" என்றாள் பாருக்குட்டி.

ரோஹிணி பெருமூச்சு விட்டாள். ''கோபாலு வந்தாலும் தீமைதான். வரா விட்டாலும் தீமைதான்'' என்றாள்.

''உக்கும்.... ஏன் அப்படிச் சொல்றாய், ரோஹிணி?.... நான்தானே அவரை விரட்டி அனுப்பினேன் ?''

''நீ விரட்டவில்லையம்மா. உன்னிடமிருந்த காளி விரட்டினாள். இல்லாவிட்டால் ஒரு பெண்பிள்ளைக்குப் பயந்து ஓடுகிற ஆள் இல்லே கோபாலு. அடியம்மா, நீ சீறினதைப் பார்த்து எனக்குக் கண் கூசிப் போச்சு, தாயே.''

'' கோபத்திலே சொன்னால் ஓட வேண்டுமோ ?''

''பாருக்குட்டி, நடந்தது நன்மைக்குத் தான்னு எனக்குத் தோணுது.... எழுந்திரிச்சி உள்ளே போ.... இவனெல்லாம் இங்கே கால் வைக்கக் கூடாது.''

''ரோஹிணி!'' என்று கூவினாள் பாருக்குட்டி. அவளுடைய முகம் வெந்து விட்டது. ''நீ போ இங்கிருந்து. எனக்குத் தெரியும், நீ யார் என்று. ஜெருவிடம் நீதானே, கோபாலைப் பற்றிக் கோள் சொன்னாய்?''

''உள்ளதைச் சொன்னேன்.''

''பொய். நீ பொய் சொல்றாய்.''

''சாமி சத்தியமா நான் பொய் சொல்லலேம்மா. உனக்கு ஒன்றும் தெரியாது. கோபாலு ஜெருவையும் அந்தத் தொழிற் சங்கத்து ஆளையும் ஒழிக்கத் திட்டம் போட்டது.''

பாருக்குட்டிக்கு இதைக் கேட்டு அடக்க முடியாத கோபம் வந்துவிட்டது. கோபால் வெளியேறியதற்குத் தன்னுடைய சீற்றம் காரணமல்ல, ரோஹிணியின் துரோகமே காரணம் என்று எண்ணினாள். ''போ, இங்கிருந்து...... உன் பேச்சை யெல்லாம் நான் கேட்கமாட்டேன்'' என்று இரைந்தாள்.

ரோஹிணிக்குச் சிரிப்புத்தான் வந்தது. ''என்னையாம்மா, போகச் சொல்றே ? பைத்தியக்காரப் பொண்ணாக இருக்கியே ! தலைக்கு மேலே வெள்ளம் போவுது. அது தெரியாம......'' என்றாள்.

பாருக்குட்டி வேகமாக அவள் அருகே வந்து, ''நீ போறியா, இல்லாவிட்டால்....?'' என்று பல்லைக் கடித்தாள்.

''மாட்டேன்'' என்றாள் ரோஹிணி.

''மாட்டாயா?.... போன்னா போக மாட்டாய்.....? நீ போ.... போ.... போ....''

ரோஹிணியின் கையைப் பற்றி அவளை வெளியே தள்ள முயன்றாள் பாருக்குட்டி. திமிறிக் கொண்டு உள்ளே ஓட முயன்றாள் ரோஹிணி. ஒருத்திக்கு ஒருத்தி சளைக்காமல் அவர்கள் நிகழ்த்திய போராட்டம் தெருவில் போவோர் வருவோர்க்கு வேடிக்கைக் காட்சியாகி விட்டது.

''என்னம்மா இது? உங்களுக்கே நல்லா இருக்குதா? போடுகிற சண்டையை வீட்டுக்குள் போய்ப் போடுங்களேன்'' என்றார் ஒருவர்.

ரோஹிணி அவரைப் பார்த்து விளக்கமாகவே வழக்குரைக்கலானாள். ''அய்யா, இது ஓர் அப்பாவிப் பொண்ணு. நான் ஒடைச்சுச் சொல்றேனே, இங்கே கோபால்னு ஓர் ஆள் இருக்காரு. கெட்ட மனுசன். எதுக்கும் அஞ்சாத மனுசன். அவனுக்கு இந்தப் பெண் மேலே ஒரு கண் இருக்குது.''

அப்படி ஏதாவது ஒரு சுவையான விவகாரம் இருக்கும் என்பதைத் தாம் ஊகித்ததாக அந்த மனிதர் தலையை ஆட்டினார்.

பாருக்குட்டி மறுத்தாள். ''பொய். கோபாலுக்கு என் மேலே ஒரு கண் இல்லே. இரண்டு கண் இருக்கிறது'' என்றாள்.

ரோஹிணிக்கு அவளுடைய பதில் சாதகமாகப் போயிற்று. ''பார்த்தீங்களா, அய்யா இரண்டு !கண் இருக்குதாம்.... நான் சொல்றது நெசமா பொய்யான்னு பாருங்க....





# ஜலதோஷத்தை எதிர்க்க

# வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்

சிவப்பு லேபில்

சாப்பிடுங்கள்



சாதாரண ஜலதோஷம்கூட அபாயகரமானது தான். அது உடலைப் பலவீனப்படுத்தி, நோய்களை எதிர்க்கும் சக்தியைக் குறைத்து, நோய்கள் எளிதில் பிடிக்கும் நிலையை ஏற்படுத்துகிறது. வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் மூன்று விதங்களில் அளிக்கும் பலன் ஒப்பற்றது. அதிலுள்ள கிரியோஸோட் மற்றும் க்வயகால் ஜலதோஷத்தை குணப்படுத்துகிறது. இரும்பு சத்து, பலமளிக்கும் சத்துக்கள், மால்ட் மற்றும் ஸ்ப்ளீன் சாரங்கள், பசியைத் தூண்டுகின்றன, இழந்த சக்தியை ஈடு செய்கின்றன, குணமான நோய் மீண்டும் வராமல் தடுக்கும் சக்தியை ஊட்டுகின்றன.

எல்லாக் கால நிலைகளிலும் நோய்களை எதிர்க்கும் சக்தி பெற சிவப்பு லேபிலுள்ள வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் சாப்பிடுங்கள்.








வாட்டர்பரீஸ் காம்பவுண்டில் கலந்துள்ள கிரியோஸோட் மற்றும் க்வயகால் சுவாசக் குழாய்களில் கிருமிகளால் அபாயம் ஏற்படாமல் பாதுகாக்கின்றன. கபத்தை இளக்கி வெளியேற்றி சுவாசப் பைகளை சுத்தமாக வைக்கின்றன. இருமல், ஜலதோஷம், சுவாசக் குழாய்களில் கபம் கட்டுதல், காச சம்பந்தமான உபாதைகள் முதலியவற்றை எதிர்க்கவும் வராமல் தடுக்கவும் உதவுகின்றன.

## வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்

**இருமல், ஜலதோஷம், சுவாசக் குழாய்களில் கபம் கட்டுதல், காச சம்பந்தமான உபாதைகள் முதலியவற்றை எதிர்க்கும் சக்தியை உடலுக்கு அளிக்கிறது**

வார்னர் ஹிந்துஸ்தான் லிமிடெட், பம்பாய்

இந்தப் பெண்ணோட இரண்டு கண்களையும் அந்த மனுசன் பிடுங்கப் போறான்.''

''என் கண்களையா?'' பாருக்குட்டி சிரிப்பை அடக்கமாட்டாமல் கலகலவென்று நகைத்தாள்.

''உன் கண்ணைத்தான். சிரிக்காதேம்மா... உன்னோட ஒரு கண் ஜெகு. இன்னொரு கண் அந்தத் தொழிற் சங்கத் தலைவரா யிருக்காரே, அவர் பேர் என்னது...ஆங்... நாராயணன்... அதையும் ஜெகுவையும் கோபால் தீர்த்துக் கட்டாமல் போகாது... ஆமாம்.''

ரோஹிணி துணிந்து விட்டாள். பலர் முன் விவரமாகவே சொல்லி விட்டாள்.

அந்தக் கும்பலில் நாணுவின் தந்தை சுந்தரமும் இருந்தார் என்பதை அவள் அறிவாளா!

வேலூரிலிருந்து கோவைக்கு வந்தும் மகனைக் காண முடியாமல் ஏமாற்றமுற்று மேற்கே கிளம்பிப் போனவர், அப்போதுதான் கோவைக்குத் திரும்பிவந்துகொண்டிருந்தார். நாணுவை இம்முறை கட்டாயம் பார்க்கலாம் என்று எண்ணி வந்தவருக்கு ரோஹிணியின் பேச்சைக் கேட்டதும் பீதி உண்டாகி விட்டது. விதி நடு வழியிலேயே ஆபத்தைக் காட்டி அவரை எச்சரிக்கிறதோ! ஒருவேளை அவனைக் காப்பாற்றத்தான் தக்க தருணத்தில் அவர் வந்தாரோ! இல்லாவிட்டால் பஸ் நிலையத்திலிருந்து இந்தக் குறுக்குச் சந்து வழியாக அவர் வருவாரோ? வந்தது எவ்வளவு நல்லதாகப் போயிற்று!

நாணுவைப் பற்றித்தான் ரோஹிணி குறிப்பிட்டாள் என்பதில் அவருக்குச் சந்தேகமில்லை. கூடவே ஜெகுவின் பேரையும் அவள் சொல்லவில்லையா? அந்த ஜெகு இங்குமா குடி கெடுக்க வந்து விட்டான்!

ஓட்டமும் நடையுமாக விசுவநாதனின் வீட்டை அடைந்தார் சுந்தரம். மகனை உடனே பார்த்து எச்சரித்துவிட வேண்டும், அவனை இந்த ஆபத்திலிருந்து எப்படியாவது காப்பாற்றிவிட வேண்டும் என்ற வேகம் அவருக்கு இருந்தது.

அவரைக் கண்டதும் லட்சுமி அம்மாள் ''வாருங்கள், எப்போது வந்தீர்கள்?'' என்று கேட்டாள்.

''வந்து கொண்டே இருக்கிறேன், அம்மா. நாணு எங்கே?''

''எங்கோ புறப்பட்டுப் போனான். கல்யாணியின் பிள்ளை ஜெகு வந்திருந்தான். இரண்டு பேருமாகத்தான் போனார்கள். அது சரி, உங்கள் உடம்பு ஏன் இப்படி இளைத்து விட்டது?''

''என்னவோ உடம்பு. இது இருந்து இனி என்ன ஆக வேண்டும்? ஜெகுவும் நாணுவுமா போயிருக்கிறார்கள்? அம்மா, நாணுவுக்கு ஆபத்து வந்திருக்கிறது.''

''ஆபத்தா?'' லட்சுமி அம்மாளுக்கு மூச்சு நின்றுவிட்டாற் போலிருந்தது. ''என்ன சொல்கிறீர்கள்? குழந்தைக்கு என்ன ஆபத்து? அவன் ஒரு தப்பு வழிக்கும் போகப்பட்டவன் இல்லையே? என் வீட்டுச் சாப்பாடு அப்படி வழி காட்டாதே'' என்றாள்.

சுந்தரம் விரிவாக ரோஹிணி கூறியதை அவளிடம் சொன்னார்.

அதைக் கேட்ட பிறகு லட்சுமி அம்மாள் சிரித்தாள். ''அந்தப் பெண் பாருக்குட்டி இப்படித்தான். ஹா, ஹூ என்பாள். கடைசியில் ஒன்றும் இருக்காது. நீங்கள் பயந்து விட்டீர்களா என்ன?'' என்றவாறே உள்ளே போனாள்.

சுந்தரத்துக்கு அவளுடைய அறியாமையைக் கண்டு வருத்தமும், அலட்சியத்தைக் கண்டு கோபமும் உண்டாயின. அவருடைய நெஞ்சு பதைப்பதை அவள் அறியாமல் இருக்கிறாளே! சிரிப்பதற்குரிய விஷயமா இது?

காப்பியுடன் வந்த லட்சுமி அம்மாள் அவருடைய முகத்தில் பயக் களை மாறுதிருப்பதைக் கண்டு, ''இதோ பாருங்கோ, குழந்தைக்கு ஒரு ஆபத்தும் வராது. அவனைத் தாயார் காப்பாற்றுவாள். காப்பி சாப்பிடுங்கள். இல்லா விட்டால் ஒரு லஞ்ச வழக்கிலே மயிரிழையில் தப்பியிருப்பானா?... அவனை நீங்கள் பார்த்ததில்லை. மற்றப் பையன்களைப் போலா இருக்கிறான் குழந்தை? நாணுக் கண்ணுக்கு ஆபத்தே வராது'' என்றாள் தீர்மானமாக.

என்ன தைரியம்! எத்தனை நம்பிக்கை! சுந்தரத்துக்குப் பெருமை பொங்கிற்று. இவ்வளவு வாத்சல்யமும் உறுதியும் அவனுக்கு வாய்த்தனவே, அது சுந்தரி செய்த பூஜா பலன்தான். காப்பியை அவசரமாக வாங்கிக் குடித்தார். கூடத்தில் கண்ணுக்கு எதிரே தெரிந்த நாணுவின் புகைப்படத்தைப் பார்த்தார். அவனும் சுந்தரமா இருந்தான்! ஊஹூம். அசல் சுந்தரியே தான்—அங்க அமைப்பு, முகஜாடை, பார்வை எல்லாம்.

ஒரு பெருமூச்சு திமிறிக் கொண்டு வந்தது.

'நீங்கள் அவனைக் காப்பாற்றப் போவதில்லையா? நிம்மதியாக உட்கார்ந்து விட்டீர்களே!' என்று யாரோ கேட்டாற் போலிருந்தது. அவர் திடுக்கிட்டுத் தலை நிமிர்ந்தார். புகைப்படத்திலிருந்து நாணுதான் கேட்டானோ! நாணுவுக்குள்ளிருந்து சுந்தரிதான் கேட்டாளோ! நெஞ்சு படபடத்தது. கை கால்கள் துடித்தன. லட்சுமி அம்மாள் தந்த தைரியம் போயே போய்விட்டது.

அவர் கிளம்பி விட்டார்.

''அடேடே, எப்போது வந்தீர்கள்? எங்கே புறப்பட்டு விட்டீர்கள்?'' என்று கேட்டவாறே எதிரே வந்தார் விசுவநாதன்.

''நாணுவுக்கு ஆபத்து!'' என்றார் சுந்தரம்.

''யார் சொன்னது?''

''நான் காதால் கேட்டேன்.''

''ஆபத்து வந்தால் வரட்டுமே! அதிலே தப்பிக்கத் தெரியாத பிள்ளை என்ன பிள்ளை?'' என்று தமது வழக்கமான பாணியில் ஆரம்பித்துவிட்டார் விசுவநாதன். ''இப்படித்தான் லட்சுமணன் துடித்தான். ராமனுக்கு ஆபத்து வந்துவிட்டது, ராஜ்யத்தை பரதன் பிடுங்கிக் கொண்டு விட்டான் என்று பதறினான். ஆனால் ராமனுக்கு வந்தது ஆபத்தா? அது லோக உபகார சூட்சமம் அல்லவா?... கோசலைகூடத்தான் வழி பார்த்திருந்தாள். மகன் சர்வாலங்கார பூஷிதனாக, பட்டாபி

எட்டிப் பிடிக்க முடியாதது



- பு. மயில்வாகனன்

வேஷக் கோலத்தோடு வருவான், ஆரத்தி சுற்றுவாம் என்று... அவன் எந்தக் கோலத்திலே வந்தான், சொல்லுங்கள்....அடியே லட்சுமி, அந்தப் பாட்டைச் சொல்லு!''

லட்சுமி அம்மாள் பாடினாள். ''குழைக்கின்ற கவரி இன்றிக் கொற்றவெண் குடையும் இன்றி. இழைக்கின்ற விதி முன் செல்லத் தர்மம் பின் இரங்கி ஏங்க...''

''கேட்டீர்களா?'' என்றார் விசுவநாதன்.

சுந்தரம் கேட்கத்தான் கேட்டார். நாணுவுக்கு நேர்ந்த ஆபத்தின் தத்ரூபமான படப்பிடிப்பாகத்தான் அது தோன்றிற்று. கவரி இல்லை. வெண் குடை இல்லை. விதி முன்னால் செல்கிறது. தர்மம் அழுதபடியே பின்னால் வருகிறது. பாடலை அவர் பார்த்த கோணமே வேறு. விசுவநாதன் பார்த்த கோணம் வேறு.

''நான் போயாக வேண்டும்'' என்றவாறு சுந்தரம் எழுந்து விட்டார்.

விசுவநாதன் அதற்கு மேல் தடுக்கவில்லை. ''நல்லது...'' என்றார். போகிறவர் போகட்டும். அவரால் தடுக்க இயலுமா?

சுந்தரம் வெளியே வந்தார். வேறு யாரும் தடுப்பதற்குள் அங்கிருந்து ஓடிவிட வேண்டுமென்கிற வேகம் அவருக்கு. ஆபத்து என்று தெரிந்த பின்னும் அதை அவர், விளக்கமாகக் கேட்டு வந்து சொல்லியும்கூட விசுவநாதனும் லட்சுமி அம்மாளும் கதை பேசுகிறார்களே! என்ன இருந்தாலும் பெற்ற பிள்ளை வேறுதான். வளர்த்த பிள்ளை வேறு தானே! அவருடைய வேதனையைப் புரிந்து கொள்ளாமல் பாட்டுப் பாடுகிறார் விசுவநாதன்! ஹும்!

புறப்பட்டுவிட்டாரே தவிர, நாணுவை அவர் எங்கே தேடுவார்?

நான்கு தெருக்கள் கூடும் சந்தியில் நின்று எந்தப் பக்கமாகச் சென்றால் மகன் தென்படுவான் என்று புரியாமல் சுந்தரம் தவித்தார். இந்தச் சிக்கலுக்கு ஒரே ஒரு வழிதான் தெரிந்தது. பாருக்குட்டியின் வீட்டுக்கே போய், அந்த ரோஹிணி மூலம் கோபால் யார் என்பதைத் தெரிந்து கொண்டு அவனைக் காவல் காத்தால் அதுவே நாணுவைக் காவல் காத்ததாக ஆகுமல்லவா?

வேறு வழியும் இல்லையே!

சுந்தரம் நேரே பாருக்குட்டியின் வீட்டுப் பக்கமே சென்றார். நெஞ்சில் வேகம் இருந்ததே தவிர, அதைச் செலுத்தும் வழி தெரியவில்லை. படபடப்பு இருந்ததே தவிர அதற்கு போக்குக் கிட்டவில்லை. விதியை ஏமாற்றி விட வேண்டுமென்ற துடிப்பு இருந்ததே தவிர, அந்த விதியையே வலம் வருகிற அவலத்தை தெரியவில்லை.

நல்ல வேளையாக அவர் போய்ச் சேர்ந்த சமயத்தில் ரோஹிணி கடைக்குப் புறப்பட்டுக் கொண்டிருந்தாள். அவளைத் தொடர்ந்தார் சுந்தரம். ''இந்தாம்மா... உன் பேர் என்ன?'' என்று ஆரம்பித்தார்.

முன்பின் தெரியாத ஒருவர் தன் பெயரை விசாரிப்பதை ரோஹிணி விரும்பவில்லை. ''எதுவா யிருந்தால் உனக்கென்ன ஐயா?'' என்று சீறினாள்.

''கோவிச்சுக்காதே... நான் நாராயணனோட அப்பா!'' என்று தம்மை அறிமுகப் படுத்திக் கொண்டார் சுந்தரம்.

''வாங்கையா, நாராயணனோட அப்பாவே!... இப்பத்தான் வரீங்களா?'' என்றாள் ரோஹிணி.

''ஆமாம்'' என்றார் அவர்.

''நான் சொல்றேன். கவனமாக் கேட்டுக்குங்க. கோபாலோட உங்க மகன் விளையாடறான். கடையிலே அழிஞ்சு போய், ஜெயில் வாசம் தப்பாது... ஆமாம்...''

ஜெயில்வாசம்! அட கடவுளே! மகனுக்குமா அந்த வேதனை! பாரம்பரியம் விடாதா அவனையும்?

''அம்மா, என் மகன் எங்கே இருக்கிறான்?'' என்றார் ஆற்றாமையுடன்.

''அட போங்கய்யா...''.

''சொல்லம்மா... என் மனசு பதை பதைக்கிறது.''

''என் மனசுந்தான் பதைக்கிறது. அதுக்கு என்ன செய்யறது? உங்க மகனை இந்த எல்லையிலே வரவிடாதீங்க. ஏனையா, பெத்துட்டாப் போதுமா, தெம்புக்கெல்லாம் போகாமல் பிள்ளைகளைக் காப்பாத்த வேண்டாம்?.... என்ன மனுசரையா நீங்க!'' என்று அவரைக் கடிந்தாள் ரோஹிணி.

''நான் இப்போதுதான் ஊரிலிருந்து வருகிறேனம்மா'' என்றார் சுந்தரம்.

''ஏன்? நாளைக்கு வரதுதானே?'' கிண்டலாகக் கேட்டாள் ரோஹிணி.

சுந்தரம் கோபமாக அவளைப் பார்த்தார். ''அந்தக் கோபால் யார்னு காட்டு எனக்கு... அவனை என்ன செய்கிறேன் பார்'' என்றார்.

ரோஹிணிக்குக் காதில் தேனை வார்த்தாற்போலிருந்தன இச்சொற்கள். உண்மையில் அவனை வஞ்சம் தீர்க்க ஒரு வீராதி வீரன் வரமாட்டானா என்றுதான் அவள் ஏங்கினாள். ''மன்னிச்சுடுங்க... எனக்குப் புத்தி குழம்பிப் போச்சு... கோபால் ரொம்பக் கெட்டவன். வீட்டுக்கு வாங்க, போவோம். நீங்க யாருன்னு தெரிஞ்சா பாருக்குட்டி ரொம்ப சந்தோஷப்படும். அது ஒரு அப்பாவி. ஒண்ணும் தெரியாத பொண்ணு!'' என்றாள்.

சுந்தரம் அவளுடன் பாருக்குட்டியின் வீட்டை அடைந்தார். திண்ணைப்படியிலேயே உட்கார்ந்திருந்த பாருக்குட்டி, ''ரோஹிணி! கோபால் இன்னமும் வரல்லே'' என்றாள்.

# எனக்கு என்னதான் வந்து விட்டது?

எனக்கு எப்பொழுதும் ஒரே சோர்வு. எதற்கெடுத்தாலும் எரிச்சலும் சிடுசிடுப்புமாய் இருந்தேன். அக்கம்பக்கத்தவர்கள் கூட என்னிடமிருந்து ஒதுங்கியே இருந்தார்கள்!

எங்கள் டாக்டர் என் சோர்வைப் போக்க வழி சொன்னார். சரியான போஷாக்கின்மைதான் சக்திக் குறைவுக்கு காரணம் என்றார். ஹார்லிக்ஸ் அருந்தும்படி சொன்னார்.






ஹார்லிக்ஸ் விரைவிலேயே எனக்கு சக்தியளித்தது! அதோடு என் பழைய தெம்பும் திரும்பியது. ஹார்லிக்ஸ் என் வாழ்க்கையை மீண்டும் மகிழ்ச்சியாக்கியது!

குறைந்த போஷாக்கின் காரணமாக சோர்வு ஏற்பட்டால் ஹார்லிக்ஸ் பருகும்படி டாக்டர்கள் சிபாரிசு செய்கிறார்கள். ஆடைச்சத்து நீக்கா பால், கோதுமை மாவு, மால்ட் பார்லி இயற்கை போஷாக்கு சத்துக்களை நிறையக்கொண்ட ஹார்லிக்ஸ் விரைவிலேயே புதிய சக்தியை அளிக்கிறது. ஹார்லிக்ஸ் பருகுவதற்கு சுவையானது ... அது உங்களுக்கும் நிச்சயமாகப் பயனளிக்கும்!




## ஹார்லிக்ஸ்

*அதிக சக்தி யளிக்கிறது!*

"வரும்.... இவர் யார் தெரியுதாம்மா?" என்று சுந்தரத்தைக் காட்டிக் கேட்டாள் ரோஹிணி.

பாருக்குட்டி அவரைப் பார்த்தால்தானே? அவளுக்குக் கோபால் வரவில்லையே என்கிற விசாரம். "ஜெகுவையும் காணோம். போனால் போன இடம், வந்தால் வந்த இடம். குஞ்சராமனையும் காணோம். கோபால் வருவாரா, மாட்டாரா, ரோஹிணி?" என்று கேட்டாள்.

ரோஹிணி எசமானிக்குத் தகுந்த வேலைக்காரி என்பதை நிரூபிப்பவள் போல் தன் போக்கில், "இவர் நாராயணனின் அப்பா. இப்பத்தான் ஊரிலிருந்து வாராராம்" என்றாள்.

"வாருங்க..." என்ற பாருக்குட்டி "அதோ.... அதோ.... கோபால்!" என்று கூவினாள்.

ஆம். அவன் திரும்பி வந்தான் ஜெகுவுடன். சுந்தரத்துக்கு அவனை அடையாளம் காட்டினாள் ரோஹிணி. "அந்த முரட்டு ஆளு, பூனைக் கண்ணு, கரடித் தலை — அது தான் கோபாலு."

ஜெகு பெருமையாக, "பாருக்குட்டி! கோபாலை அழைத்து வந்து விட்டேன். நீ செய்த தப்புக்கு அவர் காலில் விழுந்து மன்னிப்புக் கேள்" என்றான்.

பாருக்குட்டி நமஸ்கரிக்கக் குனிந்தாள். கோபால் விலகினான். "ஊஹூம். வேண்டாம், பாருக்குட்டி. தப்பு உன் மேலேயும் இல்லே. என் மேலேயும் இல்லே. உனக்கும் கோபம் வந்தது, எனக்கும் கோபம் வந்தது. இரண்டுக்கும் கணக்குச் சரியாப் போச்சு" என்றான். பிறகு கவலையும் பரிவும் இழைய, "நீ அழுதுக்கிட்டிருந்தாயாமே, ஜெகு சொல்லிச்சு. அழுதியா பாருக்குட்டி?" என்று கேட்டான்.

சில சொற்கள் நெஞ்சின் ஈரத்தோடு நாக்கின் ஈரத்தில் கலப்பதால் இரட்டை வீரியம் பெற்று விடுகின்றன. கோபாலின் கேள்வி அப்படிப்பட்ட ஒன்றாக ஒலிக்கவே, பாருக்குட்டியின் கண்கள் கலங்கிவிட்டன. "நான் அழவில்லையே, கோபால்" என்றாள்.

"நீ அழக்கூடாது. நானோ ஜெகுவோ கோவிச்சுக்கிட்டாக்கூட நீ அழக்கூடாது... தெரியுதா?" என்று ஒரு குழந்தையிடம் பேசுவது போலத்தான் கோபால் பேசினான்.

அவள் தலையை ஆட்டினாள்.

சுந்தரம் அந்தக் கரடியின் நெஞ்சுக்குள் பாருக்குட்டிக்காக எத்தனை பாசம் ததும்பி நின்றது என்பதைக் கண்டு வியந்துதான் போனார். அவன் கெட்டவனாகவே இருக்கலாம். ஆனால் அவனுடைய மனசு கெட்டதில்லை. மூளைதான் கெட்டதாக இருக்கும் போல் தோன்றிற்று.

"ரோஹிணி, டீ கொண்டு வாயேன். பார்த்துக் கொண்டே நிற்கிறாயே?" என்றாள் பாருக்குட்டி.

கோபால் உட்கார்ந்தான். ஒரு பீடியைப் பற்றவைத்துக் கொண்டான். ஜெகுவும் அவன் அருகில் அமர்ந்து சிகரெட்டை எடுத்தான். அப்போதுதான் சுந்தரத்தைக்

## வெளியேறிவிடு!



நம் பொருளாதார நிலைமையும் ரூபாயின் மதிப்புக் குறைப்பையும் உள்ளி நோக்கி ராஜாஜி கூறியது இது:

நாம் இத்தனை நாட்களாக ஓர் உதவாக்கரை டாக்டரிடம் நம்மை ஒப்படைத்து வந்திருக்கிறோம். அந்த டாக்டர் நம் காலில் ஏற்பட்ட புண் சீழ் கோத்தும், புரையோட அனுமதித்து விட்டார். இன்று மேனாட்டிலிருந்து வந்த வேறு ஒரு டாக்டர் 'அந்தக் கால் இனிக் குணமாகாது; அறுவைச் சிகிச்சை செய்ய வேண்டியதுதான்; காலையே வெட்டிவிட வேண்டியதுதான்' என்று அபிப்பிராயம் தெரிவிக்கிறார். அதைக் கேட்டுக் கொண்டு நம்முடைய உதவாக்கரை டாக்டரும், 'ஆமாம், ஆமாம்; அறுவைச் சிகிச்சை செய்ய வேண்டியதுதான்' என்கிறார்.

நாம் இப்போது அவரிடம் கூற வேண்டியது என்ன? 'ரொம்ப சரி; அறுவைச் சிகிச்சைக்கு உடன் படுவோம். ஆனால் நீ கத்தி பிடிக்க அனுமதிக்க மாட்டோம். ஏற்கனவே புண்ணைப் புரையோட விட்டவன் நீ. ஆகவே நாங்கள் அறுவைச் சிகிச்சைக்கு வேறு டாக்டரை அழைக்கிறோம். அதனால் நீ வெளியேறிவிடு' என்று கூற வேண்டும்.

— எம். ஆர். மணி

---

கோபால் கவனித்தான் போலிருந்தது. "இவர் யார்?" என்று கேட்டான்.

"நம்ம நாராயண் இல்லே?...அவனுடைய அப்பா" என்றாள் பாரு.

இதைக் கேட்டதும் ஜெகு சிகரெட்டைப் பைக்குள் மறைத்துக் கொண்டு, "மாமா, என்னைத் தெரிகிறதா? நான்தான் ஜெகு. கல்யாணியின் பிள்ளை. உங்களை இங்கே சந்தித்தது பெரிய 'ஸர்ப்ரைஸா'க இருக்கிறது!" என்றான்.

"நான் கல்லுப்பட்டி கோபாலு... அங்கே ரோட்டு ஓரத்திலே பம்பு செட்டு வெச்சி மிஷின் இருக்குதில்ல..." என்று வம்சாவளியைச் சொன்னான் கோபால்.

"கோபால் எனக்குத் திக் பிரண்டு, மாமா!" என்றான் ஜெகு.

"நாமெல்லாம் என்ன பிரெண்டுங்க? அந்தக் காலத்திலே அதியமானும் ஔவைப் பாட்டியும் இருந்தாங்களாமே, அதை விடவா?" என்று அடக்கமாகச் சொன்னான் கோபால்.

"இப் கொய்ட் கோபால்... உங்க பெருமை உங்களுக்குத் தெரியாது. மாமா, நான் சொல்றேன், கேட்டுக்குங்க... கோபால் இருக்கிறாரே, இவர் ஒரு வொண்டர்ஃபுல் மனிதர்."

அவர்களிடையே நிலவிய பாசத்தைச் சுந்தரம் புரிந்து கொண்டார். இந்தப் பாசம் சில சமயம் அழும், சில சமயம் சிரிக்கும். 'கண்ணே, முத்தே' என்று கொஞ்சினால் தான் அன்பா?

கோபால் கெட்டவன் என்று ரோஹிணி சொன்னதை நினைத்துப் பார்த்தார் சுந்தரம். இருக்கலாம். அவன் கெட்டவனாகவே இருக்கலாம். ஆனால் உலகில் ஒரு சிறு தவறு கூடச் செய்யாத மனிதன் இருக்கிறானா? அட, தவறு என்பதுதான் என்ன? ஒருவனுக்கு ஒரு காரியம் தவறாகப் படலாம். மற்றொருவனுக்கு அதுவே நன்மையாகப் படலாமே! பார்க்கிற பார்வைக்குத் தக்க படிதானே எதுவும்? வயிற்றுக்கு இல்லாதவன் சோற்றுப் பானையில் கைவைத்தால் அது திருட்டு. ஊரிலுள்ள ஜனங்கள் அத்தனை பேர் வயிற்றிலும் கொள்ளை லாபம் அடித்துச் சம்பாதிக்கிறவன் முதலாளி. ஆசையும் தன்மானமும் படைத்தெழும் ஓர் உயிரை வஞ்சம் தீர்ப்பது கொலை. முழுவதும் கொலைகளான போரின் வெற்றி ஒரு நாட்டுக்குப் பெருமை.

"பாருக்குட்டி, இந்த ஊரை விட்டே நாம் போய்விடுவோமா?... எனக்கு இங்கே இருக்கவே பிடிக்கல்லே" என்றான் கோபால், தேத்தண்ணீர் குடித்து முடித்ததும்.

அவளும் பலமுறை ஜெகுவிடம் இதையே சொன்னவள்தானே! உற்சாகமாக, "எப்போது புறப்படலாம், கோபால்?" என்று கேட்க ஆரம்பித்துவிட்டாள்.

"கூடிய சீக்கிரமே போகலாம், பாருக்குட்டி..."

"நான், நீங்கள், ஜெகு, குஞ்சுராமன் மட்டும்தான் போக வேண்டும், கோபால்... ரோஹிணி வேண்டாம்" என்றாள் அவள்.

"ஆமாம். அவள் வேண்டாம்... கோள் சொல்ற டைப் நமக்குப் பிடிக்காது" என்றான் ஜெகு.

கோபால் அதை ஏற்கவில்லை. "இல்லே, ரோஹிணியும் வரவேண்டும் நம்மோடு. அவள் வருவாள்" என்றான்.

"உக்கும், அவள் வேண்டாம், கோபால்!"

"வேண்டும்."

கோபால் தீர்மானமாகச் சொல்லிவிட்டான், ரோஹிணியும் அவர்களுடன் வரத்தான் வேண்டுமென்று. இதைக் கேட்ட ரோஹிணி பயந்து விட்டாள், எதையோ மனத்திற் கொண்டே அவன் இவ்வாறு அடம் பிடிக்கிறான் என்று. அவளுக்குத் தெரியாதா? அவளுள் ஒரு குரல், 'ஓடி விடு. இங்கே இருந்தால் ஆபத்து' என்று அலறிற்று. "இல்லே, கோபால், நான் இனிமேல் இங்கே இ ரு க் க மா ட் டே ன். புறப்பட்டுப் போறேன்" என்றாள்.

கோபால் சிரித்தான். "இனிமே இருக்க முடியாதா? ஏன்? புறப்பட்டுப் போவனுமா? எங்கே?" என்று கேட்டான்.

"என்னை அனுப்பிவிடு. நான் போறேன்" என்றவாறே, தன் பெட்டியைத் தூக்கிக் கொண்டாள் ரோஹிணி.

"நீ போக வேண்டிய இடம் வேறே. அங்கே நானே உன்னை அனுப்பி வைக்கிறேன். பெட்டியைக் கீழே வை."

"உனக்குப் புண்ணியமுண்டு, கோபாலு. என்னை விட்டுடு. நான் பழைய ரோஹிணி இல்லே. எனக்கு மனசு மாறிப் போச்சு."

"அதுதான் தெரியுதே!"

"உனக்காக இதுவரையிலே எத்தனையோ நிலையிலே துணையிருந்தேன். இனிமே என்னாலே ஆகாது."

"சீ! சீ! போ உள்ளே."

"மாட்டேன்."

"மாட்டியா?"

"மாட்டேன்."

கோபால் வெகுண்டு எழுந்தான். பல்லை நறநறவென்று கடித்தான். "மாட்டாயா? எங்கே ஓடப் பார்க்கிறே? ஜெகு விட்டுப் போய் என்ன சொன்னே? உன் குட்டு வெளிப்பட்டுப் போச்சுன்னு தப்பிக்கப் பார்க்கிறியா? விசுவாசம் இல்லாத துரோகி!" என்றவாறு அவளைப் பற்றி இழுத்துத் தூணில் கட்டினான். "பாருக்குட்டி, பெட்டியை வாங்கி வை. ஜெகு மாடிக்குப் போய்ச் சவுக்கை எடுத்து வா" என்றான்.

பாருக்குட்டி பெட்டியைப் பிடுங்க வந்தாள்.

"ஏம்மா, உன்னை இந்த மனுஷன் தூணிலே கட்டினானே, அது நல்லா இருந்துதா உனக்கு? கை தொட்டு அடிக்க வந்தான்னு காளியாச் சீறினியே! இப்போ அவனுக்குச் சரியா என்னை நீயும் இம்சை செய்யலாமாம்மா? உனக்கு நன்மை செய்ய நினைச்சதுக்கு இதுதானா எனக்கு நீ காட்டுகிற நன்றி?" என்று அழுதவாறே கேட்டாள் ரோஹிணி. பாசம் வேதனையாக வெளிப்பட்டது.

பாருக்குட்டி அதிர்ந்தே போனாள். தூணில் கட்டப்பட்டிருப்பது பெண்மை என்பதே அப்போதுதான் விளங்கினாற் போலிருந்தது. அதை ஆண்மை பழி வாங்குவதும் விளங்கிற்று.

கோபால் பாய்ந்து விட்டான் ஆத்திரத்துடன். "சீ! நியாயம் பேசறியா நியாயம்!" என்றவாறே ரோஹிணியின் கன்னத்தில் ஓங்கி அறைந்தான்.

வலி தாளாமல் அவள் வாயைப் பொத்திக் கொண்டாள். கண்ணிலிருந்து மாலையாக நீர் பெருகிற்று.

"ரோஹிணி அக்கா, மன்னிப்புக் கேள். உன்னை அனுப்பிவிடச் சொல்கிறேன்" என்றான் ஜெகு.

"மன்னிக்கிறேன். ஆனா அனுப்ப மாட்டேன்" என்றான் கோபால்.

"எனக்கு மன்னிப்பு வேண்டாம். அனுப்பி விடு போதும்" என்றாள் ரோஹிணி. சொல்லும்போது வாயை மூடியிருந்த கை அகன்றதால் குபுகுபுவென்று ரத்தம் கொட்டிற்று வாயிலிருந்து.

பாருக்குட்டி பயந்து விட்டாள். சுந்தரம் பதைத்தார். கோபாலே ஒரு கணம் திகைத்தான் போனான்.

"அய்யய்யோ! என்ன இது!... ரோஹிணி, ரோஹிணி..." என்று பதறினாள் பாருக்குட்டி. ஓடிப் போய் அவளைத் தாங்கிக் கொண்டு, கோபாலைப் பார்த்து, "இப்படித்தானா அடிப்பது? சூ! நீங்க ரொம்ப மோசம்" என்றாள். பிறகு ஜெகுவைப் பார்த்து, 'கட்டுக்களை அவிழ்த்து விடுங்கள்' என்று உத்தரவிட்டாள். (தொடரும்)

# ஆயிரம் ரூபாய்!

— எஸ். ஸ்ரீகுமார் —

''சே'' என்று அலுத்துக் கொண்டான் சுந்தரம். ஓர் ஆயிரம் ரூபாயில விஷயம் இப்படி ஊசலாடும் என்று அவன் சிறிதும் நினைக்க வில்லை.

ஒன்றுமில்லை. விஷயம் இவ்வளவுதான்.

சுந்தரத்துக்குக் கலியாணம் பண்ணுவதற்காக அவன் வீட்டில் பெண் பார்த்துக் கொண்டிருந்தார்கள். ஓர் இடம் அமைந்து வரும் போலத் தோன்றியது. பெண் பார்க்கச் சுமாராக இருப்பாளாம். பி. யூ. ஸி. வரையிலும் படிப்பு, சுமாராகப் பாட்டுத்தெரியுமாம். வீட்டு வேலைகளிலும் கெட்டிக்காரியாம். இந்த மாதிரி எல்லாம் பொருந்தி வர, சீர் செனத்தி விஷயத்தில் மட்டும் பெண் வீட்டாருக்கும் சுந்தரம் வீட்டாருக்கும் ஓர் ஆயிரம் ரூபாய் வித்தியாசம் வந்தது. பெண் வீட்டார், 'நம்முடைய பெண்ணுக்குத்தானே செய்கிறோம், கடனோ உடனோ வாங்கிச் செய்வோம்' என்று ஆயிரம் ரூபாய் அதிகம் செய்யத் தயாராகவும் இல்லை; பிள்ளை வீட்டாரும் 'போனால் போகிறது' என்று விட்டுக் கொடுக்கவும் தயாராக இல்லை. சுந்தரத்துக்கும் அவனுடைய தகப்பனார் சபேச அய்யருக்கும்கூட 'என்ன பிரமாதம், ஆயிரம் ரூபாய் குறைத்துச் செய்தால்தான் என்ன?' என்று தோன்றியது. ஆனால் பார்வதி அம்மாள் — சுந்தரத்தின் தாயார் — விடாப்பிடியாக இருந்தாள்.

''பார்வதி! ஓர் ஆயிரம் ரூபாய்க்கு ஏன் இப்படிப் பார்க்கிறாய்? பெண் படிச்சவளா இருக்கா, நல்ல குணம். வீட்டுக் காரியத்தை ஒழுங்காச் செய்வான்னு தோணறது. இதெல்லாம் இருக்கும்போது, ரூபாய்தானா பிரமாதம்? பார்வதி! அந்தக் காலத்திலே உன்னை நான் பெண் பார்க்க வரும்போது, 'ரிஸ்ட் வாட்ச்' போட மாட்டேன்னு உங்க அப்பா சொன்னபோது கூட எங்க வீட்டிலே 'பரவாயில்லே'ன்னு உன்னைக் கலியாணம் பண்ணிக்கலையா?'' என்று கேட்டார் சபேசன்.

அதைக் கேட்ட பார்வதி தன் முகத்தைத் தோள்பட்டையில் இடித்துக் கொண்டு, ''நன்றாயிருக்கிறது... கலியாணத்துக்குப் பிறகு மேலே முந்நூறோ, நானூறோ போட்டு இரும்புப் பீரோ வாங்கிக் கொடுத்தாரே, எங்கப்பா. அது மறந்து போச்சா? இல்லேன்னு எங்களைச் சும்மா விட்டிருப்பாளா உங்கம்மாவும் அப்பாவும்...? கேட்கிறேன்'' என்று சொல்லிவிட்டுக் 'விர்'ரென்று உள்ளே போய்விட்டாள்.

சபேசனுக்கு என்ன பதில் சொல்வதென்று தெரியவில்லை.

இப்படியே தினந்தோறும் அவர்களுடைய பேச்சு சுந்தரத்தினுடைய கலியாண விஷயத்தில் ஆரம்பிக்கும். பிறகு அவர்கள் அந்தக் காலத்தில் அவர்களுக்குக் கலியாணமானதிலிருந்து சுந்தரம் பிறந்தவரை நடந்த விஷயங்களைப் பற்றிப் பேசிச் சண்டை போட்டுக் கொள்வார்கள். சண்டை முற்றி ஊமை ஜாடையில் வந்து நிற்கும். சுந்தரத்துக்கோ தர்மசங்கடமான நிலை. அப்பா எவ்வளவு சொல்லிப் பார்த்தும் அம்மா கேட்பதாக இல்லை. 'கலியாணத்துக்கு முன்னமேயே பெண் வீட்டார் இவ்வளவு கறாராக இருந்தால், கலியாணத்துக்குப் பிறகு எதைக் கேட்டாலும் நிச்சயமாகச் செய்யமாட்டார்கள். என்னுடைய பிள்ளைக்கு என்ன, பணம் இல்லையா, படிப்பு இல்லையா? அந்தஸ்துக்குக் குறைவா, இவர்களை விட்டால் சுந்தரத்துக்குப் பெண்ணே கிடையாதா?' என்பது பார்வதி அம்மாளின் வாதம். ஒரு மாதம் ஓடியும் ஒரு முடிவு ஏற்படுவதாயில்லை.

அன்று ஒரு நாள் ஞாயிற்றுக்கிழமை. சபேசய்யர் எங்கோ காற்றாட உலாவப் போயிருந்தார். சமையற்கட்டில் வேலையாக இருந்த தன் தாயிடம் வந்தான் சுந்தரம்.

''என்னடாப்பா, என்ன வேண்டும்?'' என்று கேட்டாள் மகனை நோக்கி.

''அம்மா, எங்க ஆபீஸிலே 'பூமா'ன்னு ஒரு ஸ்டெனோ வந்திருக்கா. பார்க்க அழகா இருக்கா. எஸ். எஸ். எல். ஸி. பாஸ் பண்ணியிருக்காளாம். அவளை நான் கலியாணம் பண்ணிக் கொள்ளப் போறேனம்மா. அவள் நம்ம குலத்தைச் சேர்ந்தவள்தான். அவள் கூடத் தன்னுடைய சம்மதத்தை என்னிடம் தெரிவித்து விட்டாள் அம்மா'' என்றான்.

'திக்'கென்றது பார்வதிக்கு. இருந்தாலும் சமாளித்துக் கொண்டு, ''யார் வீட்டுப் பெண்ணுடாப்பா அவள்... பத்தாயிரத்துக்குக் குறைச்சல் இல்லாமல் செய்வாளோன்னோ?'' என்று கேட்டாள்.

''அம்மா... அவளுடைய அப்பா ஏதோ ஒரு ஹோட்டல்லே சமையற்கார உத்தியோகம் பார்க்கிறார். ரொம்ப ஏழைக் குடும்பத்தைச் சேர்ந்த பொண்ணும்மா அவள். ஒரு நயா பைசா கூடச் செய்ய முடியாது. நானே ஐயாயிரம் ரூபாய் போட்டுக் கலியாணம் பண்ணிக் கொள்ளுவதாக அவர்களுடைய வீட்டிலே சொல்லி விட்டேன். அவள் மேலே என்னையே அறியாமே எனக்குக் காதல் பிறந்துடுத்து அம்மா. காதல்னு வந்த பிறகு பணம், சீர், கிர்னு பார்க்க முடியுமா?''

பார்வதி அம்மாளுக்குத் தலையைச் சுற்றியது.... ஓர் ஆயிரத்துக்குப் பார்த்து எல்லாம் தலைமுழுகி விட்டதே!






## தரத் தேயிலைத்தூள்களிலே தனிப்பெருமை வாய்ந்தது

# லிப்டன்ஸ்
## ஹிமாலயன் கோல்டன்
## டஸ்ட் டீ



குணமும், சுவையும் நிறைந்த பொன்னிறமுள்ள டீ யை வெகு சீக்கிரத்தில் இந்தத் தேயிலையைக் கொண்டு அதிகமான கப்புகளைப் பெறுவீர்கள். இந்த ஒப்புயர்வற்ற டீ யை நீங்களே பருகிப் பாருங்கள்—உங்கள் விருந்தினர்களுக்கும் கொடுங்கள். நிச்சயமாக இதை ரசித்து நீங்கள் மகிழ்வீர்கள் — ஆம்! — அப்படியே உங்கள் விருந்தினர்களும்கூட! தரத் தேயிலைத் தூள்களில் லிப்டன்ஸ் ஹிமாலயன் கோல்டன் டஸ்ட் தனிப் பெருமை வாய்ந்தது, தன்னிகரற்றது என்பது உண்மை.




லிப்டன்
என்றாலே
நல்ல டீ

LHGC-2 T/

# மலேசியா மாநாடு

## சா. கணேசன் எம்.எல்.ஏ.,

ஏப்ரில் 19. செவ்வாய்க்கிழமை காலை 9-30 மணிக்கு முதல் இருக்கை, கோலலம்பூர் பல்கலைக் கழகத் தலைவரான திரு கிளாஸ் எல். ஞானர் தலைமையில் நடைபெற்றது. 'சங்க காலத்துச் சமுதாயம்' என்பது பெருந் தலைப்பு. திரு கே. கே. பிள்ளை விவாதத்தைத் தொடக்கி வைத்தார். 'சங்க காலத்தில் தொல்காப்பியத்துள் ஆரியர் செல்வாக்கு' என்பதை எடுத்து விளக்கினார்.

அடுத்து 'சங்க நாளில் தமிழரின் சமுதாய வாழ்க்கை' என்பதைப் பற்றி திரு மா. ராசமாணிக்கம் எழுத்துரையைச் சமர்ப்பித்தார். பண்டைத் தமிழகத்தில் சாதிப் பிரிவுகள் இருக்கவில்லை என்பதை வலியுறுத்தியது இவர் உரை.

இதனையடுத்து மலாயாப் பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த திரு பி. அருணசலம், 'பெருஞ் சோற்றுதியன் சேரல் ஆதன்' பற்றிய எழுத்துரையை வழங்கினார். உண்மையிலேயே பயனுள்ள ஆய்வுரை என்று அதைச் சொல்ல வேண்டும். முதல் நாள் துரையரங்கனார் உரைக்கு இது அரண் புரிவதாக அமைந்திருந்தது.

'பெருஞ்சோறு என்றால் பெரிய விருந்தென்பது பொருளன்று. சங்க இலக்கியங்களில் ''பெருஞ்சோறு'' என்று வரும் இடங்களை யெல்லாம் தொகுத்து ஆய்ந்தால் மாண்டவர்களை நினைந்து புரியும் (சிராத்தம் போன்ற) ஒருவிதச் சடங்குதான் என்பது புலப்படும். ''பிண்டம் மேய பெருஞ்சோற்று நிலை'' எனத் தொல்காப்பியத்துட் காணப்படுவதைச் சிந்தித்தால் இம் முடிவுக்கேதான் வர முடியும். விருந்தொடு சேரப் 'பிண்டம்' என்னும் சொல்லை வழங்குவதும் இல்லை.

''உதியன் சேரல் ஆதன், முன்னோரைப் பேணியே பெருஞ்சோறு வழங்கினான்'' என்று அகப்பாடல் ஒன்று கூறுவதை இங்கு மனக் கொள்ளல் வேண்டும். சேரர்கள் முன்னவர்களைப் பேணிய சிறப்பு, பதிற்றுப் பத்துள்ளும் காணப்படுகிறது. வேறொரு சங்கப் பாட்டு உதியன் சமையலைப் புகழ்வதையும் காணலாம்.

பண்டைத் தமிழ் மன்னர்கள் பாரதக் கதையுடன் தம்மைத் தொடர்புபடுத்திக் கொள்வதில் பெருமை கொண்டனர். ஆதனும் அங்ஙனமே பாரதப் போரில் இறந்தவர்களைத் தம் முன்னோர்போலக் கருதி இச்சடங்கை இயற்றி யிருக்க வேண்டும். எனவே, இவன் 'பெருஞ்சோற்று உதியன் சேரல் ஆதன்' என்று கூறப்பட்டிருக்க வேண்டும்.'' இது அவர் பேச்சின் சாரம்.

பலரும் இக்கருத்தை மதித்தனர் என்று தான் சொல்வேன் நான். அடுத்து ஸ்ரீமதி ஜயா அருணசலம் 'தமிழ் இலக்கியத்திற்கு மகளிர் கொடை' என்ற எழுத்துரை ஒன்றை வழங்கினார்.

அடுத்து மலாயாப் பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த திருமதி தேவபூபதி நடராசா 'கற்பின் அடையாளமான முல்லையும் துளசியும்' என்ற எழுத்துரையை வழங்கினார். அதில் 'முல்லை சான்ற கற்பின் மெல்லியள்' 'இல் வளர் முல்லை', 'தாதுண்ட முல்லை எல்லாம் தாது உகப் பறித்திட்டாளே!' என்பன போன்ற சொற்றொடர்கள் முற்கால, இடைக் கால, இலக்கியங்களில் பயிலப் பெறுவதை எடுத்துக் காட்டினார். பின்னர் இல்வளர் முல்லை 'துளசிமாடம்' ஆனதைக் கூறி, அத் துளசிமாடம் திருமாலை எண்ணி அல்ல, ஆனால் கொற்றவையை நினைந்தே சமைக்கப் பட்டது என்றும் கூறினார். சிந்திக்கப்பட வேண்டிய ஒன்றுதான், இல்லையா?

மேலும் திருவாளர்களான சிவத்தம்பி, மாணிக்கவாசகம் பிள்ளை, ராசசுந்தரம் ஆகியோர் உரைகளுக்குப் பின்னர் கேரளப் பல்கலைக் கழகத்தைச் சார்ந்த திரு ஆர். பன்னீர்ச் செல்வம் 'முக்கியமான பிராமிக் கல்வெட்டுகள்' என்ற எழுத்துரையைச் சமர்ப்



திருமதி மேரி மாசிலாமணி



நிர்மலா ராமச்சந்திரன்



ஸ்ரீமதி தேவபூபதி நடராஜா



கார்ல் ஏ. கெல்லர்



ப. அருணாசலம்



கே. சிவத்தம்பி

பித்தார். அதில் ஏற்கனவே அக்கல்வெட்டுக் கலை ஆய்ந்து ஆங்கில நாளிதழ் ஒன்றில் திரு இராவதம் மகாதேவன் எழுதியிருந்த கருத்துக்களுள் ஒரு பகுதியை மறுத்துப் புது விளக்கம் கூறியிருந்தார். அதைக் கேட்டதும் திரு மகாதேவன் உடனே எழுந்து திரு பன்னீர்ச் செல்வத்தின் முயற்சியைப் பாராட்டுவதாகவும், அவர் கூறும் விளக்கத்தை முழு மனத்துடன் ஏற்றுக் கொள்வதாகவும் அந்நெறியில் தாம் மேலும் கருத்தூன்றி ஆராய்வதாகவும் கூறினார். இந்த நிகழ்ச்சி என் நெஞ்சைத் தொட்டுவிட்ட ஒன்று. இந்தப் பெருந்தன்மையை யாவரும் பாராட்டினர். பாராட்டப்பட வேண்டியதுதானே? திரு மகாதேவனின் இப்பண்பு தமிழகப் பெருமக்களின் தரத்தை ஒரு படி உயர்த்தி விட்டது என்று சொன்னால் சிறிதும் அது மிகையாகாது.

இன்று வழக்கத்துக்கு மாறாக இரண்டு இருக்கையே அமைந்திருந்தது. காலை 9–30 மணி இருக்கை தொடர்ந்து ஒரு மணி வரை சென்றது. ஒரு மணிக்குப் பகல் உணவுக்காக எழுந்த கருத்தரங்கு மீண்டும் 2–30 மணிக்கு அமரத் தொடங்கிற்று. 'மேலை நாட்டினரும் தமிழாராய்ச்சியும்' என்பது பொதுத் தலைப்பா யிருந்தது.

ஈழத்தைச் சேர்ந்த திரு எச். டபிள்யூ தம்பையா தலைமை பேற்றார். டியூபிங்கன் பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த ஆல்பெர்ட் வெஸ்லர் விவாதத்தைத் தொடங்கி வைத்தார். 'ஜெர்மனியில் திராவிடக் கலை — அன்றும் இன்றும்' என்ற தலைப்பில் அமைந்திருந்தது அவரது எழுத்துரை.

பிரிட்டிஷ் தொல் பொருட் சாலையில் அச்சு நூல்கள் — எழுத்துப் படிகளின் துறைக் காவலரான திருமதி ஆல்பர்ட்டைன் கவுர் 'ஐரோப்பியப் பாதிரிகளும் திராவிட மொழி ஆராய்ச்சியும்' என்னும் ஓர் எழுத்துரையை வழங்கினார்.

பிரிட்டிஷ் தொல்பொருட்சாலையில் சுமார் 150 திராவிட மொழிக் கையெழுத்துப் பிரதிகள் இருக்கின்றன. இராமாயணம், மாபாரதம், தொல்காப்பியம், நன்னூல் முதலிய தமிழ் நூல்களும் அவற்றுள் அடங்கும். வீரமா முனிவர் என்ற பெஷ்சி பாதிரியாரும், பர்த்தாலோமயல் சீகன் பால்க் என்பவரும் எழுதிய இரு எழுத்துப் படிகளும் அதற்குட்பட்டவைகளே. மேலை நாட்டவர்களுள், தமிழ் மொழியை முதன் முதலாகக் கற்றவர்கள் போர்ச்சுகீசியப் பாதிரிமார்களே. சமயத்தைப் பரப்பும் நோக்குடன் கற்றவர்களே அவர்கள். அர்ச் பிரான்சிஸ் சேவியர் இவர்களுள் குறிப்பிடத் தக்கவர். ரொபர்ட்டோ தே நோபிலி தமிழ், தெலுங்கு முதலிய மொழிகளுடன் சம்ஸ்கிருதத்திலும் புலமை வாய்ந்தவர். தமிழ் எழுத்து நடையை வளர்க்க முயன்றவர். பெஷ்சி

எஸ். ராமநாதன்



அ. சீநிவாசராகவன்



பாதிரியார் உரை நடைக்கு மட்டுமின்றிக் கவிதை வரையும் பாடுபட்டார். எல்லாவற்றையும் விட அவர் தமிழுக்குச் செய்த அருந்தொண்டு மெய் எழுத்துக்களுக்கு மேலே புள்ளியிடும் வழக்கத்தைப் புதுப்பித்ததும், எ–ஏ, ஒ–ஓ, ா–ர, ெ–ே, வேறுபாடு தோன்ற வரிவடிவில் திருத்தம் செய்ததுமே யாகும்.

'தமிழ் இலக்கியத்தின் அடிப்படைகள்' என்னும் நூலே முதன் முதலாக இங்கிலாந்தில் அச்சு வாகனம் ஏறிய தமிழ் நூல். கொடுந்தமிழ் – செந்தமிழ் இலக்கணங்கள் பற்றி இதில் பாகுபாடு செய்யப்பட்டிருக்கிறது என்பன போன்ற ரசமான செய்திகள் இவர் உரையில் வெளிப்பட்டன.

'தரங்கம்பாடியிலிருந்த ராயல் டேனிஷ் மிஷன் அச்சகத்தையும், காகித ஆலைகளையும் பற்றிய குறிப்புகள்' என்ற தலைப்பில் ஓர் எழுத்துரையை கோபன்ஹேகன் டேனிஷ் ராயல் நூலகத்தைச் சேர்ந்த திரு. ஜெ. கே. நோர்டு ஸ்ட்ராண்ட் என்பவர் வழங்கினார். அவர் உரையில் கண்டவற்றின் சுருக்கமாவது: ''இந்திய நாட்டில் தொடங்கப்பட்ட முதல் தமிழ் அச்சகங்களில் ராயல் டேனிஷ் மிஷன் அச்சுக் கூடமும் ஒன்று. தென்னிந்தியாவுக்கு வந்த முதல் பிராட்டஸ்டண்ட் சமயப் பிரசாரக் குழுவே இந்த மிஷன் என்று தெரிகிறது. இந்தக் குழுவில் ஒருவரே பார்த்தலோமஸ் சீகன் பால்க். இது வந்த ஆண்டு 1705. ஓலைச் சுவடிகளே புழக்கத்தில் இருந்த காலம். ஆறு பெயர்களைக் கொண்டு, இம்மிஷன் தனது வெளியீடுகளை, ஓலையில் எழுதுவித்து வழங்கினர். கால விரயம் கடுமையான உழைப்பு இவற்றைக் கண்டு அச்சகம் நிறுவத் தீர்மானித்தார்கள். அச்சகம் நிறுவி இரண்டாண்டுகட்குப் பின்னரே, அதாவது 1713ல்தான், முதல் தமிழ் நூல் அச்சாயிற்று. 'அஞ்ஞானத்தை வெளிப்படுத்துகிற 'வேதப் பிரமாணம்' என்னும் தலைப்பைக் கொண்டது அந்நூல். இதற்கு வேண்டிய தமிழ் எழுத்துக்கள் டென்மார்க்கில் வார்க்கப்பட்டுக் கொண்டு வரப்பட்டன. பிற இந்திய மொழிகளிலும் அச்சு நூல் கொண்டுவர வேண்டும் என்று திட்டமிட்டார். அப்படியே தெலுங்கு, கன்னடம், மலையாளம் முதலான மொழிகளிலும் நூல் வெளியிடப்பட்டன. ஆனால் அதைக் காணாமலேயே பால்க் பாதிரியார் கண்ணை மூடி விட்டார்.''

இறுதியில் யாழ்ப்பாணக் கல்லூரியைச் சேர்ந்த திரு கே. ச. மதியாபரணம், 'இலங்கையில் பணியாற்றிய பாதிரிமார்களின் தமிழ்ப் பணி' என்ற எழுத்துரையை வழங்கினார். அதன் சுருக்கத்தைப் பார்ப்போம்.

போர்ச்சுக்கீசியரும், டச்சுக்காரரும் இலங்கையில் ஆற்றிய தமிழ்ப் பணி குறிப்பிடத்தக்கதாகும். கொழும்பில் உயர்நிலைப் பள்ளியையும், யாழ்ப்பாணத்தில் ஒரு கல்லூரியையும் தொடங்கி நடத்தினர். மேலும் பல தொடக்க, இடைநிலைப் பள்ளிகளையும் அமைத்துத் தமிழ் கற்பித்தனர். ஆங்கிலேயர் இலங்கையைக் கைக்கொண்டதும் வடகிழக்குப் பகுதிகளில் இதைப் போல, பல பள்ளிகளைத் தொடங்கினர். ஆனால் சிறிது காலத்தில் நிதி நிலை சரியில்லை என்று கூறி அவற்றை மூடிவிட முடிவு செய்த போது, இப்பாதிரிமார்களே அவற்றை ஏற்று நடத்தலாயினர். பீட்டர் பெர்சிவல் என்பவர் ஆறுமுக நாவலர் உதவியுடன் விவிலிய நூலைத் தமிழாக்கம் செய்தார். 1821ல் அமெரிக்கப் பாதிரியார் அச்சு யந்திரம் ஒன்றை இலங்கைக்குக் கொண்டு வந்தார். 'முத்திவழி' என்ற முதல் தமிழ் நூல் யாழ்ப்பாணத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது. 1841ல் 'விடிவெள்ளி' எனப் பெயரிய நாளிதழ் தமிழ் – ஆங்கிலத்தில் இருமொழி ஏடாக வரத் தொடங்கிற்று. 'பாலியர் நேசன்' என்ற சிறூர் இதழும் 1859ல் வெளியிடப்பட்டது.

டாக்டர் கிரீன் என்ற அமெரிக்கப் பாதிரியார் பல மருத்துவ நூல்களைத் தமிழாக்கம் செய்தார். தமிழ் மருத்துவச் சொல்லகராதி ஒன்றையும் அவர் வெளியிட்டார். முதன் முதலாக, தமிழ்–தமிழ்–ஆங்கில அகராதியை டாக்டர் வின்ஸ்லோ தொகுத்து வெளி



கோலாலம்பூர் — மலேசியாவின் தலைநகரம்

யிட்டார். பீட்டர் பெர்சிவல் ஆங்கில தமிழ் அகராதியை வெளியிட்டார்.

இவர்களிடம் பயின்ற மாணுக்கர்கள் பல புது நூல்களை எழுதி வெளியிட்டனர்.'' இப்படி எத்தனை எத்தனையோ செய்திகளை அவர் உரை நமக்குத் தெரிவித்தது.

ஏப்ரில் 20, புதன்கிழமை காலை 9–30 மணிக்கு முதலிருக்கை கூடிற்று. ''இலக்கியமும் சமுதாயமும்'' என்பது பெருந் தலைப்பு. டாக்டர் மு. வரதராசன் தலைமை தாங்கினர். விவாதத்தைத் தொடங்கி வைத்தவர் கார்ல் எ. செல்வர் ஆவார். இவர் 1920ல் இந்தியாவில் குண்டூரில் பிறந்தவர். சுவிட்ஸர்லாந்தைச் சேர்ந்தவர். நன்ருகத் தமிழ் பேசுகிருர். ஆழ்ந்த தமிழ்ப் பயிற்சியும், கூர்த்த மதியுமுள்ளவர். 'திருமுருகாற்றுப் படையின் இலக்கிய ஆராய்ச்சி' என்ற எழுத்துரையை இவர் வழங்கினர். புதிய கோணத்தில் நின்று பார்க்கும் இவர் நெறியை யாவரும் வரவேற்றனர்.

அடுத்து தெ. பொ. மீ., ''பக்தி நெறிக் காலத்தில் தமிழ் இலக்கிய சித்தாந்தம்'' என்ற தலைப்பில் ஒரு சிற்றுரை நிகழ்த்தினர்.



மலேசியா நாணயங்கள்

எழுத்துரை காணுமற் போய்விட்டதென்று அமைப்பாளர்கள் கூறிவிட்டார்கள். தெ. பொ மீ.யிடம் அதன் 'நகல்' இல்லையாம். என்ன செய்வது? நிகழ்ச்சி நிரலில் இடம் பெற்றுவிட்டதால் விடவும் கூடாது. எனவே குறிப்பின்றியே தெ. பொ. மீ. பேசினர்.

நிகழ்ச்சி நிரலில் 9–30 முதல் 11–30க்குள் 15 பேர் எழுத்துரையை வழங்குவதாகக் கண்டிருக்கிறது. அவ்வளவும் முழு அளவில் நிகழுவதா யிருந்தால் நாள் முழுவதுமே போதாது. எனவே பலரும் பொருளைத் தொட்டுக் காட்டத்தான் முடிந்தது. இதற்குரிய பொறுப்பை அமைப்புக் குழுவின்மீது உதறிவிட்டுப் பெருமக்களும் மற்றவர்களும் எளிதாகத் தப்பித்துக் கொண்டு விடக் கூடாது; முடியவும் முடியாது. இறுதிக் கட்டத்தில் வந்து ''என் எழுத்துரையையும் சேர்த்துக் கொள்ளுங்கள்'' என்றுத்தொங்கியவர்கள் பலர். தர்மசங்கடமான நிலையில் அமைப்புக் குழு எல்லாவற்றையும் ஏற்றுக் கொண்டு அவசரக் கோலத்தை அள்ளித் தெளித்தாற்போல' ஆக்கிவிட்டது. அதனால் எண்ணிக்கை பெருகிற்றேயன்றித் தரமும், வளமும், ஏன், பலனும்கூட மிகவும் குறைந்து விட்டது. எனவே, கருத்தரங்கின் உயிர்நிலையான விவாதத்துக்கே இடம் இல்லாமல் போகப் பல நாட்கள் வெறும் பேச்சரங்காகவே இருந்தது. இந்த நிலை வருங்காலத்துக்கு ஒரு நல்ல படிப்பினையாக வேண்டும். மேலும் சத்தற்ற வெறும் சப்பை எழுத்துரைகளையும் பல்வேறு இடங்களில் எழுதிய பலர் கருத்துரைகளைத் தமது போலக் காட்டத் திரட்டி எடுத்து வந்தவற்றையும் ஒதுக்கித் தள்ள அமைப்புக் குழு தயங்கவே கூடாது.

பேராசிரியர் அ. சீநிவாச ராகவன் ''ஆழ்வார் பாசுரங்களில் கற்பனை உருவங்கள்'' என்ற தலைப்பில் ஓர் அருமையான எழுத்துரையை வழங்கினர். அதில் பல்வேறு ஆழ்வார்களின் பாடல்களையும் எடுத்துக்கொண்டு அவற்றில் காணப்படும் வேறு வேறு பாவங்களையும் எடுத்து விளக்கி ஆண்டவனை அடைய மனித உள்ளம் படும் பாடுகளைத் தெளிவுபடுத்தினர். அவற்றில் ஒன்றை மட்டுமாவது கண்டு மகிழ்வோம்.

''இறைவனை அடைவதில் ஏற்படும் தாமதத்தால் தனக்குண்டான உள்ளச் சடைவை ஆண்டாள் ஓரிடத்தில் வெளிப்படுத்துகிருள். தன் காதலன் சொன்ன வாக்குப்படி குறிப்பிட்ட நேரத்தில் குறிப்பிட்ட இடத்துக்கு வராததை மதுர பாவம் என்னும் மரபு நெறியில் உரைக்கிருள். காதலனே கடவுள்; ஆண்டாளுக்கு அவன் கண்ணபெருமானுய் விளங்குகிருன். ஆனல் மனம் முறிந்துள்ள ஆண்டாள் இறைவன் வராகாவதாரத்தை நினைத்துக் கொள்ளுகிருள். அந்த நினைப்பே, கடும் குற்றச்சாட்டாகவும், துணிவுமிக்க ஏசலாகவும் வெளிப்படுகிறது.

'நீ வந்தாயில்லை; அது எதிர்பார்க்கப் பட்டதுதான். ஏன், நீ ஒருகால் பன்றியா யிருந்தவன்தானே? ஆம், மானங்கெட்ட அழுக்கடைந்த நாற்றப் பன்றியாகக் கிடந்தாய். அதுவும் அழுக்குப் படிந்த இந்தப் பூதேவி இருக்கிருளே, அவளைக் காதலித்துக் கொண்டு, இல்லையா?'

என்றெல்லாம் நிந்திப்பதற்கு அடிப்படை, இட்டாமையால் விளைந்த ஏமாற்றத்தின் இன்ப வெறியேதான். ஒரு அவதாரக் கதையில் கூறப்பட்ட செய்திகளையே நாம் இங்கும் காண்கிறோம். பிரான்ஸிஸ் தாம்ஸன் கடவுளை ஒரு வேட்டை நாயாகக் கற்பித்தான். அது அவனுடைய சொந்தப் படைப்பு. ஆண்டாளோ கடவுளை ஒரு பன்றியாகப் பேசுகிருள். ஆனல் இது ஆண்டாளின் சொந்தப் படைப்பல்ல; வைணவர்களின் கர்ண பரம்பரைச் செய்திகளுள் கண்ட ஒன்றுதான்.

இதிலிருந்து ஆழ்வார்கள் கூறும் உருவங்கள் மண்ணுலகில் உள்ளவை அல்லது மண்ணுலகத் தொடர்புள்ளவையே. ஆகவே அவர்கள் பாசுரங்களில் காணப்படும் உருவங்களும், உருவாக்கப்பட்டவைகளும் ஒன்ருகி விடுகின்றன.''

# ஸ்ரீ விசாலம் சிட் பண்டு லிமிடெட்

(நிறுவியது 1947)




ரிஜிஸ்டர்டு ஆபீஸ்:
**திருநெல்வேலி - 6**
போன்: 274

சென்ட்ரல் ஆபீஸ்:
**61-பி, உஸ்மான் ரோடு**
**தியாகராயநகர், மதருஸ் -17**
போன்: 42916

கிளை அலுவலகங்கள்:

இராயவரம்
சாத்தூர்
சிவகாசி
சென்னை -1
சென்னை -17
திருச்சிராப்பள்ளி - 2
திருப்பாப்புலியூர்
திருநெல்வேலி - 6
திருநெல்வேலி-மேலப்பாளையம்
திருநெல்வேலிஜங்ஷன்
தூத்துக்குடி
நாகர்கோவில்
பாண்டிச்சேரி
பள்ளத்தூர்
பெங்களூர்
மதுரை
மாயவரம்
விருதுநகர்
ஸ்ரீரங்கம்

சீட்டுகளுக்கும் பிக்சட் டிபாசிட்டுகளுக்கும் பொறுப்புள்ள ஸ்தாபனம். 20 வருடமாக நிதி உதவி செய்து வருகிறது.

எம் **23**-வது குரூப் ரூ. 25,000/- சீட்டு 20 மாதம் தவணை ஒன்றுக்கு ரூ. 1,250/- **8-7-66**ல் ஆரம்பமாகி இருக்கிறது.

எம் **24**-வது குரூப்பு ரூ. 25,000/- சீட்டு விரைவில் ஆரம்பமாகிறது.

ஏலங்கள் எங்கள் திருச்சி ஆபீஸில் வழக்கம்போல் நடைபெறும்.

அதிகாரம்பெற்ற மூலதனம் ரூ. 5,00,000

செலுத்தப்பட்ட மூலதனமும் ரிசர்வும் ரூ. 1,17,000

31-3-66ல் ஆடிட்டுக்குட்பட்ட புழக்கத்திலுள்ள மூலதனம் ரூ. 1,63,00,000

மொத்தம் ஆஸ்திகள் ரூ. 80,00,000

9½% வட்டி வரை டிபாசிட்டுகள் ஏற்றுக் கொள்ளுகிறோம்.

1961ம் வருட சென்னை சிட்பண்ட் ஆக்ட் அமுலில் உள்ள இடங்களிலெல்லாம் சிட் நடத்தப்படுகிறது.

விவரங்களுக்கு அருகாமையிலுள்ள பிராஞ்சுடன் தொடர்பு கொள்ளவும்.

K. A. ராம், B.A., B.L.
சென்ட்ரல் ஆபீஸ் மானேஜர்

K.M.K. முத்தையா செட்டியார்
மானேஜிங் டைரக்டர்

A.R. ராமசாமி செட்டியார்
ஜெனரல் மானேஜர்

Paramount

அடுத்து மீண்டும் தெ. பொ. மீ.யின் எழுத்துரை இடம் பெற்றது. 'பரணிப் பாட்டு' என்பது பொருள். 'பரணி' என்பது 'ஒரு போர்ப் பாடல்' என்று விளக்கம் கூறி, தமிழ் மொழியில் இன்று அறியப்படும் பல பரணிகளையும் காரண காரியங்களுடன் எடுத்து விளக்கி, இவ்வகைப் பிரபந்தத்துள் செயங்கொண்டார் பாடிய கலிங்கத்துப் பரணியே தலைசிறந்தது என்றார். இலக்கியச் சோலையில் ஒரு நறுமலர்ச் செடியாக விளங்கும் இப்பரணியைப் பிற எவரும் தமதாகச் செய்து கொள்ளாமையால் இது நமக்கே உரியதாய் விளங்குகிறது என்று தமது உரையை முடித்தார்.

பின்னர் கொழும்பு வித்தியோதயாவைச் சேர்ந்த திரு கே. சிவத்தம்பி ''தமிழ் நாடகத்தின் மதச் சடங்கடிப் படை'' என்பது பற்றிய ஓர் எழுத்துரையை வழங்கினர். அதில் வள்ளிக் கூத்து முதலானவற்றிலிருந்து தொடங்கிக் குரவைக் கூத்து முதலிய வளர்ச்சியுற்றவை வரை எடுத்துக் காட்டினர். சங்க இலக்கியங்களில் காணப்படும் கூத்துப் பற்றிய செய்திகளைப் பார்த்தால் மதச் சடங்குகளாக இருந்து அதே பின்னர் பொழுது போக்கு நிகழ்ச்சியாக மாறுகின்ற—மாறிய — உண்மைகளைக் காண முடிகிறது என்றார். வடமொழிக் கருத்துக்களும், நெறிகளும் தமிழகத்தில் பெருவழக்கில் வந்ததற்பின் வைதிக மத நம்பிக்கைகளைத் தழுவத் தொடங்கின. கூத்து என்ற பெயரும் கொஞ்சம் கொஞ்சமாய் மறைய, நாடகம் என்ற பெயரே நிலைத்து விட்டது. பெயர் மட்டுந்தானா, முறையும் கூட மாறலாயிற்று என்பனவற்றை நன்கு எடுத்து விளக்கினர்.

மற்றும் பலர் அவரவர் எழுத்துரைகளை வழங்கினர்கள். அறுப்புத் தீர யாவரும் கீழ் நிலத்துக்குச் சென்று கடக் கடக் காப்பி, தேநீர் பானங்களைப் பருகிவிட்டுச் சிறிது புத்துணர்ச்சி பெற்று மீண்டும் 11-40க்குக் கருத்தரங்கிற்கு வந்தோம்.

லண்டன் பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த திரு ஜான்மார் தலைமை தாங்கினர். ''நவீன இலக்கியங்கள்'' என்பது பொதுத் தலைப்பு. மகா கவி பாரதியை அவரின் உணர்ச்சித் தத்துவத்தைப்பற்றிப் பேசித் திருமதி பிரேமா நந்தகுமார் அரங்கைத் தொடங்கி வைத்தார். 'இரட்சண்ய யாத்திரிகம்' பாடிய கிருஷ்ண பிள்ளையைத் திருமதி மேரி மாசிலாமணி எழுத்துரையில் விளங்கவைத்தார். இரண்டாம் இருக்கையிலும் பேசுவோர் தொகை 13 பேர் என்பதால் எவ்வளவுதான் காப்பியை மண்டியிருந்தாலும் கொட்டாவி விடாதவர் குறைவுதான். அந்தத் தண்டனையைப் படிப்பவர்களும் அடையலாகாது என்று கருதி இறுதிப் பேச்சுக்கு வந்துவிடுகிறேன். அதற்குரியவர் திரு முருகு சுப்பிரமணியன். மலேசியாவில் மிகச் செல்வாக்குடன் நடைபெற்றுவரும் பழம்பெரும் தமிழ்த் தினசரியான 'தமிழ் நேசன்' ஆசிரியர் இவர். இவர் வழங்கிய எழுத்துரை மிகுந்த கலகலப்பை உண்டாக்கி விட்டது. அயர்ந்து கிடந்தவர்கள் நிமிர்ந்து அமர்ந்தார்கள். (தொடரும்)



## ஊர் வம்பு

★ முதல் முயற்சி

விலைவாசிகளைக் கட்டுப்படுத்த நாடெங்கும் 'கூட்டுறவு' விற்பனை நிலையங்கள் தொடங்க வேண்டும் என்னும் சர்க்கார் திட்டத்தைச் செயல்படுத்தும் வகையில் முதல் முயற்சி தில்லியில் தொடங்கப் பெற்றது. ஆனால் முதல் முயற்சியிலேயே தகராறு ஏற்பட்டது. இக்கூட்டுறவு விற்பனை நிலையங்கள் புதுதில்லி முனிசிபல் குழு நிர்மாணித்து இருக்கும் சூப்பர் மார்க்கெட்டில் இயங்க வேண்டும் என்று ஏற்பாடு செய்யப் பட்டது. ஆனால் முனிசிபல் குழு ஆண்டொன்றுக்குப் பதினெட்டு லட்ச ரூபாய் வாடகை வேண்டும் என்று வற்புறுத்துகிறது.

''பதினெட்டு லட்சமா?'' என்று அதிகாரிகள் திடுக்கிட்டனர். ஏனெனில் இந்த சூப்பர் மார்க்கெட் கட்டுவதற்கே மொத்தம் நாற்பத்துநாறு லட்ச ரூபாய்தான் ஆயிற்றாம்.

இது அநியாயமல்லவா என்றால், அதற்கு முனிசிபல் குழு, ''சர்க்கார் தலையிடாமல் இருக்கட்டும். இதே தொகையைத் தந்து அவ்விடத்தை வாடகைக்குப் பிடிப்பதற்கு எத்தனையோ பேர் தயாராக இருக்கிறார்கள்!'' என்று வீம்பாகப் பேசுகிறதாம்.

பெரும் தலைகளின் அரிய முயற்சியினால் முனிசிபல் குழு இப்பொழுது சற்று இறங்கி, ஒரு புதிய உடன்பாட்டுக்கு வந்திருக்கிறதாம்.

புதிய விகிதம்:

1. ஆண்டொன்றுக்குக் குறைந்தபட்ச வாடகையாக ஐந்து லட்ச ரூபாய் கொடுத்துவிட வேண்டும்.
2. இக்கூட்டுறவு நிலையங்களில் பண்டங்களின் மொத்த விற்பனைத் தொகையில் (லாபத்தில் அல்ல!) நூற்றுக்கு ஒரு ரூபாய் வீதம் முனிசிபல் குழுவுக்குக் கமிஷன் தர வேண்டும்.

இதையும் இன்னும் நேரக்கூடிய பெருஞ் செலவுகளையும் பண்டங்களின் விலைகளின் மீது ஏற்ற முடியாது. ஏனென்றால், நியாய விலையில் பண்டங்களை மக்களுக்குக் கிடைக்கச் செய்யத்தானே இந்த ஏற்பாடு? ஆகவே, இதுபோன்ற கூட்டுறவு விற்பனை நிலையங்கள் நஷ்டத்தில்தான் நிச்சயம் இயங்கும். சர்க்கார் நஷ்டப்படுகிறதென்றால் அர்த்தமென்ன? மக்களுக்கு நஷ்டம். மேலும் வரிச்சுமை—இதுதானே அர்த்தம்?

— பிலாக்



# கல்கி



# வெள்ளி விழா மலர்



★ தமிழ் கூறும் நல்லுலகமெங்கும் தன் இலக்கியப் பணியைச் சிறந்த முறையில் கடந்த இருபத்தைந்து ஆண்டுகளாகச் செய்து வந்து, இன்று இருபத்தாறாவது ஆண்டில் அடியெடுத்து வைக்கவிருக்கிறது கல்கி. இத்தருணத்தில் கல்கி நேயர்கள் தொடர்ந்து இதற்குக் காட்டி வந்திருக்கும் பேராதரவை நன்றியறிதலுடன் நினைவுகூர்ந்து மகிழ்கிறோம்.

★ கல்கியின் வெள்ளி விழாவைக் கொண்டாடும் தருணத்தில் அதன் நினைவாகக் கல்கி வெள்ளி விழா மலர் ஒன்றினை வெளியிடுவது பொருத்தம் என எண்ணி அதற்கான ஏற்பாடுகள் நடந்து வருகின்றன. கல்கியின் பொன்விழா ஆண்டுவரையிலும் அதற்குப் பின்னாலும்கூட நீங்கள் படித்துப் படித்து இன்புறவும் போற்றிப் போற்றிப் பாதுகாத்து வரவும் கூடிய வகையில் ஓர் அரிய இனிய பொக்கிஷமாக வெள்ளி விழா மலர் உருவாகி வருகிறது.

★ தமிழ் நாட்டின் அறிஞர் பெருமக்கள் பலர் வரைந்துள்ள கட்டுரைகள் பல துறைகளையும் அணைத்துச் செல்கின்றன.

★ புகழ் பெற்ற எழுத்தாளர்கள் தங்கள் தங்கள் திறமையையெல்லாம் காட்டி வெள்ளிவிழா மலருக்கு விசேஷச் சிறப்புடன் கூடிய சிறுகதைகளை எழுதியிருக்கிறார்கள்.

★ மலரில் இடம் பெற்றுள்ள பிரபல ஓவியர்களின் ஏராளமான பல வர்ணப் படங்களில் ஒவ்வொன்றும் ஒவ்வொரு விதத்தில் தனி மதிப்புப் பெறுகிறது; கண்ணைக் கவர்ந்து கருத்தையும் ஈர்க்கிறது.

★ ஹாஸ்ய வெடிகள், மூவர்ண நகைச்சுவைச் சித்திரங்கள், நிகழ்ச்சித் துணுக்குகள் போன்றவை தாராளமாகவே ஆங்காங்கே இடம் பெற்றுள்ளன.

★ நெஞ்சையள்ளும் கவிதைகளுக்குக் குறைவில்லை இம்மலரிலே.

★ இவற்றையும் இன்னும் பல சிறப்புக்களையும் தாங்கி, கல்கி தீபாவளி மலர் அளவில், சிறந்த முறையில் கல்கி வெள்ளி விழா மலர் உருவாகி வருகிறது. ஆகஸ்ட் முதல் தேதியன்று இம்மலர் வெளிவரும்.

★ காகிதக் கட்டுப்பாடு, ரூபாயின் மதிப்புக் குறைப்பு ஆகியவை காரணமாக மிகக் குறைந்த அளவு பிரதிகளே அச்சிட முடிகிறது. ஆகவே உங்கள் பிரதிகளுக்கு முன்கூட்டியே உள்ளூர் ஏஜெண்டிடம் பதிவு செய்துகொள்ளுங்கள்.

**தனிப் பிரதி விலை ரூ. 5. தபால் செலவு ரூ. 0-75.**
**இலங்கை, மலேசியா மற்றும் இதர வெளிநாடுகளில் விலை ரூ. 7-50**
**(தபால் செலவு தனி) வி. பி. பி. கிடையாது**

## அத்தியாயம் ஆறு

# பஞ்சவடிப் படலம்

நேரம் சென்றதே தெரியாமல் விசுவநாதனும் லட்சுமியும் அந்த ஆற்றங்கரைத் தனிமையில் பேசி மகிழ்ந்திருந்தனர். சில தினங்களுக்கு முன்பு விசுவநாதனைப் பாண்டிய நாட்டுக்குப் போகக் கூடாது என்று தடை செய்த லட்சுமி அதற்குள் அடியோடு மாறிப் போயிருந்தாள். அவளுடைய மன மாற்றத்தின் காரணத்தை விசுவநாதனால் உணர்ந்து கொள்ள முடிந்தது. நிச்சயார்த்த விழா என ஒன்று நடைபெறு விட்டாலும்கூட, அவர்களுடைய திருமணம் நிச்சயமாகி விட்டதென்றே அவள் நம்பினாள். 'இல்லா விட்டால் அன்று சின்னஞ் சிறு குழந்தைபோல் தேம்பி அழுது அடம்பிடித்த லட்சுமி, இன்று இவ்வளவு குதூகலத்துடன் நடந்து கொள்வாளா?'

லட்சுமிக்கு ரேகை சாஸ்திரம் சிறிதுகூடத் தெரியாதென்றாலும், அவனுடைய உள்ளங் கையில் ஓடிய ஒவ்வொரு ரேகையாக ஆராய்ச்சி செய்யத் தொடங்கினாள். சேர சோழ பாண்டிய நாடுகளுக்கு அவன் சக்கரவர்த்தியாக முடிசூட்டிக் கொள்ளப் போவதை எந்த ரேகை சுட்டிக் காட்டியதென்று அவளால் புரிந்து கொள்ள முடியவில்லை. பிறகு அவளுடைய கரத்தில் ஓடிய ரேகைகளையும் தனக்குத் தானே உற்றுப் பார்த்து, அவன் கரத்து ரேகைகளோடு ஒப்பிடலானாள்.

விசுவநாதனுக்கு அவளுடைய செய்கை சிறு குழந்தையின் விளையாட்டாகத் தோன்றியதென்றாலும், வாய் விட்டுச் சிரித்தால் அவளுக்குக் கோபம் வந்து விடுமென்பதற்காகத் தன் சிரிப்பைக் கஷ்டப்பட்டு அடக்கிக் கொண்டான். மேலும் அவளது மலர்க் கரங்களின் பிடிக்குள் அவனது முரட்டுக் கரங்களைச் சிறை கொடுத்து வேடிக்கை பார்ப்பது அவனுக்கு ஆனந்தமாகவும் இருந்தது.

''வருகிறீர்களா, நாம் இருவரும் ஒன்றாகப் போய் இந்த மலைப்புறத்தில் வாழும் குறத்தியிடம் குறி கேட்டு வருவோம்?''

அடக்கி வைத்திருந்த சிரிப்பு விசுவநாதனையும் மீறி வெளிப்பட்டு விட்டது.

''இதோ பார்! நீ விரும்பினால் உனக்காக நான் என் கரத்தை நூறு குறத்திகளிடம் வேண்டுமானாலும் காட்டுகிறேன். ஆனால் இப்போது ஏனோ எனக்கும் என் குறத்திக்கும் இடையில் மூன்றாவது ஒரு குறத்தி குறுக்கிடுவது பிடிக்கவில்லை.''

பூரிப்போடு சிணுங்கினாள் லட்சுமி.

''திருமணப் பொருத்தம் இருக்கிறதா, நமக்குத் திருமணம் நடைபெறுமா என்று தானே நீ பார்க்க விரும்புகிறாய்? நமக்குத் தான் திருமணம் நடைபெற்று விட்டதே! 'இன்றே, இப்போதே என்னைத் திருமணம் செய்துகொள்ளுங்கள்' என்று நீ அடம் பிடித்தாயல்லவா? அப்போதே நான் உன்னைத் திருமணம் புரிந்து கொண்டு விட்டேன். ஆகவே இனிமேல் புதிதாக ஒன்றும் பொருத்தம் பார்க்க வேண்டியதில்லை.''

லட்சுமி நினைத்தது வேறு. அவன் சக்கரவர்த்தியாகவும், அவள் அரசமாதேவியாகவும் ஆவதற்கான நாள் நெருங்கிவிட்டதா என்பதையே அவள் பார்க்க விரும்பினாள். அந்த நாளுக்கும் திருமணத்துக்கும் நெருங்கிய தொடர்பு இருக்கிறது என்று அவள் சொல்லத் துடித்தாள். ஆனால் அதை அவனிடம் வாய் விட்டுச் சொல்வதை விட, அவனுக்கே அந்த ஆவலைத் தூண்டிவிட வேண்டுமென்பதுதான் அவள் நோக்கம். அவளுடைய தந்தையின் பேச்சை அவள் ஒரு குருவுரையாகவே ஏற்றுக் கொண்டுவிட்டாள். லட்சுமி விரும்பினால் அவனைச் சக்கரவர்த்தியாக்கிவிட முடியும் என்று சாளுவர் அவள் அன்னையாரிடம் கூறினாரல்லவா? அவள் அப்படியே செய்ய விரும்பினாள்; அவனுடைய ஆற்றலைத் தூண்டிவிட்டு, அவனைச் சக்கரவர்த்தியாக்கி விடுவதென்று கங்கணம் கட்டிக் கொண்டாள்.

அவளுடைய நினைவு என்ன என்பதை அறியாத விசுவநாதன், அவள் கரங்கள் இரண்டையும் தன் கரங்களில் இறுகப் பற்றி மூடிக் கொண்டு, ''நம் உள்ளத்தில் மட்டும் உறுதி இருக்குமானால், நம்மை யாராலுமே பிரிக்க முடியாது, லட்சுமி! நம்முடைய எதிர்காலத்துக்கு நம்முடைய கரங்களில் ஓடும் ரேகைகளைப் பார்த்தால் மட்டும் போதாது. நம்முடைய சிந்தனை ரேகைகளும் ஒன்றுபோல் இணைந்து ஓட வேண்டும். நமக்குத் திருமணம் ஆகிவிட்டதென்றே நான் நம்புகிறேன்; நீயும் அவ்வாறே நம்பு!'' என்றான் உறுதி மிக்க குரலில்.

லட்சுமி ஆனந்த பரவசத்தில் தன்னையே மறந்தாள். இரும்பையொத்த அவனது பிடிக்குள் அகப்பட்ட அவளுடைய ரோஜா மலர்க் கரங்களுக்கு அந்த உறுதி மிக்க பிடியின் வலிமை சிறந்ததொரு பாதுகாப்பாகத் தோன்றியது.

''நினைத்ததைச் சாதிக்கக் கூடியவர் நீங்கள், கிருஷ்ணதேவராயரைப் போல!''- என்று பெருமிதத்தோடு கூறினாள்.

''உன்னையே என் பிடிக்குள் சிறை செய்து விட்டேனே, இதை விடவா பெரிய சாதனை ஒன்றிருக்கிறது? கோட்டைகளைக் கைப்பற்றுவது எனக்கு எளிதான காரியம். உன்னுடைய மனக் கோட்டையை முற்றுகையிட்டு நான் வெற்றி பெறுவதற்குப் பட்டிருக்கும் பாடு... அடடா!''

கோட்டைகளைக் கைப்பற்றுவது எளிதாகச் சாதிக்கக் கூடியது என்பதை அவனே ஒப்புக் கொண்டதால், லட்சுமி மன நிறைவு கொண்டாள். அவன் கைப்பற்ற வேண்டிய

# வெள்ள வெளிச்சம்!







கானடாவில் செவ்விந்தியர்கள் வாழும் கிராமமொன்றில் ஒரு தடவை வெள்ளம் புகுந்து விட்டது. விமானப் படை ஹெலிகாப்டர்கள் விரைந்து மீட்பும் பணியில் ஈடுபட்டன.

ஏராளமான செவ்விந்தியர்கள் வெள்ளத்திலிருந்து மீட்கப்பட்டார்கள். என்றாலும் இன்னும் மீட்கப்படவேண்டியவர்கள் நிறையப் பேர் இருந்தார்கள். ஓர் அதிகாரிக்குச் சந்தேகம் வந்து இதுவரை காப்பாற்றப்பட்டவர்களின் கணக்கைப் பார்த்தார். அந்தக் கிராம ஜனத்தொகையை விட அதிகமாக இருந்தது!

ஹெலிகாப்டர் பிரயாணத்தில் குஷிகண்ட செவ்விந்தியர்கள், மீட்டு வெளியே அனுப்பப்பட்ட பொழுதிலும் வேறு வழியாக மீண்டும் வந்து வெள்ளத்தில் விழுந்து கொண்டிருந்தார்கள் என்ற உண்மை அப்பொழுதுதான் வெளிச்சத்துக்கு வந்தது.

— 'ரம்யன்'

---

கோட்டைகள் தமிழ்நாட்டில் இருந்தன. லட்சுமிக்குச் சோழ நாட்டின் நினைவு வந்தது.

''உங்களிடம் ஒரு வேண்டுகோள்...''

''என்ன?''

''துங்கபத்திராவின் கரையில் நாம் நமக்கென்று இப்படி ஒரு சின்னஞ் சிறு சாம்ராஜ்யத்தை ஏற்படுத்தி விருப்பது போலவே, வைகைக் கரையிலும், காவேரிக் கரையிலும் எனக்காக நீங்கள் இதுபோன்ற இடங்களைப் பார்த்து வைத்திருக்க வேண்டும். எப்போதும் அரண்மனைக் கடமைகளிலேயே நீங்கள் மூழ்கி விடாமலிருக்கும் பொருட்டு, அவ்வப்போது உங்களை இயற்கையின் மடிகளுக்கு நான் அழைத்துக் கொண்டு வர வேண்டுமல்லவா?''

கடமை மிக்க மனைவியாகவே லட்சுமி மாறி விட்டாள் என்று விசுவநாதனுக்குத் தோன்றியது. அப்படியே அங்கு இடங்களைப் பார்த்து வைப்பதாகவும், ஆனால் அதற்காகத் துங்கபத்திரா நதிக் கரையை அவனால் மறந்துவிட முடியாதென்றும் கூறினான்.

நேரம் சென்றது. காலைப் பொழுதின் நிழல் சிறிது சிறிதாகக் கருங்கி வந்தது.

''சரி, சற்று நேரம் நீங்கள் இங்கேயே தங்கி யிருங்கள். நான் சீதையின் படித் துறைக்குச் சென்று நீராடிவிட்டு வருகிறேன்'' என்று கிளம்பினாள்.

''நீ சீதையின் படித்துறைக்குச் சென்றால் நான் இராமரின் படித்துறைக்குச் செல்கிறேன்!'' என்றான் விசுவநாதன். ''துங்கபத்திராவுக்குள் விழ்ந்து நீந்தத் தொடங்கி விட்டால், அதிலிருந்து மீண்டும் கரைக்கு வரவே எனக்கு மனம் இருக்காது!''

சீதையின் படித்துறைக்கு லட்சுமி சென்றாள். மண்டபம் போன்று இயற்கையாக அமைந்திருந்த மலைக் குகையின் எதிரே பாறைகள் படிக்கட்டுக்களைப் போல் அமைந்து நீருக்குள் சென்றிருந்தன. பெண்டிர் நீராடும் துறையில் மறைவுக்காக எழுப்பப் பெற்ற சுவர்களைப் போல் அங்கங்கே சில பாறைகள் குத்திட்டு நின்றன.

சீதையும் இராமனும் பன்னெடுங் காலத்துக்கு முன்பு தங்கியிருந்த பஞ்சவடிப் பிரதேசம் அது. சீதை நீராடிய படித் துறை என்றும், இராமன் நீராடிய படித் துறை என்றும் அங்கே தனித்தனியாகப் படித் துறைகள் இருந்தன. சீதையின் நினைவாகவும் இராமனின் நினைவாகவும் விஜயநகரத்து மக்கள் அவற்றைப் போற்றி வந்தார்கள்.

லட்சுமி விரைவில் நீராடி முடித்துக் கொண்டு கரைக்கு வந்து சேர்ந்தாள். விசுவநாதன் கரையேறும் நினைவே இல்லாதவன் போல் தன் மனம் கொண்ட மட்டும் நீந்தித் திளைக்கலானான். அவனுடைய நெஞ்சில் எல்லையற்ற குதூகலம் நிறைந்திருந்தது. அந்தக் குதூகலமே குளிர்ந்த துங்கபத்திரையாகப் பெருகி ஓடுவது போல் தோன்றியதால் அவன் அதில் தன்னையே மறந்து விட்டான்.

லட்சுமி பதறினாள்; கூவினாள்; அழுதாள்; கரைக்கு வந்து சேரும்படி அவனை மன்றாடிக் கேட்டுக் கொண்டாள். அவளை அழ வைத்த பிறகே விசுவநாதனுக்கு மனம் இரங்கியது. மெல்லக் கரையை நோக்கித் திரும்பினான்.

''இராமர் இவ்வளவு நேரம் நீந்தித் திளைத்திருந்தால், மாரீசனை அனுப்பி வைக்காமலே இராவணன் சீதையைச் சிறையெடுத்துச் சென்றிருப்பான்!'' என்றாள் லட்சுமி.

''கண்ணிமைக்காமல் சீதையைப் பார்த்துக்கொண்டுதான் அவரும் நீந்தியிருப்பார்!''

லட்சுமி தன் முத்துப் பல் வரிசை தெரியச் சிரித்தாள். பிறகு, ''எனக்குப் பசி தாங்க முடியவில்லை'' என்றாள்.

''என் பசியும் அதற்கு மேல்தான் இருக்கிறது. இலட்சுமணன் இருந்திருந்தால் இதற்குள் காய் கனி, கிழங்குகளையாவது கொண்டு வந்து வைத்திருப்பான். இப்போது நாமே அவைகளைத் தேடிப் போக வேண்டியதுதான்.''

ஆற்று நீரைப் பருகிவிட்டு அவர்கள் இருவரும் உணவு தேடி நடந்தார்கள். பலா மரங்கள் அங்கங்கே கிளைகளிலும், வேர்களிலும் கனிகளைச் சுமந்து நின்றன. தேன் அடைகள் குன்றுகளின் இடுக்குகளில் தொங்கிக்கொண்டிருந்தன. விசுவநாதனிடம் உடைவாள் இருந்தது.



செகந்திராபாத், ஸ்டேன்ஸ் டயர் & ரப்பர் பிராடக்ட்ஸ் லிட்., கிளை மானேஜர் சிரஞ்சீவி எஸ். ராதா கிருஷ்ணனுக்கும், கோயமுத்தூர் ஸ்டேன்ஸ்டயர்&ரப்பர் பிராடக்ட்ஸ் லிட்., அட்மினிஸ்டிரேட்டிவ் ஆபீஸ் மானேஜர் ஸ்ரீ கே. எஸ். மணி அவர்கள் குமாரத்தி சௌபாக்யவதி இந்திராணிக்கும் சமீபத்தில் சென்னையில் திருமணம் வெகு சிறப்பாக நடைபெற்றது.

வாழ்க மணமக்கள் !

# பம்பாய்த் தமிழ்ச் சங்கம்

பம்பாய் - 22

## வெள்ளி விழா நாடகப் போட்டி

**அறிவிப்பு**

வெள்ளி விழா நாடகப் போட்டிக்கு அன்பர்கள் காட்டியுள்ள ஆதரவு மிகவும் மகிழ்ச்சி யளிக்கிறது. போட்டிக்குத் திரளாக வந்துள்ள நாடகங்கள் தற்போது பரிசீலனைக் குழுவால் பரிசீலிக்கப்பட்டு வருகின்றன. சில தவிர்க்க முடியாத காரணங்களினால் பரிசீலனை சற்றுத் தாமதமாகிவிட்டபடியால், போட்டி முடிவு 1966ம் வருடம் செப்டம்பர் மாத இறுதியில் அறிவிக்கப்படுமெனத் தெரிவித்துக் கொள்கிறோம்.

பம்பாய்த் தமிழ்ச் சங்கத்தார்

பாழாய்ப்போன பல்வலி—சினிமா போவது வீணாகியிருக்கும்

சீதா, ஏன் என்னவோ போலிருக்கே!

மாலையில் சினிமாவுக்குப் போவதாக விஜயாவும் நானும் ப்ளான் பண்ணியிருக்கோம் — எனக்கோ ஒரே பல்வலி. உயிர் போறது!

அட இதுக்கா கவலை! ஒரு ஸாரிடான் சாப்பிடேன், பல்வலி என்னமா ஓடறது பார்!

சீதா ஸாரிடான் சாப்பிடுகிறாள்

பிறகு...

பல்வலி பறந்து போச்சே! உண்மையாகவே ஸாரிடான் அதிசயம்தான்!



# ஒரே ஒரு ஸாரிடான்

**'ரோஷ்'**

**வலியைப் போக்குகிறது,**
**ஆசுவாசப் படுத்துகிறது, புத்துணர்ச்சி யூட்டுகிறது**

உலகப்புகழ் பெற்ற வலி நிவாரணியான ஸாரிடான், பல்வலி, தலைவலி, உடல்வலி மற்றும் சாதாரண உடற்கோளாறுகள் இவற்றிலிருந்து விரைவில், அபாயமின்றி நிச்சயமாக நிவாரணம் அளிக்கிறது. பெரியவர்களுக்கு 1 வில்லை, குழந்தைகளுக்கு ¼ லிருந்து ½ வில்லை வரை கொடுக்கலாம்.



ஒரே வில்லை ஸாரிடான் போதும்

**'ரோஷ்' தயாரிப்பு**

ஸோல் டிஸ்ட்ரிப்யூட்டர்கள் : வால்டாஸ் லிமிடெட்

JWT. VT. 3338 (A)

இராமனும் சீதையும் அந்த வழியாகத் தான் ஒன்றி நடந்திருப்பார்கள். அந்தக் காட்சியைக் கம்பர் எவ்வாறு தம் காவியத்தில் ஓவியமாகத் தீட்டியிருந்தார் என்பதை அறியாத முதலியார் விசுவநாதனிடம் கூறியிருந்தார். அந்த நினைவு வந்து விட்டது விசுவநாதனுக்கு.

கோதாவரி நதி தீரத்தில் உலாவிய அன்னங்கள் சீதையின் நடையழகு கண்டு நாணமுற்று ஒதுங்கிய காட்சியைக் கண்டு இராமன் புன்முறுவல் செய்தானாம். சீதையும் அவ்வாறே கோதாவரியில் நீருண்டு செல்லும் யானையின் நடையழகில் தன்னருகே வரும் இராமனின் மிடுக்கு நடையைக் கண்டாளாம்.

''ஓதிமம் ஒதுங்கக் கண்ட
உத்தமன், உழையள் ஆகும்
சீதைதன் நடையை நோக்கிச்
சிறியதோர் முறுவல் செய்தான்;
மாதவள் தானும் ஆண்டு
வந்துநீர் உண்டு மீளும்
போதகம் நடப்ப நோக்கிப்
புதியதோர் முறுவல் பூத்தான்.''

விசுவநாதன் லட்சுமிக்கு இந்தக் காட்சியைச் சொல்லி விட்டு, ''சாம்ராஜ்யத்தைத் துறந்துவிட்டு வந்த இராமன் ஒரு வகையில் அதிர்ஷ்டசாலிதான். அயோத்தியில் அவன் முடிசூடிக்கொண்டு சக்கரவர்த்தியாக ஆட்சி செய்திருந்தால் இப்படியெல்லாம் அவன் வாழ்ந்திருக்க முடியாது!'' என்றான்.

இராமனின் துறவு பற்றி விசுவநாதன் குறிப்பிட்டது ஏனோ அப்போது லட்சுமியின் உள்ளத்தில் சுருக்கென்று தைத்தது. 'பஞ்சவடியில்தானே இராமன் சீதையைப் பறி கொடுத்தான்!' என்று நினைத்து அவள் உள்ளம் நடுங்கினாள்.

அத்தியாயம் ஏழு

# பெண்ணென்ற பெரும் புதிர்

வேரில் பழுத்த பலாவின் சுளைகளை லட்சுமிக்குத் தேனில் தோய்த்துக் கொடுத்தான் விசுவநாதன். மலைப்புறத்துக் குரங்குகளின் கூட்டம் அவர்கள் உண்ணுவதை வேடிக்கை பார்க்க வந்து விட்டது. அவைகளுக்கும் பகிர்ந்து கொடுத்து மகிழ்ந்தான்.

லட்சுமி அங்கே காட்டுச் செடிகளில் மலர்ந்த மலர்களைக் கொய்து தன் தலை நிறையச் சூடிக் கொண்டாள். பஞ்சவடியில் சீதையும் ராமனும் கழித்த நாட்கள் ஏனோ அவர்களுக்கு அடிக்கடி நினைவில் வந்தது. அந்த நாட்கள் அவர்கள் வாழ்க்கையிலேயே சீதைக்கும் இராமனுக்கும் மிகவும் இன்பகரமான நாட்களாக இருந்திருக்கக் கூடும் என்று விசுவநாதன் நினைத்தான். லட்சுமிக்கோ அந்த நினைவுகள் இன்பத்தோடு துன்பத்தையும் கொடுத்தன. இன்பத்தை யடுத்து வந்த பயங்கரமான பிரிவுத் துன்பத்தையும் அவள் நினைத்து நடுங்கினாள்.

நேரம் செல்லச் செல்ல இருவருமே இனம் புரியாத வேதனைத் துன்பத்தில் தவிக்கலானார்கள்.

''லட்சுமி! முன்பு நான் பாண்டிய நாட்டுக்குப் புறப்படும்போதும் மிகவும் துன்பத்தோடுதான் இதே இடத்தில் சந்தித்தோம். ஆனால் அந்தத் துன்பம் வேறு வகையானது. இப்போதோ உன்னை விட்டுப் பிரிந்து செல்ல வேண்டுமே என்று ஏங்குகிறேன். பிரிவின் கொடுமை ஏனோ என்னை அளவுக் கதிகமாகவே வாட்டிக் கொண்டிருக்கிறது. மனத்தின் ஒரு மூலையில் முள் உறுத்துவது போல் ஓர் உறுத்தல் நேரம் செல்லச் செல்ல அதிகமாகிக் கொண்டே வருகிறது.''

லட்சுமியின் விழிகளில் குபீரென்று துங்கபத்திரை பெருக்கெடுக்கத் தொடங்கி விட்டது. அவள் எதை வாய்விட்டுக் கூற முடியாமல் தனக்குள் குமுறிக் கொண்டிருந்தாளோ அதையே விசுவநாதன் கூறியவுடன் அவள் அணையுடைப்பட்ட மெழுகானாள்.

மாலை நேரத்து வானத்தில் பலவகை வண்ணங்களில் மேகத் துண்டுகள் மிதந்து கொண்டிருந்தன. மலைப்புல்லின் நறுமணமும், லட்சுமியின் கேசத்தில் வாடித் துவண்டிருந்த காட்டு மலர்களின் மணமும் ஒன்று கூடி அங்கு வீசிய இளம் காற்றையே கிறங்கச் செய்து கொண்டிருந்தது. துங்கபத்திரை இளமையின் சுமை தாங்காது மாலை நேரத்தின் கொடுமையால் பெருமூச்செறிந்தவாறே சலசலத்தோடிக் கொண்டிருந்தாள். பறவைகளின் ஒலிகளில் தாபத் துடிப்புகள் எழுந்த வண்ணம் இருந்தன.

நெடு நேரம் இருவருமே வாய் பேசாது மௌனத்தில் மூழ்கியிருந்தனர். இருவரையுமே அந்த இயற்கைச் சூழ்நிலை நினைவிழக்கச் செய்து விட்டது. இருவருமே ஒருவர் மற்றவருக்குத் தெரியாதவாறு தாங்கள் பிரியப் போகும் வேளை நெருங்குவதை உணரத் தொடங்கினர்.

''நாம் எவ்வளவு நெருக்கத்தில் இருக்கிறோம். இருந்தும் எவ்வளவு தொலைவில் இருக்கிறோம்!'' என்றான் விசுவநாதன்.

''ஆமாம், இவ்வளவு அழகு மயக்கம் தரும் இதே துங்கபத்திரா தீரம் சிறிது நேரத்துக்கெல்லாம் பயங்கரமான இடமாகவும் மாறிவிடும். கனத்த இருள் கவியத் தொடங்கியவுடன் இங்கே வன விலங்குகளின் நடமாட்டம் தொடங்கி விடும். அதை நினைத்தாலே அச்சமாக இருக்கிறது.'' லட்சுமியின் மெல்லுடல் அச்சத்தால் நடுங்கியது.

மெல்ல அவளைப் பற்றித் தன்னருகே இழுத்துக் கொண்டான் விசுவநாதன். அவளது நடுக்கம் அப்படியும் தீரவில்லை. அவள் முகத்தைத் திருப்பி அவளுடைய லட்டக் கரு

விழிகள் இரண்டையும் உற்றுப் பார்த்தான். அவைகூட நடுங்கிக் கொண்டிருந்தன.

"என்ன லட்சுமி இது!"

"எனக்கு ஒன்றுமே தோன்றவில்லை;- நேரம் இருட்டி வருவதைப் பார்த்தால் என்னவோ போலிருக்கிறது! உங்களால் இந்த நேரத்தை இப்படியே நிலைநிறுத்திவிட முடியுமா? முடியுமா, சொல்லுங்கள்!"

விசுவநாதன் தன்னையே மறந்து விட்டான். ஈருயிரும் ஓருயிராய், ஈருடலும் ஓருடலாய், இரு நெஞ்சம் ஒரு நெஞ்சாய், லட்சுமி என்று தனியே ஒருத்தியோ, விசுவநாதன் என்று தனியாக ஒருவனோ இல்லாதவாறு அதே கணத்தில், அதே இடத்தில், அதே வேளையில், ஒருவரில் ஒருவர் ஒன்றி, ஒருவரில் ஒருவரை ஒருவர் இழந்து விட்டால் என்ன?

"லட்சுமி!..." என்று தடுமாறியவன், "நமக்குத்தான் திருமணம் நடந்துவிட்டதே, லட்சுமி!...." என்று கெஞ்சுவது போல் கூறினான். ரோஜா இதழ்களெனத் துடித்த அவளுடைய செவ்விதழ்களில் அவனுடைய கண்ணீர் சொட்டிச் சிதறியது.

சட்டெனத் தன் இரு கரங்களையும் கூப்பி அவனை வணங்கித் தடுத்தாள் லட்சுமி. "வேண்டாம்! உங்களைப் பொறுத்தவரையில் நீங்கள் என்னைத் திருமணம் செய்து கொண்டு விட்டீர்கள். நானும் என் உள்ளத்தால் உங்களை வரித்து விட்டேன். ஆனாலும் உங்களைப் போல் ஓர் உயர்ந்த உத்தமரை அடைவதற்கு நான் இன்னும் சில நாட்கள் நோன்பிருக்க வேண்டும். என்னுடைய நோன்பு வெற்றி பெற வேண்டுமென்று நீங்களும் இறைவனை வேண்டிக்கொள்ளுங்கள்."

அவளுடைய நோன்பு என்னவென்று அவனும் கேட்கவில்லை; அவளும் கூறவில்லை. அவன் சக்கரவர்த்தியாக முடிசூடி ஆள வேண்டுமென்றே அவள் நோன்பிருந்தாள். ஆனால் அவள் அரசமாதேவியாக உயர்ந்து வாழ வேண்டுமென்ற நோக்கத்தாலோ, அவன் ஏகச்சக்ராதிபதியாக விளங்க வேண்டுமென்பதாலோ அவள் அந்த நோன்பிருக்கவில்லை. அந்தக் குன்றுகளுக்கு அப்பால் வாழ்ந்த மலைக் குறவர்களில் ஒருவனாகவே அவன் வாழ்ந்தாலும், அவள் அவனுடைய மலைக் குறத்தியாகவே வாழத் துடித்தாள். ஆனால் அவளுடைய அப்பாவின் ஆவலை நிறைவேற்றுவதற்காகவே அவன் சக்கரவர்த்தியாக உயர வேண்டும்! அவனுடைய எண்ணத்தில் அந்த ஆவல் முளைத்துத் தளிர் விட வேண்டும்!

விசுவநாதன் ஆண் மகன். குணத்திலே குன்று போல் உயர்ந்தோங்க விரும்பியவன் என்றாலும் அவன் ஆண் மகன்.

"லட்சுமி! நான் உன்னைத் திருமணம் செய்து கொண்டு விட்டேன் என்ற முழு நம்பிக்கை எனக்கு ஏற்படவேண்டும், லட்சுமி! தன் மனைவியை மீண்டும் அடைவதற்காக இராமன் பத்து ஆண்டுகள் இடைவிடாத போராட்டம் நடத்தினானல்லவா? அது போல் உன்னை நான் எப்படியும் போராடிப் பெற்று விடுவேன் லட்சுமி!...." விசுவநாதனின் குரல் தழுதழுத்தது.

இராமன் என்ற பெயரைக் கேட்டவுடனேயே லட்சுமியின் உடல் மீண்டும் நடுக்கமுற்றது. சட்டென்று எழுந்து நின்றாள்.

"வேண்டாம்! இந்தப் பஞ்சவடிப் பாழ் மண்ணில் இந்த நினைவே வேண்டாம். இராமனையும் சீதையையும் பிரித்து வைத்த மண் இது! இந்த நதி, மலை, மரம், செடி, கொடி எல்லாவற்றையும் பார்த்து இராமனுக்காகச் சீதையும், சீதைக்காக இராமனும் கதறி அழுத இடம் இது!... வாருங்கள்; விரைந்து வாருங்கள்; நாம் இந்த இடத்தை விட்டே புறப்படுவோம்! இனி நாம் இங்கு வரவே வேண்டாம்!"

"லட்சுமி!"

"ஆமாம்; இங்கு நிற்கவும் வேண்டாம்; வாருங்கள்!"

லட்சுமி ஓட்டமும் நடையுமாக அங்கிருந்து கிளம்பினாள். விசுவநாதனுக்கு ஒன்றுமே விளங்கவில்லை. உலகத்தில் பிரமன் முதல் பெண்ணைப் படைத்தபோதே அவளிடம் எத்தனை எத்தனையோ நம்பிக்கைகளையும் குழப்பங்களையும் வைத்துப் படைத்திருந்தான் என்பதை அவன் அறியாதவன். அவளைப் பின்பற்றி அவனும் ஓடிவந்தான். அவளுடைய நடுங்கும் கரத்தை இறுகப் பற்றிக் கொண்டு, "என்னை மன்னித்துவிடு; லட்சுமி! என்னிடம் உனக்கு இவ்வளவு அச்சமா?" என்றான்.

"இல்லை! உங்களைவிட நான்தான் நிலை வழிந்து விட்டேன். நீங்கள் ஆண்பிள்ளை, அதனால் வாய்விட்டுச் சொல்லிவிட்டீர்கள். என்னால் எதையும் சொல்ல முடியவில்லை... ஆனால் முதலில் என் நோன்பு நிறைவேறட்டும். அதுவரையிலும், அதற்குப் பிறகும்கூட நாம் இங்கு வரவேண்டாம். இது சேர்த்து வைத்த இடமல்ல; பிரித்து வைத்த இடம்!"

துங்கபத்திரையைத் தோணியில் கடந்து அவர்கள் மறு கரைக்கு வந்து சேர்ந்தார்கள். விசுவநாதனுக்கு ஏனோ முன்னிலும் லட்சுமியிடம் அதிகமான அன்பு ஊற்றுப் பெருக்கெடுத்தது. விந்தைகள் நிறைந்த பெண் மணியாக அவள் அவனுக்கு இப்போது தோற்றமளித்தாள்.

ஆற்றங்கரையில் இராமபிரானின் குடவரைக் கோயிலொன்று இருந்தது. சீதையும் இலக்குமணனும் இரு புறமும் நின்றிருக்க மையத்தில் வில்லும் அம்புமாக இராமன் நின்றிருந்தான். அவர்களை அடிபணிந்து வணங்கும் அநுமானின் படிவமும் அருகில் இருந்தது.

"வா! இராமபிரானின் கோயிலுக்குச் சென்று வணங்கிச் செல்வோம்" என்று லட்சுமியை அழைத்தான் விசுவநாதன்.

"வேண்டாம்! வனவாசக் கோலத்திலுள்ள இராமனின் கோயில் இது. அயோத்தியில் சக்கரவர்த்திகளாக முடிசூடிக்கொண்ட பட்டாபிஷேகத் திருக் கோலத்தில்தான் நாம் அவரைத் தரிசிக்க வேண்டும். அரண்மனையை அடுத்திருக்கும் அந்தக் கோயிலுக்குச் செல்லுவோம்" என்றாள் லட்சுமி.

விசுவநாதனால் அவளைப் புரிந்துகொள்ள முடியவில்லை.

**(தொடரும்)**






# கலிஃபோர்னியா கண்ட குத்து விளக்கு

## இந்திரா பார்த்தசாரதி

பாரதத்தின் அறிவியற் கருவூலமாகிய உபநிடதங்களையும் மற்றும் அதன் பண்பாட்டைப் பற்றிப் பேசும் எல்லா இலக்கியங்களையும் நன்றாகக் கரைத்துக் குடித்த நார்மன் மெய்லர் பழம் பெரும் இந் நாகரிகத்தின் இக்காலச் சந்ததிகளைக் காணும் ஆவலினால் உந்தப்பட்டு, கலிஃபோர்னியாவிலிருந்து குடவாசலுக்கு வந்தான்.

குடவாசலை அவன் தேர்ந்தெடுத்தது ஓர் எதேச்சையான முடிவு. பம்பாயிலிருந்து அவன் சென்னைக்கு வந்தபோது அவன் பக்கத்திலிருந்தவர் தாம் குடவாசலைச் சார்ந்தவர் என்று சொல்லிக் கொண்டார். ஒரு நாட்டு மக்களின் நாகரிகத்தைப் பற்றி அறிய வேண்டுமானால், அதன் உயிர்த் துடிப்பு கிராமத்தில் இருக்கிறது என்பதை உணர்ந்த அவன் ஏதாவது கிராமத்தில் சில நாட்கள் தங்கியிருக்க வேண்டுமென்று தீர்மானித்துத் தன்னுடன் பிரயாணம் செய்தவருடைய கிராமமாகிய குடவாசலில் இருக்க முடிவு செய்தான்.

கும்பகோணத்திலிருந்து திருவாரூருக்குச் செல்லும் பஸ்ஸில் ஏறி அவன் குடவாசலில் இறங்கியபோது, எங்கு தங்க வேண்டுமென்பதைப் பற்றி அவனுக்கு எந்த விதமான திட்டமும் இல்லை.

தனக்குத் தேவையான எல்லாப் பொருள்களையும் ஒரு பெரிய பையில் அடைத்துக் கொண்டு, அந்தப்பையை அவன் தன் தோளில் சுமந்து சென்றது, கடை வீதியில் சென்று கொண்டிருந்த யாவரையும் கவர்ந்தது.

குட வாசலிலுள்ள கல்வி யறிவில்லாத மக்களுக்குச் சட்ட ஆலோசகராகிய வீட்டுத் தரகர் பட்டு, தாம் பள்ளிக்கூடத்தில் எட்டாம் வகுப்பை மூன்று தடவை முற்றுகை யிட்டபோது கற்றுக் கொண்ட அரைகுறை ஆங்கிலத்தில் கேட்டார்: ''யார் வேண்டும் உங்களுக்கு?'' என்று.

கலிஃபோர்னியா பல்கலைக் கழகத்தில் சம்ஸ்கிருதத்தையும் தமிழையும் விரும்பிப் படித்துத் தேர்ந்து, அமெரிக்காவில் இந்தியத் தூதுவராலயங்களில் பணியாற்றிய தமிழரோடு அளவளாவித் தமிழில் நன்றாகப் பேசக் கற்றுக் கொண்ட நார்மன் மெய்லர் தனக்குத் தமிழ் தெரியுமென்று சொல்லிக் கொள்ள விரும்பவில்லை. அவர்கள் என்ன பேசிக் கொள்ளுகிறார்கள் என்று தெரிந்து கொள்ள விரும்பினான். ஆகவே அவன், பட்டு பேசிய முறையைப் பின்பற்றிப் பாதி சைகையும், பாதி ஆங்கிலமுமாக, இதற்குப் பதில் கூறினான்: ''என் பெயர் நார்மன் மெய்லர். எனக்கு இங்கே தங்கியிருக்க ஒரு வீடு வேண்டும். உங்கள் பெயர்?''

தரகர் பட்டு இதை எதிர்பார்க்கவில்லை. வெள்ளைக்காரன் ஒருவன் திடுதிப்பென்று வந்து தான் தங்குவதற்கு ஒரு வீடு வேண்டும் என்று கேட்டால் யாருக்குத்தான் தூக்கி வாரிப் போடாது?

மேலண்டை வீதியில் மைனர் ரங்குவின் வீடு பூட்டியே கிடக்கிறது. முன்பெல்லாம் அவன் அவ்வீட்டைத் தன் 'லீலை'களுக்குப் பயன்படுத்துவது வழக்கம். ஆனால் எல்லாம் ஓய்ந்து இப்பொழுது அவன் கையைப் பிசைந்து கொண்டிருக்கிறான். நூறு ரூபாய் வாடகை கிடைக்குமென்றால் வேண்டாமென்றா சொல்லப் போகிறான்? வெள்ளைக்காரன், இவனுக்கு இந்தக் கிராமத்தில் வீட்டு வாடகையைப் பற்றி என்ன தெரியப் போகிறது? நூறு ரூபாய் இவனுக்கு நூறு காசு மாதிரி... நூறு ரூபாய்க்கு ஏற்பாடு செய்து விட்டால், ரங்குவிடமிருந்து பத்தோ இருபதோ புரட்டலாம். இவனோ இருக்கவே இருக்கிறான்..... நேற்று ஒப்பிலியப்பன் கோயில் போய்விட்டு வந்தது கைமேல் பலனைத் தருகிறதோ!....

தான் பேசியது அவருக்குப் புரியவில்லையோ என்று நினைத்த நார்மன் மெய்லர் மீண்டும் தான் சொன்னதை நிறுத்தித் தெளிவாக ஆங்கிலத்தில் கூறினான்.

''என் பெயர் பட்டு'' என்று சொன்ன அவர், ''உங்களுக்கு வீடா வேண்டும் ?'' என்று கேட்டு விட்டுச் சிறிது நேரம் யோசித்தார்.

''கிடைப்பது கஷ்டமோ?''

பட்டு இடக்கை ஆள்காட்டி விரலை மூக்கின் நுனி மீது வைத்துக் கொண்டார். அவர் சிந்தித்துக் கொண்டிருப்பதற்கு இது அடையாளம் என்று புரிந்து கொண்ட நார்மன் அவர் முகத்தை ஆவலுடன் நோக்கினான்.

''எவ்வளவு வாடகை வேண்டுமானாலும் தருகிறேன்.....'' என்றான் நார்மன்.

''வாடகையைப் பற்றி இல்லை.... !'' என்று இழுத்த பட்டு தலையின் பின்புறம் காதருகே சொறிந்து கொண்டார்.

வெள்ளைக்காரன் ஒருவன் ஏதோ கேட்பதும், பட்டு தன் தலையைச் சொறிந்து கொண்டு நிற்பதும் அந்தப் பக்கம் சென்ற வாத்தியார் வைத்தியைக் கவர்ந்தன. அவர் அவர்கள் அருகில் சென்று கேட்டார்: ''என்னடா பட்டு, என்ன?''

இனித் தாமதித்தால் தொழிலுக்கு ஆபத்து என்றுணர்ந்த பட்டு, ''ஒன்றுமில்லை, ஒன்றுமில்லை'' என்று அவசரம் அவசரமாகச் சொல்லியவாறு நார்மனிடம், ''வாருங்கள், வாருங்கள்'' என்று அழைத்துக் கொண்டே விரைவாக அவ்விடத்தை விட்டகன்றார்.

பட்டுவின் செயலில் காணப்பட்ட இந்தத் திடீர் சுறுசுறுப்பு நார்மனுக்கு வியப்பைத் தந்தது. வீடு ஏதேனும் நினைவுக்கு வந்த அவசரமா, அல்லது புதிதாக வந்தவருடன் பேச விருப்பமின்மையா?

சிறிது தூரம் சென்றதும் எதிரே முருகையன் வரக் கண்ட பட்டு நார்மனிடம் கூறினார் : ''அந்த மூட்டையை இவனிடத்தில் கொடுங்கள். எடுத்துக் கொண்டு வருவான்....''

முருகையன் தன் காவி ஏறிய பற்கள் வெளியே தெரியச் சிரித்துக் கொண்டே நார்மன் அருகில் வந்து நின்று அவனை நம்பிக்கையுடன் பார்த்தான்.

''பரவாயில்லை.... நானே தூக்கிக் கொண்டு வருகிறேன்'' என்றான் நார்மன்.

''அவனுக்கு ஒரு நாலணா கொடுத்தால் போதும்....'' என்று சொன்ன பட்டு, முருகையனைக் கேட்டார்: ''என்னடா, நாலணா வாங்கித் தரேன், சரிதானே....?''

''ஐயா இஷ்டம்.... அதுக்கு மேலே நான் என்ன சொல்றது?'' என்றான் முருகையன்.

நார்மன் முருகையனிடம் தன் பையைக் கொடுத்தான். நன்றி ததும்பிய முகத்துடன் முருகையன் அதை வாங்கிக் கொண்டான்.

இந்த வெள்ளைக்காரர்களே விசித்திரமான பேர்வழிகள் என்று பட்டது பட்டுவுக்கு.

கையில் ஏந்திய குத்துவிளக்குடன் சாரதா அப்பொழுது எதிரே வரக் கண்டார் பட்டு.

''எங்கே எடுத்துக் கொண்டு போகிறாய், அதை, விற்கவா ?'' என்று பட்டு கேட்டார்.

நார்மன் அந்தப் பெண்ணை நோக்கினான். கீழ்நாட்டு மக்களுக்கே உரித்தான கருமை வாய்ந்த திட்சண்யமான கண்கள். தாமரை மலரின் மணம் போன்ற ஆரவாரமற்ற அழகு.

அந்நியனைக் கண்ட கூச்சத்தால் முகம் சிவந்த சாரதா, நடுத் தெருவில் தன் வறுமை விளம்பரமாவதைக் கண்டு வெட்கப்பட்ட நிலையில், கீழே குனிந்து கொண்டே கூறினாள் : ''ஆமாம்....''

வெள்ளைக்காரர்களுக்கு இந்த மாதிரி பொருள்களில் ஈடுபாடுண்டு என்பதை உணர்ந்த பட்டு, அவளிடத்தில் கூறினார்: ''சரி, கொண்டா, அதை இப்படி....!''

பளபளப்பான 'நியான் சைன்' நாகரிகத்திலிருந்து வந்திருந்த நார்மனை இந்தக் குத்துவிளக்கு மிகவும் கவர்ந்தது. அவன் இந்த மாதிரியான விளக்கொன்றை கலிபோர்னியாவில் ஓர் இந்திய நண்பர் வீட்டில் பார்த்திருக்கிறான். பூஜைக்கு ஏற்றி வைக்கப்பட்டிருந்தது அது. ஆனால் தமிழ் நாட்டுக் கிராமமொன்றில் அதை விற்பதற்காக ஒரு பெண் தெருவில் எடுத்துச் செல்வாளென்று அவன் எதிர்பார்க்கவில்லை.

''உங்களுக்குப் பிடித்திருக்கிறதா இது?'' என்று கேட்டார் பட்டு.

''இது விலைக்கா....?'' என்று கேட்டான் நார்மன். தான் அவர்கள் பேசியதைப் புரிந்து கொண்டதாகக் காட்டிக் கொள்ள அவன் விரும்பவில்லை.

''விலைக்குத்தான்'' என்று நார்மனிடம் கூறிய பட்டு, சாரதாவிடம் சொன்னார்: ''இது என்ன பத்து ரூபாய் பெறும். நீ அறுபது ரூபாய் விலை சொல்லு. உனக்கு முப்பது. எனக்கு முப்பது. சரிதானே...?''

தாம் தமிழில் கூறுவது நார்மனுக்குப் புரியாதென்ற நம்பிக்கையில் அவர் துணிந்து பேரம் பேசிக் கொண்டிருந்த செய்கை அவனுக்குச் சிறிது அதிர்ச்சியைத் தந்தது.

சாரதா பட்டுவை எரித்து விடுபவள் போல் பார்த்தாள். குத்துவிளக்கை விற்க நேர்ந்திருக்கிறதே என்று ஏற்கனவே மனம்



'' வீட்டில் உள்ள குத்துவிளக்கை விற்பதென்பது செல்வத்தின் செல்வ மாகிய திருமகளை வெளியேற்றுவது மாதிரி...கல்யாணம் ஆகிச் செல்லும் பெண்ணுக்குக் குத்துவிளக்கு கொடுப்பது எங்கள் மரபு. கணவன் வீட்டுக்குச் சென்று ஒளியேற்றி வைக்க வேண்டும் என்பதுதான் இதன் அர்த்தம்'' என்கிறாள் சாரதா.

என்னதான் வறுமையில் உழன்றாலும் பாரதத்தின் பண்பு பண்புதான் என்பதை வலியுறுத்தும் இந்தச் சிறப்புச் சிறுகதை அட்டைப்படக் கதையாகவும் சிறக்கிறது.

நொந்திருந்த அவனுக்குப் பட்டுவின் 'பேரம்' அவமானமாக இருந்தது.

''உங்க மாதிரி எல்லாரையும் ஏமாத்த அவ்வளவு கேழ்த்தரமாகப் போயிடல்லே நான்..... குத்துவிளக்கைக் கொண்டாங்கோ இப்படி!'' என்று கூறிக் கொண்டே அதை அவர் கையினின்றும் 'வெடுக்'கென்று பிடுங்கிக் கொண்டு சென்றாள்.

பட்டு நார்மனை நோக்கினார். அவன் நடந்ததைக் கவனிக்காதது போல் வேறு புறம் திரும்பிக் கொண்டிருந்தான்.

ஒரு நல்ல வியாபாரம் கைநழுவிப் போய் விட்டதே என்ற ஏமாற்றத்தால் தாக்குண்ட பட்டு தமக்குள் படபடத்தார்.

''கழுதை.... இராத்திரிச் சாப்பாட்டுக்கு வழி இல்லே..... திமிர் அசாத்தியம். அப்பன் கடன் வாங்கியே செத்தான். அம்மா இருக்கிற ஒழுங்குக்கு நாக்கைப் பாரு. நாக்கை.... சாமானை வித்துச் சாப்பிடுவா ளாம், தலை வணங்க மாட்டாளாம். அல்லி ராணி......!''

பட்டுவின் மனநிலையைப் புரிந்து கொண்ட நார்மன் ஒன்றும் பேசவில்லை.

அழிந்துபட்ட பட்டுவின் சுயகௌரவத் துக்கு மரியாதை செலுத்துவது போல் சில நிமிஷங்கள் அமைதி நிலவியது.

சிறிது தூரம் சென்றதும் நார்மன் கேட் டான் : ''இந்தப் பெண்ணுக்குத் திருமணம் ஆகவில்லையா....?''

''திருமணமா இவளுக்கு? இவள் அம்மா நடத்தை சரியில்லே....'' என்றார் பட்டு.

'பணம் இல்லாத காரணத்தினால் நடத்தை சரியில்லையா, அல்லது பணம் மிகுதியாக உள்ள காரணத்தினால் நடத்தை சரியில்லையா ?' என்று வினவினான் நார்மன். அந்தப் பெண் ணின் வறுமையைப் பற்றி அவன் தெரிந்து கொண்டானாயினும், இது அவன் தனக்குத் தானே கேட்டுக் கொண்ட கேள்வி.

வறுமையின் காரணமாக இந்தியாவில் ஒழுக்கம் குறைந்திருக்கிறது: அமெரிக்கா வில் ? — செல்வ மிகுதியினால் ஒழுக்கம் குறைந் திருக்கிறது! இது தீராத புதிர்தான்.

''வறுமையின் காரணமாக ஒழுக்கம் குறைந்தால் அது தொழில். செல்வத்தின் காரணமாக ஒழுக்கம் குறைந்தால் அது விளை யாட்டு......'' என்றார் பட்டு.

பட்டுவிடமிருந்து இக்கூற்றை எதிர்பார்க் காத நார்மன் ஒருகணம் அவரை வியப்புடன் நோக்கினான்.

''இந்தச் சாரதாவிடம் 'பேரம்' பேசு வதைவிட அவள் அம்மாவிடம் சென்று ஐம்பது ரூபாயை விட்டெறிந்து விட்டால் குத்துவிளக்கைத் தன்றால் தந்துவிட்டுப் போகிறாள். அவளுக்கு வேண்டியது பணம் தானே?'' என்று கூறினார் பட்டு. ஒரு குறிப் பிட்ட சூழ்நிலையை அநுபவத்தின் பலத்தினால் ஆராய்ந்து தம் கருத்தை வெளியிட்ட பட்டுவை மீண்டும் 'தொழில் நினைவு' பற்றிக் கொண்டது போலும்! சாரதாவின் குத்துவிளக்கு அவருக்குக் கௌரவப் பிரச்னையோ ?

''எனக்கு அந்தக் குத்துவிளக்கு வேண்டு மென்ற அவசியமில்லை'' என்றான் நார்மன்.

''நீங்கள் சும்மா இருங்கள். உங்களுக்கு ஏற்பட்ட அவமானம் எனக்கில்லையா ?''

நார்மனுக்குத் தனக்கு என்ன அவமானம் ஏற்பட்டது என்று புரியவில்லை. தன்னையும் கட்டி சேர்த்துக் கொள்ளும் முயற்சி! ஓர் ஏழைப் பெண்ணிடம் தன் கோபத்தைக் காட்டுவதிலா இவர் கௌரவத்தின் வரை யறை அடங்கிக் கிடக்கிறது?

''இதுதான் மைனர் ரங்குவின் வீடு...... இவனைத்தான் வீடு கேட்கலாமென்று உங்களை அழைத்து வந்தேன். இவனுடைய இன்னொரு வீடு காலியாக இருக்கிறது.....'' என்றார் பட்டு.

''மைனர்'' — என்று சொல்லிவிட்டுக் கொஞ்சம் திகைத்த நார்மன் பிறகு கேட் டான்: ''அவர் கிறிஸ்துவரா?''

''நோ....நோ....'' என்று பலமாகத் தலையசைத்த பட்டு கூறினார்: ''அவன் பிராமணன்.''

அவர் குரலில் கண்ட ஆக்ரோஷத்தைப் பார்த்தால் தான் ஒரு மாபெரும் குற்றம் இழைத்துவிட்டோம் போலிருக்கிறது என்று பட்டது நார்மனுக்கு.

'' 'மைனர்' என்றால் என்ன?'' என்று கேட்டான் நார்மன்.

''மைனர் என்றால்....'' — இதை எப்படி விளக்குவதென்று அவருக்குப் புரியவில்லை.

'நடத்தை சரியில்லே' என்று சொல்லி விட்டு உள்ளே செல்ல முற்பட்ட பட்டு வுக்கு முருகையன் நினைவு வந்தது.

''இப்படி வையேண்டா, பையை'' என்று திண்ணையைக் காட்டினார்.

முருகையனிடம் ஓர் ஐந்து ரூபாயை நீட்டினான் நார்மன்.

''அவனிடம் சில்லறை இருக்காது. இது அமெரிக்கா இல்லே'' என்றார் பட்டு.

''சில்லறை வேண்டாம். அவனே எடுத்துக் கொள்ளட்டும்.''

பட்டுவுக்கு இதயம் நின்று விடும்போல் இருந்தது.

''அவனுக்கே ஐந்து ரூபாயா? நன்றாக இருக்கிறது. அத்தனையையும் அவன் குடித்துத் தொலைத்து விடுவான்....''

பணம் அவனுடைய ஒழுக்கத்தைக் கெடுத்து விடும் என்ற அவருடைய விசாரம் நார்மனுக்கு வேடிக்கையாக இருந்தது. அப்படியென்றால் இந்தியாவில் ஏழைமை தலைவிரித்தாடுவது ஒழுக்கத்தைக் காப்பாற்றத்தானோ ? —

முருகையனுக்கு அவர்கள் பேசிக் கொண்டிருந்தது ஒன்றும் புரியவில்லை. அவன் தலையில் கட்டியிருந்த 'முண்டாசை' அவிழ்த்து இடுப்பில் கட்டிக் கொண்டு இருவரையும் பார்த்துக் கொண்டு நின்றான்.

நார்மன் அவன் கையில் அந்த ஐந்து ரூபாயைத் திணித்துவிட்டுத் தலையை ஆட்டினான்.

முருகையன் வாங்கிக் கொள்ளலாமா கூடாதா என்று விளங்காமல் பட்டுவை நோக்கினான்.

''வாங்கிக்கோடா வாங்கிக்கோ. உன் காட்டிலே மழை.....'' என்றார் பட்டு.

பட்டு உள்ளே சென்றார்.

முருகையன் நார்மன் கொடுத்த ஐந்து ரூபாய் நோட்டை இரு கைகளாலும் பிடித்துக் கொண்டு அப்படியே தலைக்கு மேல் உயர்த்திக் கும்பிடு போட்டுவிட்டு அகன்றான்.

வாசல் முகப்பில் வண்ணக் கலவைகள் விளைவித்த சில சித்திரங்கள் காணப்பட்டன. தாமரை மலரில் வீற்றிருக்கும் அப்பெண்ணின் உருவம் செல்வத்தின் தெய்வமாகிய திருமகளைக் குறிக்கின்றது போலும். இரு மருங்கும் இரண்டு யானைகள் துதிக்கைகளை உயர்த்தி அஞ்சலி செலுத்துகின்றன.

டாலரே தெய்வம் என்று வணங்கும் அமெரிக்க நாகரிகத்துக்கும், தெய்வமே டாலரைத் தரும் என்ற பாரத நாட்டு நம்பிக்கைக்கும் எத்தனை வேறுபாடு ?

மைனர் ரங்குவுடன் பட்டு வெளியே வந்தார்.

ரங்குவின் கழுத்தை அலங்கரித்த புலி நகம் கோத்த 'மைனர்' சங்கிலி நார்மனின் கவனத்தைக் கவர்ந்தது. நார்மன் அதை உற்றுப் பார்ப்பதைக் கண்ட ரங்கு தேங்காய்ப் பூத் துவாலையினால் உடலை மூடிக்கொண்டான்.

''வீட்டைப் பார்க்கப் போகலாமா ?'' என்று ரங்கு பட்டுவைப் பார்த்துக் கேட்டான்.

''ரொம்ப அவசரப்படாதேடா,முட்டாள். யோசிக்கச் சொல்ற மாதிரி சொல்லு....'' என்று தமிழில் கூறினார்.

''என்ன விஷயம்?'' என்று கேட்டான் நார்மன். அவன் பட்டுவின் நாடகத்தை ரசிக்கத் தொடங்கி விட்டான். தனக்குத் தமிழ் தெரியுமென்று சொல்லி இதன் சுவையை அவன் கெடுக்க விரும்பவில்லை.

''அவனுக்கு இஷ்டமில்லை..... இருந்தாலும், நான் பேசி வாங்கிக் கொடுக்கிறேன்......'' என்றார் பட்டு.

பட்டுவின் கட்டளைக்கிணங்க ரங்கு முகத்தைச் சிந்திப்பதுபோல் வைத்துக் கொண்டான். அவன் துவாலையினால் முகத்தைத் துடைத்துக் கொண்டு தன் சுருள் மயிரைப் பின்புறம் கோதிக் கொண்டான்.

சிறிது நேர அமைதிக்குப் பிறகு ரங்கு கேட்டான்: ''சரி, போகலாமா?''

பட்டு மகிழ்ச்சியுடன் தலையை ஆட்டினார். ''வீட்டைக் கொடுக்கச் சம்மதித்து விட்டான்..... வீட்டைப் போய்ப் பார்க்கலாம்.....''

நார்மன் திண்ணையின் மீதிருந்த தன்னுடைய பையை எடுத்துத் தோளின் மீது சாத்திக் கொண்டான்.

''ஐந்து ரூபாய் கொடுத்திருக்கிறீர்களே.... அவனைக் கூப்பிடட்டுமா, மறுபடியும்....'' என்று கேட்டுக் கொண்டே வாசலுக்குச் சென்றார் பட்டு.

''வேண்டாம். நானே எடுத்துக் கொண்டு வருகிறேன். மீண்டும் நான் ஏதாவது பணம் கொடுத்தால், உலக ஒழுக்கத்தைப் பற்றிய உங்கள் சொற்பொழிவைக் கேட்க நேரிடும்'' என்றான் நார்மன்.

போகும் போது ரங்கு பட்டுவிடம் சொன்னான் : ''அந்த வீடு சௌகரியப்படுமோ என்னமோ அவனுக்கு? குளிக்கத் தனி அறை கிடையாது. ஏற்றங்கரையில் தான் குளிக்கணும்.....''

''ஆமாம்.... வெள்ளைக்காரன் குளிச்ச வாழ்ந்தான். நம்ப மாதிரியா, ஒரு நாளைக்கு முப்பது தரம் குளிக்க.... வருஷத்துக்கு ஒரு தடவை குளிக்கப் போறான்.....''

நார்மன் நகைத்து நின்றான். பிறகு ஓரமாகச் சென்று கொண்டிருந்த அவர்கள் ஒரு வீட்டைக் கடக்கும்போது, அவ்வீட்டு வாசலிலிருந்து எறியப்பட்ட எச்சில் இலை அவனை உராய்ந்து கொண்டு சென்றது. அந்த இலை உற்பத்தியாகிவந்த மூலஸ்தானத்தைக் காண அவன் அந்த வீட்டை நோக்கினான். நெற்றியில் பளிச்சென்ற திலகம். பட்டு கூறுவதுபோல் ஒரு நாளைக்கு முப்பது தடவை குளிப்பதினாலோ என்னவோ மிகத் தூய்மையான திருமேனி....

''கொஞ்சம் ஜாக்கிரதையாக வர வேண்டும். சாப்பாட்டு நேரம்'' என்றார் பட்டு.

இது ஓர் இயற்கையான நிகழ்ச்சிபோல் இருக்கிறது. நார்மன் பதிலொன்றும் கூறாமல் பட்டுவைப் பார்த்துப் புன்னகை செய்தான்.

ஒரு பெரிய மனைக்கட்டில் தாற்காலிகக் குடியிருப்பாக நிறுவப்பட்ட ரங்குவின் வீட்டைச் சுற்றிக் குப்பை கூளங்கள் வேலியாக அரண் செய்தன.

''இதுக்குப் போய் நூறு ரூபாய் கேட்பதா?'' என்றான் ரங்கு. அவன் மனச்சாட்சி தொந்தரவு கொடுத்தது போலும்.

''நீ வாயை மூடிண்டிரு.. நூறு ரூபாய் வாங்கித் தர நானாச்சு....''

வீட்டைத் திறந்து உள்ளே புகுந்ததும் பெரிய கூடம். சிகரெட் துண்டுகள் அங்குமிங்கும் சிதறிக் கிடந்தன. ரங்கு இந்த வீட்டில் புழங்குவது உண்டு போலிருக்கிறது.



# நேர்த்தியான வடிவம்
# நிகரற்ற சாதனை

# எச்எம்வி ஸூப்பர் நிப்பர்

1. வடிவத்தின் வனப்பைப் பாருங்கள்— தற்கால ரசனைக்கு முற்றிலும் ஏற்றதாக அது அமைந்துள்ளது
2. தெளிவு மிக்க ஒலியைக் கேளுங்கள்— இந்தியாவில் ரேடியோ புகுந்த நாள் முதல் எச்எம்விக்குப் புகழ் தேடித் தந்துள்ள நாதச் சிறப்பு இதில் பொருந்தியிருக்கிறது.
3. சிக்கனம் மிக்க இந்த ரேடியோவை வாங்குங்கள்—விலை ரூ 308/-தான்

மாடல் 6274
ஏஸி/டிஸி
5 வால்வுகள்



3 வேவ் பாண்டுகள்
பிக்-அப் இணைப்பு
வசதியும் உண்டு



ரூ 308/-ல்
எக்ஸைஸ் வரியும்
சேர்ந்துள்ளது.



GC-88-TM

## இரண்டையும் இணைத்தளிக்கிறது




# His Master's Voice




சுவைத்திராத

இனிமையோடு, சொல்லொணாப்

பசுமை நயமுள்ள பட்டாணி...

# ஹிமா பட்டாணி

## பருவம் மாறினும் பசுமை மாறாத பட்டாணி

எந்த காரும் எடுத்துச் சமைப்பதற்கேற்ற பசுமைச் சுவையுடன் சித்திரை முதல் பங்குனி வரை புத்தம்புதிதாக கிடைபெறுகிறது முத்துமுத்தான ஹிமா பட்டாணி. காரணம், பறித்தெடுத்த சுருக்கோடு உலர்பதமாகிக் காற்றுப் புகாத பொட்டலங்களுள் உடனடியாக அடக்கமிடப்படுகின்றது. ஒரு ஹிமா பொட்டலம் என்றால், ஒரு கால் கிலோ அளவுக்கு மேல் பூரித்துக் கொழிக்கும் பட்டாணி. தோட்டத்திய மணித் திரள்கள். கறி, கூட்டு... எதற்காயினும் சரி, பசுமையும் சேர்ப்பது ஹிமா பட்டாணி.

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு




லிண்டாஸ்-HHAP. 4-77 TM

கூடத்தின் இடக்கோடியில் ஓர் அறை. அதை ரங்கு திறந்து காட்டினான்.

'டிஸ்டெம்பர்' செய்யப்பட்ட சுவரைக் கண்டு நார்மன் சிறிது பிரமித்தான். இது அந்த வீட்டுக்குப் பொருத்தமில்லாமல் காணப்பட்டது. ஆள் உயரத்துக்கு ஒரு நிலைக்கண்ணாடி இணைக்கப்பட்ட பீரோ ஒன்று அவ்வறையில் இருக்கக் கண்ட பட்டு ரங்குவைப் பார்த்துக் கேட்டார்: ''ஏண்டா, ரொம்ப ஏற்பாடா இருக்கே இந்த அறை...''

அவர் ரங்குவைப் பார்த்துக் கண்களைச் சிமிட்டினார்.

''மாமா! அவன்கிட்டே சொல்லிடுங்கோ. இந்த பீரோ இங்கேதான் இருக்கும் என்று.''

''இந்தப் பீரோ இங்கேயே இருக்கும்'' என்றார் பட்டு.

''எனக்கு ஒரு ஆட்சேபணையுமில்லே'' என்று சொல்லிக் கொண்டே தோள்களைக் குலுக்கினான் நார்மன்.

வீட்டின் பின்புறம் கிணறு இருந்தது. கிணற்றிலிருந்து நீர் எடுப்பது எப்படி என்பதைப் பற்றி விஸ்தாரமாக விளக்கினார் பட்டு.

விண்வெளிக் கப்பலின் இயந்திர நுணுக்கங்களை எடுத்துக்காட்டி விட்டாற் போன்ற பெருமை அவர் முகத்தில் காணப்பட்டது.

''வீட்டுக்கு 'லைட்' கிடையாது. அதையும் சொல்லி விடுங்கள் அவனிடத்தில்...'' என்றான் ரங்கு.

பட்டு நார்மனிடம் இதைக் குறிப்பிட்டபோது அவன் புன்னகையுடன் கேட்டான்: ''வழியில் பார்த்தோமே, அந்தப் பெண் வைத்திருந்தாளே. அந்தமாதிரி விளக்கு கிடைக்குமல்லவா?''

சாரதாவின் நினைவினால் உந்தப்பட்டுப் பட்டு ஆவேசத்துடன் கூறினார்: ''அதே விளக்கை வாங்கித் தருகிறேன். அவ்வளவு தானே?......''

''அவனுக்கு வீடு பிடிச்சிருக்கான்னு கேளுங்கோ....'' என்று ரங்கு கேட்டான்.

பட்டு நார்மனைக் கேட்டார்: ''வீடு பிடித்திருக்கிறதா?....''

''இந்த வீடு போதும் எனக்கு. பிடித்திருக்கிறதா இல்லையா என்பது வேறு கேள்வி'' என்றான் நார்மன் சிரித்துக் கொண்டே.

''வாடகை வேண்டுமானால் ஐம்பது ரூபாய் சொல்லுங்கள் போதும்....'' என்றான் ரங்கு.

''நீ சும்மா இரு'' என்று அவனை அதட்டிய பட்டு நார்மனைப் பார்த்துக் கொண்டே ஆங்கிலத்தில் சொன்னார்: ''என்ன நூற்றைம்பதா இந்த வீட்டுக்கு? நோ நோ.... எழுபத்தைந்துதான் தர முடியும்....!''

ரங்குவுக்கு என்ன பதில் சொல்வதென்று புரியவில்லை. அவன் பேசாமல் நின்று கொண்டிருந்தான்.

''முட்டாளே, நூற்றிருபத்தைந்து சொல்லுடா, இங்கிலீஷில்....'' என்றார் பட்டு அவனிடம்.

நார்மனுக்கு ரங்குவைப் பார்த்தால் பரிதாபமாக இருந்தது.



''ஸார்! நான் பழம்பெரும் நடிகன்! பிரபலமாவதற்கு ஏதாவது வழி சொல்லுங்களேன்!''
''ஏதாவது ஒரு கட்சியில் சேர்ந்து விடுங்கள்! உங்களுக்கு வரவேற்பு கூட்டம் போட்டு பப்ளிஸிட்டி பண்ணுவாங்க!''

---

''நூற்றிருபத்தைந்து ரூபாய்'' என்றான் ரங்கு பலவீனமான குரலில்.

''நூற்றிருபத்தைந்தா? நோ.... நோ...'' என்று சொன்ன பட்டு, நார்மனைத் தனியே அழைத்துச் சென்றார்.

''நூறு சொல்லட்டுமா?'' என்று மெதுவாகக் கேட்டார்.

''சொல்லுங்கள்!'' என்றான் அவன்.

பட்டு அவன் மதிப்பில் உயர்ந்து கொண்டே போனார். கலிபோர்னியா 'ரியல் எஸ்டேட் ஏஜெண்டுகள்' இவரிடம் பிச்சை வாங்க வேண்டும் என்று தோன்றிற்று அவனுக்கு.

பட்டு ரங்குவை அழைத்துக் கொண்டு போய்ச் சிறிது நேரம் அவனுடன் பேசினார். அவர் நார்மனிடம் திரும்பி உற்சாகத்துடன் வந்தார். ''நூறு ரூபாய்க்குச் சம்மதித்து விட்டான். ஆனால் கொஞ்சம் 'அட்வான்ஸ்' வேண்டுமாம்......''

''இருநூறு போதுமா?'' என்று ரங்குவை ஆங்கிலத்தில் கேட்டார் பட்டு.

அவன் தலையை ஆட்டினான்.

இருநூறு ரூபாயை ரங்குவின் கையில் திணித்த பட்டு சொன்னார்: ''முருகையனுக்கு அஞ்சு ரூபாய் கொடுத்தான். வாடகை நூறு கேட்கக் கூடாதா? சும்மாவா கேட்கிறோம்?''

''வீட்டைப் பெருக்கிச் சுத்தப்படுத்த ஆள் அனுப்பறேன்னு சொல்லுங்கோ....'' என்றான் ரங்கு.

பட்டு இதை நார்மனிடம் கூறியபோது அவன் பலமாகத் தலையை ஆட்டினான். ''நோ....நோ.... ஆள் எதுக்கு? நானே செய்து கொள்ளுகிறேன்......''

''விசித்திரமான ஆசாமிகள் இவங்க! மூட்டை தூக்கறது, வீட்டைப் பெருக்கறது, கக்கூஸை அலம்பறது எல்லாம் அவனவனே செஞ்சுக்கறாங்களே, அந்தஸ்து, கிந்தஸ்து

ஒன்னும் கிடையாதோ இவங்களுக்கு.....'' என்றார் பட்டு.

தொழில் வேற்றுமையின் காரணமாகக் கற்பிக்கப்பட்ட ஜாதி ஏற்றத் தாழ்வுகள் இவர்கள் இரத்தத்தில் எப்படி ஊறிக் கிடக்கின்றன என்பதை நார்மன் இப்பொழுது தான் உணர்ந்தான்.

''சரி..... நாங்கள் வருகிறோம்.....'' என்றார் பட்டு.

நார்மன் அவரிடம் ஐந்து பத்து ரூபாய் நோட்டுக்களை எண்ணிக் கொடுத்தான்.

''இது எதுக்கு?'' என்று கேட்டார் பட்டு. அவருக்கு நார்மன் மீது சிறிது கோபம் ஏற்பட்டது. ரங்குவின் எதிரில் கணியாக ஐம்பது ரூபாயை எண்ணிக் கொடுக்கிறானே?.... இனி ரங்குவிடமிருந்து பணம் புரட்டுவதற்குப் பகீரதப் பிரயத்தனம் செய்ய வேண்டும். அப்புறம் வந்து வாங்கிக் கொள்ளலாம் என்று இட்டமிட்டிருக்கும் போது, அத்தனையும் கெடுத்துக் குட்டிச்சுவராக்கி விட்டானே! இப்பொழுது வேண்டாமென்று மறுத்து விட்டால், பிறகு வந்து கேட்பது நன்றாக இருக்குமா? சரி, சரி ரங்குதானே!.... சமாளித்துக் கொள்ளலாம்..... இப்பொழுது வாங்கிக் கொள்ளுவதுதான் நல்லது....

''உங்கள் கமிஷன்....''என்றான் நார்மன்.

''நல்ல கமிஷன்.....'' என்று சொல்லிக் கொண்டே பணத்தை வாங்கி இடுப்பில் செருகிக் கொண்டார் பட்டு.

''சாப்பாட்டுக்கு என்ன ஏற்பாடுன்னு கேளுங்கோ....'' என்றான் ரங்கு.

''ஆமாம்... மறந்தே போய்விட்டேனே'' என்று சொல்லிக் கொண்டே பட்டு நார்மனைக் கேட்டார். ''சாப்பாடு?''

''கவலைப்பட வேண்டாம். எல்லாம் என்னிடம் இருக்கிறது....'' என்று சொன்ன அவன், தன் பையைத் திறந்து அதிலிருந்து ஒரு பெட்டியை எடுத்து, அதற்குள்ளிருந்த ஐந்தாறு 'டின்'களைக் காட்டினான்.

''இது போதுமா?'' என்று கேட்டார் பட்டு. ரங்கு ஒரு குழந்தையின் அதிசய உணர்ச்சி முகத்தில் தோன்ற அந்த 'டின்'களைப் பார்த்துக் கொண்டிருந்தான்.

''சாப்பிடுகிறீர்களா?'' என்று ரங்குவைக் கேட்டான் நார்மன்.

''மாமிசமா?'' என்று வினவினார் பட்டு. நார்மன் சிரித்துக் கொண்டே இலேசாகத் தலையசைத்தான்.

''ராம.... ராம.... அது ஒன்னுதான் குறைச்சல்......!'' என்ற பட்டு ரங்குவைக் கேட்டார்: ''உனக்கு உண்டோ, இந்தப் பழக்கம்? ஒரு பிடி பிடிக்கிறயா?''

ரங்கு பதிலொன்றும் கூறாமல் மௌனமாகச் சிரித்தான்.

''பசுமாட்டையே 'டின்'லே அடைச்சுண்டு வந்திருக்கானே, படுபாவி.....'' என்று சொல்லிக் கொண்டார் பட்டு.

நார்மன் இரண்டு மதுப் புட்டிகளை எடுத்து வெளியே வைத்தான்.

ரங்குவும் பட்டுவும் வெளியே போனார்கள்.

**யா**ரோ கதவைத் தட்டும் சப்தம் கேட்டது. நார்மன் மதுப் பாட்டில்களை அறைக்குள் கொண்டு வைத்து விட்டுத் தம்ளர்களைக் கதவோரமாக நகர்த்தியபிறகு, வாசலுக்குச் சென்று கதவைத் திறந்தான்.

சாரதா குத்துவிளக்கைக் கையில் ஏந்தியவாறு நின்று கொண்டிருந்தாள். ''உள்ளே வாருங்கள்'' என்றான் நார்மன் தமிழில்.

சாரதாவின் கண்களில் வியப்பு மலராய்ப் பூத்தது. அந்நியன் ஒருவன் இலக்கணமாய்த் தமிழ் பேசியது அவளை ஆச்சரியத்தில் ஆழ்த்தியது.

''பட்டுவைத் தேடிக் கொண்டு வந்தீர்களா?'' என்று கேட்டான் நார்மன்.

''இல்லே..... உங்களைத்தான்.....''

''என்னையா?'' — நார்மனுக்கு ஒன்றும் விளங்க வில்லை. ''சரி, உள்ளே வாருங்கள். ஒரு கௌரவம் வாய்ந்த பெண்ணை வரவேற்கும் நிலையில் இந்த அறை இருக்கிறது என்று என்னால் உறுதி கூற முடியாது....''

''இந்த அறை எப்பொழுதுமே அப்படி இருந்ததில்லே. மைனர் ரங்கு வீடுதானே இது?'' என்றாள் சாரதா.

''ரங்குவின் தனிப்பட்ட வாழ்க்கையைப் பற்றி எனக்கு ஒன்றும் தெரியாது.... நான்



பம்பாய் ஸ்ரீ ஏ. என். கிருஷ்ணன் அவர்கள் குமாரரும் டாடா ஆயில் மில்ஸ் கம்பெனி மார்க்கெட்டிங் டிபார்ட்மெண்டைச் சார்ந்த ஸ்ரீ ஏ. கே. நாராயணன் அவர்களுக்கும் ஸ்ரீ டி. ஏ. ராமச்சந்திரன் அவர்கள் குமாரத்தி சௌபாக்யவதி லக்ஷ்மிக்கும் பெங்களூரில் சமீபத்தில் திருமணம் வெகு சிறப்பாக நடைபெற்றது.

வாழ்க மணமக்கள் !



## டாக்ஸி விபத்து

### (சிங்காரத்தின் ஊகங்கள்)

சற்றே திறந்திருந்த அறைக் கதவின் வழியாகச் சிங்காரம் ஒரு காட்சியைக் காணுகிறான். அங்கு ஒரு நாய் தன் முன்னங்கால்களைத் தூக்கிக் கொண்டு நிற்கிறது. உள்ளே யாரோ இருக்கிறார்கள். அவர்களிடம் எதையோ எதிர்பார்த்தே அது அப்படி நிற்கிறது என்று சிங்காரம் ஊகிக்கிறான். வெளியில் வந்துள்ள அன்னியர்களைக் கூடச் சட்டை செய்யாமல் அந்த நாய் அங்கு அப்படி நிற்க வேண்டுமானால் அது வீட்டின் எஜமானைத் தானிருக்க வேண்டும். சிங்காரத்தின் முடிவு என்றுமே தவறாக இருந்ததில்லை.



இந்தப் புழுதிக்காகச் சொன்னேன்!'' என்றான் நார்மன்.

''இந்தப் புழுதி வீட்டில் மட்டிலுமா? சமூகத்திலும் ஏறிக் கிடக்கிறது!'' என்றாள் சாரதா.

நார்மன் பதிலொன்றும் கூறவில்லை. திடசித்தத்துடன் காணப்பட்ட ஒரு பெண்ணின் கோபம் இயற்கையான ஆவேசம்....

''மன்னிக்க வேண்டும்.... உங்களுக்கு இந்தக் குத்துவிளக்கு வேண்டுமா?.... இதன் விலை ரூபாய் பத்துதான். அறுபது என்று பட்டு சொல்லியிருந்தால் அது பொய்.... அது கிடக்கட்டும், உங்களுக்குத் தமிழ் தெரியுமென்று அவருக்கு இன்னமும் தெரியாதா?''

''தெரியாது.... காலையில் அவர் உங்களுடன் பேசியது எனக்குப் புரிந்திருக்காது என்று அவர் நினைத்துக் கொண்டிருக்கிறார்.''

சாரதாவின் முகத்தில் புன்னகை.

''அப்படியானால் நீங்கள் அவரை நன்குகப் புரிந்து கொண்டிருப்பீர்கள்....''

நார்மனின் முகத்தில் புன்னகை.

''என்னைப் பற்றி ஏதாவது சொன்னாரா?''

''எதற்குக் கேட்கிறீர்கள்?''

''அவர் என்னைப் பற்றி என்ன சொல்லியிருந்தாலும் சரி, அது உண்மை... ஆமாம். நான் கர்வம் பிடித்தவள்தான்.... என் அம்மாவைப் பற்றியும் சொல்லியிருப்பார். அதுவும் வாஸ்தவம்தான்.... கையில் காசில்லாமல், படிப்பும் இல்லாமல் போலிக் கட்டுப்பாடுகளுடன் கூடிய இந்தச் சமூகத்தில், கணவனை இழந்த எந்தப் பெண்ணும் கௌரவமாக வாழ முடியாது.... நான் கொஞ்சம் படித்திருக்கிறேன். என்னைக் காத்துக் கொள்ள முடியும் என்ற நம்பிக்கை எனக்கு உண்டு.''

''நீங்கள் உங்கள் நாட்டுப் பண்பாட்டின் உண்மையான பிரதிநிதி என்று நினைக்கிறேன்'' என்றான் நார்மன்.

''நான் பாராட்டுப் பெற இங்கு வரவில்லை. மனத்தில் தோன்றியதைச் சொல்ல வந்தேன். அவ்வளவுதான்....!''

நார்மன் சாரதாவைக் கண்கொட்டாமல் சிறிது நேரம் பார்த்துக் கொண்டிருந்தான். 'சக்தி வழிபாடு பாரத கலாசாரத்தின் உயிர் நாடி. சக்தியின் சீற்றம்தான், இதோ, கண்ணெதிரே தோன்றும் காட்சியோ....?'

''வீட்டில் உள்ள குத்துவிளக்கை விற்பதென்பது செல்வத்தின் செல்வமாகிய திருமகளை வெளியேற்றுவது மாதிரி.... கல்யாணம் ஆகிச் செல்லும் பெண்ணுக்குக் குத்துவிளக்கு கொடுப்பது எங்கள் மரபு. கணவன் வீட்டுக்குச் சென்று ஒளியேற்றி வைக்க வேண்டுமென்பதுதான் இதன் அர்த்தம். ஆனால் வீட்டில் உள்ள குத்து விளக்கை விற்கும் நிலையில் நாங்கள் இருக்கிறோம்....'' சாரதாவின் கண்களில் நீர் கசிந்தது.

வாசலில் யாரோ வரும் அரவம் கேட்டது. கோபக் கனல் வீசப் பட்டு உள்ளே வந்தார். அவருடன் ஒரு பெண்மணியும் வந்தாள்.

''பாத்தியா உன் பெண்ணுக்கு இருக்கிற ஆணவத்தை! — வெள்ளைக்காரன் கிட்ட வியாபாரம் பண்ணத் தனியே வந்துட்டா... நான் அப்பவே சொன்னேனே கேட்டியா.... கழுதையைக் கட்டிப்போடாமே, படிக்கவைச்சே! பாரு, அவ யோக்கியதையை!''

''என்னடி இது.... ஏற்கனவே நமக்கு இருக்கிற பேர் போறாதுன்னு......'' — சாரதாவின் தாயினால் அதற்கு மேல் பேச முடியவில்லை. தொண்டை அடைத்துக்கொண்டது.

''மிஸ்டர் பட்டு, இந்தக் குத்து விளக்கை நான் வாங்கிக் கொள்ளுகிறேன்... விலை அறுபது ரூபாய்தானே?'' என்றான் நார்மன் தமிழில்.

நார்மன் தமிழ் பேசக் கேட்ட பட்டு, பேயைக் கண்டுவிட்டாற் போன்ற பரபரப்புடன் நின்றார்.

''உங்களுக்கு மூப்பது... சாரதாவின் தாய்தானே இந்த அம்மா? — இவர்களுக்கு மூப்பது....அப்படித்தானே?''

''அறுபது ரூபாய் வேண்டாம். இதன் விலை பத்து ரூபாய்தான்'' என்றாள் சாரதா.

''இல்லை... அறுபதே இருக்கட்டும்.... ஆனால் ஒரு நிபந்தனை. நீங்கள்தான் இந்தக் குத்துவிளக்கை இனி ஏற்றி வைக்க வேண்டும்...'' என்று புன்னகை செய்தான் நார்மன் மெய்லர்.

சாரதா அவனை ஏறிட்டு நோக்கினாள். அவள் கண்கள் கோபத்தால் சிவந்தன.

''பணத்தை அதிகப்படுத்தி எங்கள் பண்பாட்டைப் பேரம் கொள்ள முடியும் என்று நீங்கள் நினைப்பது தவறு. நான் இங்கு வந்ததற்காக வருந்துகிறேன்...''

இவ்வாறு சொல்லி விட்டு வெளியே சென்ற சாரதாவைப் பார்த்துக் கொண்டே வாயடைத்து நின்றான் நார்மன் மெய்லர்.

இப்பொழுது

நடைபெறுகிறது



சென்னை

**பிளாசா**
**பிராட்வே**
**சயானி**
**கிருஷ்ணவேணி**

மற்றும் தென்னாடெங்கும்

**பத்மினி பிக்சர்ஸ்**

# எங்க பாப்பா

தயாரிப்பு-டைரக்ஷன்

**பி.ஆர்.பந்துலு**








# இலட்சியத் தீ

• எம் • எஸ் • பெருமாள் •



'' இருந்தாலும் குழந்தைக்கு நாம் செய்யற முதல்விசேஷமே இதுதானே, செல்லம். இங்கேயேவெச்சு.....''

''உங்கள் சம்பளத்திலே இதெல்லாம் கட்டுப்படியாகுமா? ஆத்தூரிலே என்றால் தெருக் கொள்ளாமல் பந்தல் போடுவாள். பத்து நாட்கள் விருந்தென்ன, விமரிசை யென்ன என்று ஜமாய்ச்சுக் கட்டிப் பிடுவாள்'' என்று சொல்லுக்குச் சொல் தாயின் புகழ்பாடிக் கொண்டிருந்தாளே யன்றி, கேட்பவர் – தவறு – கெஞ்சுபவர் – கணவராயிற்றே. அவர் சொல்லுக்கு மதிப்பு வைப்போம் என்ற எண்ணம் – மறந்தும், துளியும் இல்லே.

''செல்லம், பாலுவின் பிறந்த நாளே உன் இஷ்டத்துக்கு ஆத்தூரிலேயே உங்க அம்மா வீட்டிலே கொண்டாடியாச்சு. அவனுக்கு அட்சராப்பியாசம் – அதுவும் அங்கேதான்!''

''சும்மா இருங்கோ... உங்களுக்கு ஒன்னும் தெரியாது!''

இப்படிச் சொல்லிச் சொல்லியே ஒவ்வொரு தடவையும் கணவரைச் சும்மா இருக்க வைத்து விடுவாள் செல்லம். ஆனால் இம்முறை அவர் இரண்டு வார்த்தைகள் பேசி வைத்து விட்டார்.

''என் மகனுக்குப் பிரம்மோபதேசம் செய்து வைக்கப் போறவன் நான்தானே, செல்லம்!'' என்று கேட்டார்.

''இருக்கட்டுமே!''

இந்த 'இருக்கட்டுமே'யில் இத்தனை வருட காலம் அவள் பெற்று வந்த வெற்றியின் முத்திரை அழுத்தமாகப் பதிந்திருந்தது!

''பேரனுக்கு உபநயனம் செய்து வைக்கிற செலவிலே பெரிய ஞானுவின் சொத்துக் குறையப் போவதில்லே'' என்று பெருமையாகச் சொன்னவள் செல்லம். அவள் கொண்டாடும் பெரிய ஞானு யாருமில்லே, சாட்சாத் அவளைப் பெற்ற ஜனகவல்லி.

''எங்கம்மா கைராசியாக்கும்! தொட்டது துலங்கும். அவள் ஆரம்பிச்ச வச்ச படிப்பு—அவன் இன்னிக்கு எஞ்சினீயரிங் காலேஜிலே பஸ்ட் ளாசிலே வெளுத்துக் கட்டறான்...''

''அதுவும் பாட்டி செலவில்தானே வெளுத்துக் கட்டறான்?''

''நீங்களே குறுக்கே நிற்பீர்கள் போலிருக்கிறதே... குடுக்கிறதுக்கு எங்க அம்மாகிட்ட பணம் இருக்கு.... குடுக்கணும்கிற மனசோ கொள்ளை கொள்ளையா யிருக்கு... நீங்களும் நானும் எதுக்காகக் குறுக்கே நிக்கணும்?''

இறுதியில் வழக்கம் போல் செல்லத்துக்கே வெற்றி.

நாலு மூலைகளிலும் மஞ்சள் தடவிய கடுதாசியில் பாலுவுக்கு இந்தச் சித்திரையில் உபநயனம் நடத்துவதற்கு நாலு முகூர்த்தங்களைக் குறிப்பிட்டு இதில் அம்மாவுக்கு எந்த நாள் வசதியோ (இந்த ஞாலத்துக்குக் குறைச்சல் இல்லே) அன்றைக்கே நடத்தி விடலாம் என்று எழுதிப் போட்டுவிட்டாள்.

பாலுவுக்கும் உபநயனம் வெளியூரில் நடக்கப்போவது குறித்து நிம்மதி. கல்லூரி மாணவனுக்கு இந்தச் சடங்கும் இந்தச் சம்பிரதாயமுமே சுமையாக இருக்கும்போது உள்ளூருக்குள்ளே தடபுடல் கொட்டிக் கொண்டிருக்கப் பிடிக்குமோ? ஆத்தூரில் அருமைப் பாட்டியின் இல்லத்தில் ரகசியமாக நடத்திக் கொள்ள அவனும் சம்மதித்தான்.

ஜனகவல்லிக்குத் தாய்வழிச் சீதனமாக வந்த விளைநிலம் ஆத்தூர் கொள்ளாமல் ஊரையே வளைத்துப் போட்டிருந்தது. கணவரின் சுய சம்பாத்தியமோ பாங்கில் கணக்கை இருவர் பெயரிலுமாக ஏற்றிக் கொண்டு போயிருந்தது. ஆனாலும், பிள்ளையில்லாச் சொத்தில்லே. ஆண் ஒன்று. பெண் ஒன்று.

மூத்தவள் செல்லம். இளையவன் மூர்த்தி.

அப்பாவிடம் என்னவோ துடுக்காகப் பேசிவிட்டான் மூர்த்தி. பெரியவர் தாம் தூம் எனக் குதிக்க, அம்மாவும் அப்படிப் பேசலாமா என்று வாதாட, மூர்த்திக்குச் சேரவிருக்கும் சொத்துக்கு எள் இறைத்தாயிற்று. 'சொந்த சம்பாத்தியம், நீ கேட்க உரிமை இல்லே' என்று பஞ்சாபகேசன் பூட்டி வைத்துக் கொள்ள ''என் தாய் வழிச் சீதனம் என் இஷ்டத்துக்குத்தான் கொடுப்பேன்'' என்று ஜனகவல்லி பதுக்கிக் கொள்ள—பாவம் மூர்த்தி. உறவைத் தறித்துக்கொண்டு ஒதுங்கி விட்டான்.

செல்லத்துக்குக் கல்யாணமான நாளிலிருந்து இன்றுவரை – செல்லத்தின் பெண் சின்ன ஞானுவுக்கும் கல்யாணம் செய்து

கொடுத்தாயிற்று; பேத்திக்கு நாலு வயது—தாய் வீட்டுச் சொத்துக்கு இன்னும்தான் சொந்தம் கொண்டாடிக் கொண்டிருக்கிறாள் செல்லம்!

சொத்துக்காரியான அம்மாவைக் குளிர வைக்கத் தன் ஒரே மகளுக்கு அவள் பெயரையே வைத்தாயிற்று.

செல்லத்தின் மகள் சின்ன ஜானு பிறந்த நாள் விழாவன்று ஊர் கொள்ளாத கூட்டம். அவளுக்கு அட்சராப்பியாசம். அதுவே ஒரு கல்யாணம்.—"குழந்தைக்கு நாட்டியம் கற்றுக் கொள்ள வேண்டுமென்று கொள்ளை ஆசை" என்று எழுதியனுப்பிய கடிதத்தோடு இல்லை மல், "நாட்டியம் ஆடுகிற குழந்தைக்கு அப்பப்போ உடம்பைக் கவனித்துக்கொள்ள எனக்கு வயசு போதுமா? அம்மான்னு

வைத்துக் கொண்டு மாதம் ஒரு முறையேனும் சென்னைக்கும் ஆத்தூருக்குமாக ரயிலுக்கு அவள் செலவழிக்கிற பணம் — அம்மாவின் பணம் — கணக்கில்லை.

முந்தின குழந்தைக்கு அச்சு அசல் வாரிசாகப் பானுவும் பிறந்தாள். பாட்டியின் செலவில் வளர்ந்தாள். பானு பிறந்ததற்குப் பின் வம்சம் குறுகிப் போய்விட்டது. வாழ்வின் வசதிகளோ நாளுக்கு நாள் பெருகிக் கொண்டே வந்தன.

நாராயணனுக்கு உடம்பெல்லாம் கூனிக் குறுகும். மாமனார் தயவில் குழந்தைகள் வளருவது குறித்து வருத்தம் பெருகும்.

அவர் ஏதாவது சொல்ல வாயெடுத்தால் "சும்மா இருங்கோ... உங்களுக்கு உலகம் தெரியாது" என்று அடக்கி விடுவாள்.



ஜாக்கிரதையாப் பார்த்துக்கொள்வாள்... அனுபவசாலி" என்ற பாராட்டுக்களோடு மகளின் எதிர்காலத்தையே தாயின் தோளில் இறக்கி வைத்துவிட்ட பெருமிதத்துடன் கணவன் வீடு திரும்பியவள் செல்லம்.

★

சென்னையிலே ஒரு வெள்ளைக்காரன் கம்பெனியில் உத்தியோகம். 'உத்தியோகம் புருஷ லட்சணம்'. என்ற அவசியத்துக்காகவும் இந்தக் கம்பெனிக்கு ஆத்தூரிலே கிளை ஸ்தாபனம் இல்லாத குறையாலும்தான் செல்லத்தின் கணவர் சென்னையிலேயே தங்க நேரிட்டது. செல்லம் விதியே என்று கூட இருந்தாள். மகளைப் பார்க்கின்ற காரணத்தை

அப்படிச் சும்மா இருப்பதிலும் நமக்குப் பலவிதங்களில் ஆதாயமிருக்கிறது என்பதைப் பொருளாதார அடிப்படையில் புள்ளி விவரம் எடுத்தபோது சும்மா இருப்பது எத்தனை பெரிய சுகம் என்று அவரும் சும்மா இருக்கத் தொடங்கி விட்டார்.

சின்ன ஜானு கல்லூரியில் படிக்க வேண்டும் என்றபோது அவர் சும்மா இருந்தார்.—ஜானு பி.எஸ்ஸி. பட்டதாரியாகாமலா போய் விட்டாள்?

படிப்பு முடிந்து கல்யாணம் செய்யும் பிரச்னை எழுந்தபோது தந்தைக்குரிய கடமையின் சிலிர்ப்பு அவருக்கு எழத்தான் செய்தது. ஆனால் அப்போதும் சும்மாத்தான் இருந்தார்.

பத்தாயிரத்துக்கு நகை, பத்தாயிரம் ரொக்கம். பத்தாயிரத்துக்குப் பாத்திரம் பண்டங்கள். ஐ.ஏ.எஸ். மாப்பிள்ளைக்கு ஸ்கூட்டர், வைர மோதிரம்.

நாராயணன் கம்மாத்தான் இருந்தார். சின்ன ஜானுவின் சம்சார வாழ்க்கை ஜாம்ஜாமென நடக்காமலா போய்விட்டது!

மகளுக்குக் கல்யாணம் செய்து வைத்த வெற்றி, அவர் பிடிக்குள் அடங்காத பெருமை!

சின்ன ஜானுவுக்குள் இன்னொரு சின்ன ஜானு உருவாகியிருக்கும் பெருமையில் செல்லத்தின் தாய் மனமே பூரித்ததென்றால் ஜனகத்தின் மகிழ்ச்சிக்குக் கேட்பானேன்? ''உங்கம்மா சீக்கிரமே என்னை அரைக் கிழவியாக்கினாள்.... நீயோ என்னை முழுக் கிழவியாக்கிவிட்டாயேடி ஜானு... இந்தக் காலத்துப் பசங்களுக்கு எதிலேயுமே அவசரம்'' என்று பேத்தியிடம் பாட்டியின் செல்லச் சிணுங்கல்கள். செல்லத்தின் மகளுக்குப் பிரசவம் தாய் வீட்டில்—அதாவது செல்லத்தின் தாயார் வீட்டில்.

பிரசவம் என்றால் வெறும் மருத்துவச்சி செலவோடு போயிற்று? அதையடுத்துச் சங்கிலித் தொடராய் வரும் வருடாந்தரச் செலவுகள் சில்லறைச் செலவுகள் (இடுப்புக்கு ஐந்து பவுனில் சங்கிலியாம். பவுன் நூற்றி முப்பது ரூபாய் — குழந்தைக்கு இடுப்புத் தாங்குமா?)

பாட்டியின் செலவுதானே என்று இத்தனைக்கும் கம்மா இருந்த நாராயணனுக்கு மகளின் உபநயனத்தின்போது ஏனோ கம்மா இருக்கத் தோன்றவில்லை. மகனை மனிதனுக்கும் புனிதப் பணியின் புண்ணியத்தை வலுவில் வேறு யாரிடமோ ஒப்படைக்கிறோம் என்று நெஞ்சே கழன்று போய்த் தவிப்பவராய்த் திண்டாடத்தான் செய்தார்.

ஆனால்...தம்பிக்குப் போக வேண்டிய பண வெள்ளத்தைத் தடுத்துத் தன் பக்கம் வாய்க்கால் வெட்டிக் கொண்டிருக்கும் செல்லம், மகனின் உபநயனத்திலும் பண வெள்ளம் வந்து செழிக்க வழி தேடிக் கொண்டாள்.

ஜனகத்தின் வீட்டிலே விழாவுக்குக் குறைச்சல் இல்லே. விருந்துக்கும் அமர்க்களத்துக்கும் பஞ்சமில்லே. நெற்றி நிறையக் குங்குமம். வாய் கொள்ளாமல் வெற்றிலே. முகத்திலே அப்பிப் பூசிய மஞ்சள். முன் பக்கத்துத் தலைமயிரின் வெள்ளி நரையில் தங்கமாக மின்னிக் கொண்டிருக்கும் பளீரென்ற துலக்கம். தொண்டு கிழமாய் உட்கார்ந்திருக்கும் கணவருக்குப் பணிவிடை செய்து அவரைச் சீண்டிவிட்டுக் கேலி பேசும் குறுகுறுப்பு — இவள்தான் பெரிய ஜானு!

'பத்தோடு பதினொன்று — அத்தோடு இது ஒன்று' என்று பாலுவின் உபநயனத்தை, முறையைக் கழித்துவிட்டுப் போகாமல் நாத்திலே ஒன்றாகத்தான் பார்த்துப் பார்த்துச் செய்திருந்தாள். பெற்ற பிள்ளை உறவிலே ஒட்டாமல், பிரிந்து போய் நெஞ்சிலே கழித்த காயத்தைப் பேரனின் அன்புதான் ஆற்றிக் கொண்டிருப்பதாக உணர்ந்தாள் ஜனகம்.

★

உபநயன வைபவத்துக்கு ஆத்தாரே திரளாக வந்திருந்தது. டில்லியிலிருந்து சின்ன ஜானு மாப்பிள்ளையோடு வந்திருந்தாள். வெளியூரிலிருந்தெல்லாம் உறவினர் கூட்டம்.

தாய்மாமன் வரவில்லே! ஒரே மருமகனின் கல்யாணத்தின்போதுகூட, முகூர்த்த நேரத்துக்கு வந்தவன் அட்சதையைப் போட்டு ஆசீர்வதித்துவிட்டுச் சாப்பிடக்கூட நிற்காமல் வெளியேறிப் போனவன்தான். அடுத்தாற்போல் இன்றைக்காவது வருவான் என எதிர்பார்த்தனர்.

நாராயணனுக்கு இந்தப் பாசம், அன்பு, தவை இதிலெல்லாம் கொஞ்சம் கொஞ்சம் நம்பிக்கை உண்டு. செல்லத்தைப் போல் பணம் ஒன்றே குறியாயிருக்க மாட்டார்.

பந்தலிலே பேச்சும் பரவியாகி விட்டது. தாய் மாமன் மூர்த்தி இன்னும் வரக் காணோம். கோட்டை போல வீட்டிலே விதிவடைத்த பந்தலில் விமரிசையாக விசேஷம் நடக்கிறது. வீட்டுக்குரிய மகராஜன் இன்னும் எட்டிக்கூடப் பார்க்கவில்லே.

''தாய்க்கும் மகனுக்கும் என்னதான் விரோதம் என்றாலும் இப்படி வராமல் இருப்பானோ?'' என்ற ஆதங்கம். அதையடுத்து அங்கலாய்ப்பு. பின்னர் அதுவே ஆத்திரப் பேச்சாக விகவரூபம் எடுத்தது.

''ஒரே பிள்ளை.... அவன் மாளிகையிலே விசேஷம் ஆகிறது.....''

கூட்டத்திலே இன்னார்தான் இன்னது தான் பேச வேண்டுமென்று போகிறார்கள்? காரியம் நடக்கும் வரையில் என்னென்னவோ பேச்சுக்கள். எவனவன் தலைவனெல்லாமோ தாராளமாய் உருண்டன. தேடித் தேடி அலுத்து நாராயணன் தலையும் அவர்கள் வலைக்குள் அகப்படத் தொடங்கியது. கேலிப் பேச்சுக்கள்.... விண்டல் போல் துவளிக்கின்ற ஊசிக் குத்தல்கள்.

''நாராயணனுக்கு இரண்டே குழந்தைகளா ?''

''ஆமாம்... அவர் மாமனாரைப் போலவே கணக்கா ரெண்டே ரெண்டு. ஆசைக்கு ஒண்ணு—ஜானு; ஆஸ்திக்கு ஒண்ணு பாலு.''

''அதாவது பாட்டியோட ஆஸ்திக்கு !'' -இது ஏதோ ஒரு வக்கரபுத்தியின் வாய் வீச்சு.

ஆஹா.... உலகத்தில் கேட்க முடியாத ஜாலங்கம். ஆலையில்லாத ஊரிலே இந்த இலுப்பைப் பூவைக் கொண்டாட ஆள் நிறைய இருந்தது. ஒரே சிரிப்பு மயம்; ஊராலே நிரம்பி வழிந்தது.

இவர்களின் கேலிக்கும் கிண்டலுக்கும் மனைவி செல்லந்தானே காரணம் என்ற கோபம் அவருக்கும் முறுக்கேறிற்று. மனையில் உட்கார்ந்திருக்கும் மகனைப் பிடித்து இழுத்துக் கொண்டு ஓடிப் போய் விடலாமா என்றுகூட வெறி பிறந்துவிட்டது.

ஆனால் மூர்த்தி சமயத்துக்கு வந்துவிட்டான். வீட்டுக்குரியவன் சுப முகூர்த்த வேளையில் தன்னால் தாமதமாகக் கூடாதே என்ற கரிசனத்துடன் வந்தே விட்டான்! வந்தவன் அவன் ஒருவனே. ஏழெட்டுக் குழந்தைகளுடன் அடுத்த தெருவில் குடியிருக்கும் தன் குடும்பத்தின் ஒரே பிரதிநிதியாக வந்திருந்தான்.

# பெரிதோ சிறிதோ—
# தரமே
# எமது குறிக்கோள்.



நம் நாட்டின் உணவு உற்பத்தியைப் பெருக்க டிராக்டர்களும் ஸ்டேஷனரி டீசல் என்ஜின்களும் பெரும் உதவி செய்கின்றன.

இந்தியாவில் உற்பத்தி செய்யப்படும் டீசல் என்ஜின்களின் தனித் தனி தேவைகளுக்கேற்ப மைகோ ப்யூயல் இஞ்செக்ஷன் பம்புகளைத் தயாரிக்கின்றது.

மைகோ எக்விப்மெண்ட் மிகமிக நுட்பமாகத் தயாரிக்கப்பட்டு, தரத்திற்கும் நம்பகத்திற்கும் கடுமையாக சோதிக்கப்பட்டவை. அசல் மைகோ எக்விப்மெண்ட் உபயோகித்து விவசாயத்தை லாபகரமாகச் செய்யுங்கள்.

## விவசாயம் செழிக்க
## மைகோ சேவை செய்கிறது.

# MICO

LICENCE **BOSCH**



## மோட்டார் இண்டஸ்ட்ரீஸ் கோ., லிட்,
## பெங்களூர்

விற்பனை நிலையங்கள் :—

பம்பாய்-18 (WB) : 79, டாக்டர் அன்னிபெஸண்ட் ரோடு, வொர்லி

கல்கத்தா-16 :— 91A, பார்க் ஸ்டிரீட்

மதராஸ்-2 :— 1/155 மௌண்ட் ரோட்,

புதுடெல்லி-1 :— காதியாபாத் என்ஜினியரிங் கோ., 29A/1 ஆஸப் அலிரோடு.

# ரண சிகிச்சையின்றிப் புதுமுறையில் வலிமயமான மூலத்தைச் சுருக்குகிறது, நமைச்சலை நிறுத்துகிறது, வலிதணிக்கிறது

**நியூயார்க்— தீவிரப் பிணிகளில் தவிர மற்றபடி ரண சிகிச்சை என்பதே தேவையில்லாமல் மூலத்தைச் சுருக்கி, நமைச்சலை நிறுத்தி, வலி தணிக்கும் அற்புத வல்லமையுள்ள புதுவித மருந்துப் பொருளை முதன்முறையாகக் கண்டுபிடித்துள்ளது விஞ்ஞானம்.**

டாக்டர்களின் கண்காணிப்பில் நிகழ்த்தப்பட்ட பரிசோதனைகளே இதற்கு அத்தாட்சி— வலியும் நமைச்சலும் உடனடியாகத் தணிக்கப்பட்டன. இதனுடன் மெல்ல வலியாற்றிய அதேசமயம் உள்ளபடி சுருக்கமே ஏற்பட்டது.

அனைத்திலும் ஆச்சரியம் என்னவெனில், பத்து இருபது ஆண்டுகள் நீடித்திருந்த பிணிகளிலும் இந்த அபிவிருத்தி நிலைபெற்றதுதான்.

உலகப் புகழ்பெற்ற ஆராய்ச்சிக் கழகம் ஒன்றின் கண்டுபிடிப்பாகிய பயோடைன்* என்ற புதிய மருந்துப் பொருளே இதன் இரகசியம். இப் புதிய மருந்துப் பொருள் தற்போது ப்ரிப்பரேஷன் ஹெச் என்ற பெயருடன், களிம்பு வடிவிலே அளிக்கப்படுகிறது. மூலத்தைச் சுருங்க வைப்பதோடன்றி, மலப் பாதைக்கு மழமழப்பூட்டி, மலப்போக்கினை வலி அற்றதாக்குகிறது. ப்ரிப்பரேஷன் ஹெச், 30கி. மற்றும் 50கி. டியூப்களாக இடுகுழாயுடன், எல்லா உயர்தர மருந்துக் கடைகளிலும் கிடைக்கும்.

மூல நோய் பற்றி விளக்கும் சிறு நூலை (ஆங்கிலம் அல்லது தமிழ்) இலவசமாகப் பெற இன்றே எழுதுக: டிபார்ட்மெண்ட் 38, ஜெப்ரி மானேர்ஸ் & கோ. லிட்., போஸ்ட் பாக்ஸ் 976, பம்பாய் 1 பிஆர்.

*டிரேட் மார்க்

CH/H-2 TAM

---

# க்ருஷன் ஸால்ட்ஸ்

அருந்துங்கள்

**பசியைத்** தூண்டுகிறது அது

அதன் பயன் மிக்க 7-வழிச் செயல் முறை உங்கள் உடல் நலனைத் தக்கபடி பாதுகாக்கிறது




நிக்கோலஸ் Ⓝ தயாரிப்பு

[illegible]

KS-6-7 TAM

மங்களகரமாக முகூர்த்தம் முடிந்தது.

இந்த வைபவத்தின் ஆதார சக்தியாக இயங்கிய பஞ்சாபகேசனை — பஞ்சாபகேசனின் பணத்தை — கட்டிக் காட்டிப் பேசித் தொலைத்தனர் விசேஷத்துக்கு வந்தவர்கள்.

நாராயணனுக்குச் சுரீர் என்றது.

இனி மேல் மாமியார் வீட்டுச் செல்லாக் காசைக்கூடத் தொடுவதில்லை என்று சங்கல்பம் செய்து கொண்டு புறப்பட்டார்!

ஆனால் என்ன இருந்தும் செல்வத்தைத் தான் அவரால் திருத்த முடியாமல் போயிற்று. என்னவோ நேற்றுத்தான் கல்யாணமாகி வந்தவள் போல் அம்மா வீட்டை நினைத்து நினைத்துச் சீராடிச் செல்லம் கொஞ்சுவதற்கு அவள் போவதும் வருவதும் முன்னைக்கு இப்போது அதிகமாகித்தான் விட்டிருந்தது. தீபாவளி, கார்த்திகை என்றால் ஜரிகைப் புடவை அம்மா வீட்டிலிருந்து (அதுவும் இவளுக்கும் சின்ன ஜானுவுக்குமாகச் சேர்ந்து)! நெல் விற்ற பணம் வந்திருக்கிறதென்று தெரிந்தால் மாங்காய் மாலையை அழித்துக் கல்நெக்லேசாய்ப் புதுப்பித்துக் கொண்டு வருவதும் அம்மாவின் செலவில். வருடச் செலவுக்குப் புளி, வெல்லம், ஊறுகாய் முதற்கொண்டு...

தாய் வீட்டுச் சீராட்டலில் அவள் திளைத்துத் திளைத்துப் பூரித்துக் கொண்டிருந்த போதுதான் —

தில்லியிலிருந்து சேதி வந்தது.

''ஐயோடீ ஜானு!'' என்று அலறிப் புடைத்துக் கொண்டு எல்லோருமாகத் தில்லிக்கு ஓடினார்கள். சின்ன ஜானுவின் கணவன் திடீரென்று இறந்து விட்டான்.

ஜீவனை இழந்து இன்று நாலுபேர்களின் அநுதாபத்துக்குரிய கட்டையாய் மாறி விட்ட உருவத்தைக் கட்டையிலேற்றி ஆக வேண்டிய காரியத்தைச் செய்து முடித்து விட்டுப் புறப்பட்டனர்.

ஒடுங்கிவிட்ட உயிரின் ஜீவசாட்சியாய்த் தேங்கிவிட்ட நாலு வயதுக் குழந்தையையும் கூட அழைத்துக் கொண்டு செல்லம், ''ம்..... புறப்பட வேண்டியதுதானே....எல்லோரும்'' என்று புறப்பட்ட போது, ''எனக்கு இனிமேல் அங்கே என்ன வேலை ?'' என்ற பதில்தான் கிடைத்தது, சின்ன ஜானுவிடமிருந்து.

''நீ சொல்றது எங்களுக்குப் புரியலியே!'' என விம்மினாள் செல்லம்.

''அம்மா.... இனி மேலும் உங்களுக்குப் பாரமா வந்திருக்க எனக்கு இஷ்டமில்லே'' என்றாள் சின்ன ஜானு.

''பெத்த பொண்ணு. அதுவும் இப்படியானதுக்கப்புறம் பிறந்தகத்திலே வந்திருக்கிறது எப்படிடீ பாரமாகும்?'' என்று சீறினாள் செல்லம்.

''பெத்த பொண்ணு! நான் உங்களுக்கு மகள்தான்! ஆனா, இவளுக்குத் தாயாச்சே! இவ எப்படி வளரணுங்கிறதுக்கு நான் மூன்னோடியா வாழ்ந்து காட்ட வேண்டாமா.....? நீங்க படிக்க வைச்ச — அப்படிச்



''என் கடை முதலாளி இனி எனக்கு மாதச் சம்பளம் தர மாட்டாராம். தினமும் நாலு ரூபா தருவாராம்.''

''ஏன் அப்படி?''

''தவணையில் ரேடியோ, விசிறி, சைக்கிள், கடிகாரம் விற்பனை செய்ய ஆரம்பிக்கட்டார்!''

சொல்றதுகூடத் தப்பு—பாட்டி படிக்க வைச்ச படிப்பு இருக்கு..... அம்பிகை போல் என் குழந்தையோட துணையிருக்கு.... 'பிறருக்குப் பாரமாப் போய் வாழக் கூடாது'ன்னு இவ அப்பா அடிக்கடி சொல்லுகிற இலட்சியத்தை என் நெஞ்சிலேயே குடியிருக்கு. அவர் இறந்து போனால் என்ன? அவர் நினைவு, அவர் கொள்கை, அவர் நெஞ்சம்—என் கூடவே இருக்கம்மா. அம்மா, நான் ஒரு தாய். என்னையும் என் மகளையும் காப்பாத்திக்கிறதுக்கு எனக்குத் தைரியம் இருக்கு!''

அழுது ஆர்ப்பாட்டம் செய்தோ, வீராவேசமாய்ப் பிரசங்க மடித்தோ தாயிடம் பேசாமல், தெளிவாக எளிமையாகப் பேசியே புரிய வைத்தாள் சின்ன ஜானு.

கணவரைப் பறி கொடுத்தால் என்ன ? அவர் கொடுத்த தைரியத்தை இழந்துவிடவில்லையே !

''புறப்படு செல்லம். நமக்கு வேலை முடிஞ்சு போச்சு.....'' என்றார் நாராயணன்.

''சும்மா இருங்கோ.... உங்களுக்கு ஒண்ணுந் தெரியாது'' என்று செல்லம் அழுகையினூடே சீறினாள்.

நாராயணனால் இந்த முறை சும்மா இருக்க முடியவில்லை. பிறர் தயவின்றி வாழ வேண்டும் என்ற வைராக்கியமும், வாழ்ந்து விடுவோம் என்ற நம்பிக்கையும் கொண்டு தன் மங்கலத்தின் அழிவிலும் தாயின் அகக் கண்களைத் திறந்து வைத்த சின்னஜானுவின் துணிச்சலுக்கு நன்றி கூறி, அத்துணிவே அவள் வாழ்வுக்குத் துணையாய் நிற்க வேண்டுமென்று பிரார்த்தனையும் செய்து கொண்டார் நாராயணன்.




- எழுதுங்கள். மறக்கப்படும்!
- ஹலோ. ஒன்...நாட்...நாட்!
- ராணியும் மணியும்
- தேர்தல் நிதி தர்பார்!
- சிந்தனையைத் தூண்டும் கட்டுரை

இந்த ஆண்டில் இதுவரை வெளிவந்த படங்களிலே சிறந்த படம், 'தட்டுங்கள் திறக்கப்படும்' ஆகும். நடிப்பு, ஒளிப்பதிவு, டைரக்ஷன், கதை, பாடல் போன்ற எல்லா விதங்களிலும் சிறந்து விளங்கும் இப்படத்தைக் குறித்து நீங்கள் எழுதியதைப் படித்துக் கொதிப்படைந்தேன்.

சென்னை — 4
30—6—66 ஏ. கே. நடராஜன்

"ஹலோ!.... ஒன் நாட் நாட்....
குற்றம் புரிந்தவர் பிடில் வித்துவான் என்றால் அவர் அந்த நகையை எப்போது எப்படித் திருடினார்? பிடில் வித்துவான் விளக்கு அணைந்த போதும் தொடர்ந்து வாசித்துக் கொண்டு இருந்திருக்கிறார். விளக்கு அணைந்த போதுதானே திருட்டு நடந்திருக்க வேண்டும்? சரியான குற்றவாளியைப் பிடிக்க சி. ஐ. டி. சிங்காரத்தை மறு விசாரணைக்கு அனுப்புங்கள்!"

திருமழபாடி
27—6—66 ந. ஜெயபாலன்

'நினைவுத் திரை'யில் வெளியான கடிதத்தை அவசரமாகப் படித்தபோது, தற்சமயம் தமிழ்நாட்டில் நடக்கும் விஷயத்தைத்தான் எழுதியிருப்பதாக நினைத்தேன். பின்னர் தேதியைக் கண்ணுற்ற போதுதான் பழைய கடிதம் என்பதை உணர்ந்தேன். இதே போன்ற அரிசியைத்தான் சமீபத்தில் சட்டமன்றத்தில் திரு சா. கணேசன் எம். எல். ஏ. மாதிரிக்குக் காண்பித்தார் மந்திரிகளிடம் என்பதையும் நினைவுறுத்துகிறேன். இதே இதழில் பல்சுவைப் பக்கத்தில் வெளியாகியுள்ள கேள்வி பதில் பற்றி: எஸ். எஸ். ராஜேந்திரன் வில்லனாக நடித்த படம் ராஜாமணி அல்ல. சிவாஜிகணேசன் நாயகனாக நடித்த ராஜா ராணி படத்தில் தான் எஸ். எஸ். ஆர். வில்லன்.

கும்பகோணம்
27—6—66 டி. எஸ். எஸ். ஆர்.

( ● அச்சுப்பிழை: வருந்துகிறோம். —ஆசிரியர்)

சமீபத்தில் தமிழக போலீஸ் அமைச்சர் திரு கக்கன் அவர்கள் காங்கிரஸ் தேர்தல் நிதி வசூலிப்பதற்காகத் திண்டுக்கல்லுக்கு விஜயம் செய்திருந்தார். அன்று மாலை சரியாக நான்கு மணிக்கெல்லாம் கடைத்தெரு முழுவதும் ஒரே போலீஸ் மயமாக இருந்தது. போலீஸ் படையுடன் அரசாங்க அதிகாரிகள் உடன்வரச் சில சிறிய, பெரிய காங்கிரஸ் பிரமுகர்கள் புடைசூழ, அமைச்சர் கக்கன் அவர்கள் கடைத்தெருவில் விஜயம் செய்து காங்கிரஸ் தேர்தல் நிதி வசூலித்தார். இதில் முக்கியமாகத் தமிழக அரசாங்க ஜீப்பும், ஜில்லா காங்கிரஸ் கமிட்டியின் ஜீப்பும் ஒன்றாகச் சேர்ந்து இணைந்து வேலை செய்ததும், அரசாங்க அதிகாரிகள் முழுமூச்சுடன் ஈடுபட்டதும் இங்குள்ள வியாபாரப் பெருமக்களை மிகவும் வியப்பிலாழ்த்தியது. அத்துடன் அரசாங்க அதிகாரிகளும் போலீஸ் படையும் சூழ அமைச்சர் கக்கன் அவர்கள் பக்கத்தில் இருக்கிறார் என்ற எக்களிப்பில் சில சிறிய காங்கிரஸ்காரர்கள் வியாபாரிகளிடம் அதிகாரத் தோரணையில் தேர்தல் நிதி வசூலித்த கொடுமையைக் கண்டு வியாபாரப் பெருமக்கள் மனம் வெதும்பி நின்றனர்.

இம்முறையில்தான் இனி வியாபாரிகளிடத்தில் தேர்தல் நிதி வசூலிக்க முடியும் என்கிற முடிவான எண்ணத்துக்கு இன்றைய காங்கிரஸ் வந்துவிட்டது என்பதற்கு மேற்கண்ட நிகழ்ச்சியே தகுந்த சாட்சியாகும்.

திண்டுக்கல்
27—6—66 டி. நித்தியானந்தம்

'மலேசியா மாநாடு' பற்றிய தொடர் கட்டுரைகள் தமிழக மக்களின் சிந்தனையைத் தூண்டி விடும்.

மலேசியாவில் உள்ள தொழிற் சங்க நிலை மிகவும் பாராட்டத்தக்க அம்சமாகும். தொழிலாளிகள் அரசியல் கட்சித் தலைவர்களைத் தலைமைக்காக நாடாமல் தாங்களாகவே தொழிற் சங்கங்களை நடத்துவது அருமையான ஏற்பாடு.

"உரிமையின் உண்மையான பிறப்பிடம் கடமை. நாம் எல்லோரும் நமது கடமைகள் அனைத்தையும் நிறைவேற்றினோமானால் உரிமைகளை நாடிச் செல்ல வேண்டிய தேவை இராது" என்றார் மகாத்மா காந்தி. கடமைகளையும் உரிமைகளையும் உணர்த்தி நம்மைச் செயல்பட வைக்கும் பொறுப்பை நாம் நமக்குள்ளேயே ஏற்படுத்திக் கொள்ளும் 'யூனியன்' ஏற்க வேண்டும்.

ஒரு குறிப்பிட்ட துறையினருக்காக அத்துறையினரால் அமைக்கப்படுகின்ற இந்தக் கூட்டமைப்பு அரசியல் தலைவர்களின் தலையீடின்றி அத்துறையினராலேயே நடத்திச் செல்லப்படுதல் சிறந்ததாகும்.

மயிலை
24—6—66 க.ரா. பார்த்தசாரதி

Edited printed & published by I. Sadasivam on behalf of Messrs Bharathan Publications Private Ltd., at the Kalki Press Kilpauk Madras-10

நல்ல
புகையிலே
என்றாலே
நல்ல
சிகரெட்




பனாமா
ஒரு
நல்ல
சிகரெட்

செழுமையிலும் மென்மை
யிலும் உன்னதமாகத்
தேர்ந்தெடுத்த
வர்ஜீனியாப்
புகையிலைகள்! பனாமா
சிகரெட்டிலே நிபுணத்து
வத்துடன் அவை
கலவைபெற்றுள்ள
பயன், பல்லாயிரம்
மக்களுக்குப்
பரவசமூட்டும்
தன்மையான
புகைசுகம்!

பாரதத்தில் இத்தகைய தேசீய ஸ்தாபனங்களில் மிகப் பெரியது




கோல்டன் டொபாக்கோ கம்
பிரைவேட் லிமிடெட்,
பம்பாய்-56

(P) 852-C Tam. Grease Advtg

REGISTERED NO. M.
Registered as a Newspaper in C